Tablecloth
Tischdecke
Tovaglia
Taffelaken
Mantel
Toalha
Estovalles
مفرش طاولة

design®
MAISONS DU MONDE

# UNIE

## Nappe 150 x

Tablecloth
Tischdecke
Tovaglia
Taffelaken
Mantel
Toalha
Estovalles
مفرش طاولة

குரு சிஷ்ய சம்பாஷணையாகிய

# சோதிட அரிச்சுவடி

## (நான்கு பாகம்)




இஃது

பாலக்காடு பிரம்மஸ்ரீ சர்வ...

நித்தியானந்த ஜோதிடர் அவர்களால்

இயற்றியதை

மதுரைமாநகரம்

கவிராஜ கந்தசாமிப்பிள்ளை அவர்களால்

பார்வையிடப்பட்டு,



பிரசுரித்தவர்கள்:

சொ. இரத்தின நாயகர் அண்ட் சன்ஸ்

நெ. 57, வெங்கட்ராமய்யர் தெரு,

சென்னை-1.

குரு :— கொள்ளும் விபர மெய்விளக்கம்

[ரூ. 4—00

உ

கடவுள் துணை

குரு சிஷ்ய சம்பாஷணையாகிய

# சோதிட அரிச்சுவடி

(முதற் பாகம்)

சுந்தரகணேசர் துணை

உலகினில் பிறந்தோருக்கு உற்றநற் சுகதுக்கங்கள்
நிலமிசை காண்பதற்கு நீடிய ஜோதிடத்தின் [லாம்
பலகலை ஆராய்ந்தோர்ந்து பலன்சொல்லும் விபரமெல்
கலவர மில்லாதோத கணபதி துணை செய்வாரே.

(இதன் பொருள்) பகவானால் சிருஷ்டிக்கப்பட்ட பூலோகத்தில் பிறந்த மனிதர்களின் வாழ்நாள் வரையிலும் அனுபவிக்கும் சுகதுக்கங்களை ஜோதிடத்தில் கணித்துப் பலன்களை விபரமாய்ச் சொல்லுவதற்கு கணேசமூர்த்தி துணை யிருப்பர்.

*சீஷன்* :—சுவாமி குருநாதரே! உலகத்தில் பிறந்த மனிதர்களின் சுகதுக்கத்தைக் கவனிப்பது எவ்விதம்?

குரு :—அவரவர்கள் பிறந்த இராசி லக்கினத்தைப் பார்த்தால், இன்னின்ன கிரகம் இன்னின்ன வீட்டிலிருந்தால், இன்னின்ன விதமாய் பலன் நடக்குமென்று சொன்னால், அனுபவத்தில் சரியா யிருக்கும்.

*சீஷன்* :—அதன் விபர மெவ்விதம்?

குரு :—முதலாவது இலக்கினம், நிச்சயப்படுத்திக் கொள்ளும் விபரத்தை கவனிக்க வேண்டும். இதன் விபர மெவ்வித மெனில் :

<table>
<tr><td>பங்குனி<br>மீனம்<br>4½</td><td>சித்திரை<br>மேஷம்<br>4¼</td><td>வைகாசி<br>ரிஷபம்<br>4¾</td><td>ஆனி<br>மிதுனம்<br>5¼</td></tr>
<tr><td>மாசி<br>கும்பம்<br>4¾</td><td colspan="2" rowspan="2">அவ்விதமாய் இரவுபகல்<br>இங்கிலீஷ்<br>24-மணி நேரத்தில்<br>60—நாழிகைக்கும்<br>12-இலக்கினம் நடக்கும்</td><td>ஆடி<br>கடகம்<br>5½</td></tr>
<tr><td>தை<br>மகரம்<br>5¼</td><td>ஆவணி<br>சிம்மம்<br>5¼</td></tr>
<tr><td>மார்கழி<br>தனுசு<br>5½</td><td>கார்த்திகை<br>விருச்சிகம்<br>5¼</td><td>ஐப்பசி<br>துலாம்<br>5</td><td>புரட்டாசி<br>கன்னி<br>5</td></tr>
</table>

*சீஷன்* :—இதன் விபர மெவ்விதம்?

குரு :—சித்திரை மாதத்தின் முதல் தேதியில் பகல் 8-மணிக்கு குழந்தை பிறந்தால், அதற்கு ஜனன லக்கின விபர மெவ்விதமெனில் அன்றைய தினத்தின் இங்கிலீஷ் 10-மணியின் கணக்கைப்போல காலை 6-மணியிலிருந்து பகல் 8-மணிக்கு தமிழ் கணக்கின் சூரிய உதயாதி 22½-நாழிகையாகும். அந்த சமயத்தில் நடக்கும் இலக்கின மென்னவெனில், மேற் குறிப்பித்த சக்கரத்திற் காட்டிய விதமே கவனிக்கும் விபரம் எவ்விதமெனில்:

| | |
|---|---|
| மேஷம் | 4¼ |
| ரிஷபம் | 4¾ |
| மிதுனம் | 5¼ |
| கடகம் | 5½ |
| சிம்மம் | 5¼ |

| | | | |
|---|---|---|---|
| சுக் | சூரி புத | செ | |
| | | | ராகு |
| கே | | | லக் |
| குரு | சந் | சனி | |

ஆக மொத்தம் 25-நாழிகை சிம்மலக்கினம் உதயமாகி 2½-நாழிகை இருப்பு

இவ்விதமாக அன்றைய தினத்தின் லக்கினத்தை யனுசரித்து அச்சமயம் அந்தந்த வீட்டிலிருக்கும் கிரகங்களின் பலன்களைச் சொல்ல வேண்டும்.

*சீஷன்* :—குருநாதரே! தாங்கள் சொன்ன இலக்கின முதல் மற்ற வீட்டில் கிரகமிருந்தால் அந்த ஸ்தானத்திற்கு எந்தெந்த லக்கினமென்று சொல்லுவது?

குரு :—பிறந்த நாழிகையில் அமைவதுதான் ஜனன லக்கினம்; மற்றவை கவனிப்ப தெவ்விதமெனில்:

லக்கினம்—உயிர் லக்கினம்

2-வது:—குடும்பஸ்தானம், வாக்குஸ்தானம்.

3-வது:—சகோதரஸ்தானம், தீரஸ்தானம்.

4-வது:—மாதுருஸ்தானம், சுகஸ்தானம்.

5-வது:—புத்திரஸ்தானம்.

6-வது:—சத்துருஸ்தானம்.

7-வது:—களத்திரஸ்தானம்.

8-வது:—ஆயுள்ஸ்தானம்.

9-வது:—பிதுர்ஸ்தானம், பாக்கியஸ்தானம்.

10-வது:—ஜீவனஸ்தானம்.

11-வது:—மூத்த சகோதரஸ்தானம், இலாப ஸ்தானம்.

12-வது:—சயனஸ்தானம், விரயஸ்தானம்.

இவ்விதமாய்ச் சொல்லவேண்டியது. இந்த ஸ்தானங்களில் கிரகங்களிருந்தால் அவரவர்கட்கிசைந்த நட்பாக்ஷி யுச்சம் பகை நீசமெனும் பதத்திற்குரிய விதமே சுபாசுப பலனைத் தருவார்கள்.

சீஷன் :—சுவாமி! கிரகங்களின் நட்பாக்ஷி உச்சம் பகை நீசமென்பதை பிறகு கவனிக்கிறேன். ராசிகளின் சரராசி, ஸ்திரராசி, உபயராசி யென்பதை அனுக்கிரகம் செய்ய வேண்டும் சுவாமி.

| மீனம் உபயராசி | மேஷம் சரராசி | ரிஷபம் ஸ்திரராசி | மிதுனம் உபயராசி |
|---|---|---|---|
| கும்பம் ஸ்திரராசி | இவ்விதமான இராசி வீட்டிலிருக்கும் கிரக நிலையைக் கண்டு பலன் சொல்லவும் | | கடகம் சரராசி |
| மகரம் சரராசி | | | சிங்கம் ஸ்திரராசி |
| தனுசு உபயராசி | விருச்சிகம் ஸ்திரராசி | துலாம் சரராசி | கன்னி உபயராசி |

குரு :—சரி; அவ்விபரம் சொல்லுகிறேன் கவனிப்பாய்.

சீஷன் :—சுவாமி! தமது அனுக்கிரகத்தின்படியே நவக்கிரகங்களிருக்கும் 12-இராசிகளில், சரம், ஸ்திரம், உபயமென்பதைக் கவனித்துக்கொண்டேன். ஆனல்; இராசி யென்பது என்ன ?

குரு :—சந்திரனிருக்கும் ஸ்தானமே ராசியாகும்.

| | | | |
|---|---|---|---|
| பூரட்டாதி $\frac{1}{4}$<br>உத்ரட்டாதி 1<br>ரேவதி 1<br>மீனராசி | அசுவனி 1<br>பரணி 1<br>கிருத்திகை $\frac{1}{4}$<br>மேஷராசி | கிருத்திகை $\frac{3}{4}$<br>ரோகணி 1<br>மிருகசீரிட $\frac{1}{2}$<br>ரிஷபராசி | மிருகசீரிட $\frac{1}{2}$<br>திருவாதிரை 1<br>புனர்பூசம் $\frac{3}{4}$<br>மிதுனராசி |
| அவிட்டம் $\frac{1}{2}$<br>சதயம் 1<br>பூரட்டாதி $\frac{3}{4}$<br>கும்பராசி | இவ்விதமாய் அந்தந்த தினத்தில் பஞ்சாங்கத்தில் தோற்றும் நக்ஷத்திரங்களில் சந்திரன் சஞ்சரிப்பதே ராசியாகும். ஆனல் ஒவ்வொரு ராசியினும் $2\frac{1}{4}$—நாள் வரையிலும் சந்திரன் நிற்பதால் அதை நாமே கவனித்து ஜாதகம் எழுதும் போது போட்டுக் கொள்ளவேண்டியது. | | புனர்பூசம் $\frac{1}{4}$<br>பூசம் 1<br>ஆயிலியம் 1<br>கடகராசி |
| உத்ராடம் $\frac{3}{4}$<br>திருவோணம் 1<br>அவிட்டம் $\frac{1}{2}$<br>மகரராசி | | | மகம் 1<br>பூரம் 1<br>உத்திரம் $\frac{1}{4}$<br>சிங்கராசி |
| மூலம் 1<br>பூராடம் 1<br>உத்திராடம் $\frac{1}{4}$<br>தனுசுராசி | விசாகம் $\frac{1}{4}$<br>அனுஷம் 1<br>கேட்டை 1<br>விருச்சிக ராசி | சித்திரை $\frac{1}{2}$<br>சுவாதி 1<br>விசாகம் $\frac{3}{4}$<br>துலாராசி | உத்திரம் $\frac{3}{4}$<br>அஸ்தம் 1<br>சித்திரை $\frac{1}{2}$<br>கன்னியாராசி |

சீஷன் :—அதன் விபரத்தையும் திருவருள்புரிவீர் சுவாமி.

குரு :—சரி! அவ்விதமே உபதேசிக்கின்றேன் கவனிப்பாய்! குழந்தை பிறந்தநாளின் கிழமையில் எந்த நக்ஷத்திர மிருக்கின்றதோ அந்த நக்ஷத்திரத்தில் சந்திர னிருப்பதுதான் இராசியாகும்.

சீஷன் :—இவ்விசேஷத்தை விபரமாய்ப் புகல்வீர் குருநாதா.

குரு :—அடியிற் குறிப்பிக்கும் சக்கரத்தைப் பார்.

சீஷன் :—ஒவ்வொரு வீட்டிலும் கிரகங்கள் சஞ்சரிக் கும் காலத்தின் விபர மெப்படி?

குரு :—எனது அன்பான சிஷ்யனே இந்த பனி ரெண்டு ராசியிலும், 9-கிரகங்களும் இருக்கும் கால நிர்ண யத்தைச் சொல்லுகிறேன் கவனிப்பாய். அதெவ்வித மென்றால்: மேஷம், ரிஷபம், மிதுனம், கடகம், சிங்கம், கன்னி, துலாம், விருச்சிகம், தனுசு, மகரம், கும்பம், மீனம் என்னும் 12-ராசியிலும் கிரகங்கள் இருக்கும் கால நிர்ணயம் எவ்விதமெனில்:—

ஒவ்வொரு இராசியிலும் கிரகங்கள் நிற்கும்காலம்

| | |
|---|---|
| சூரியன் 1-மாதம் | சுக்கிரன் 1-மாதம் |
| சந்திரன் 2½-நாள் | சனி 2½-வருஷம் |
| செவ்வாய் 1½-மாதம் | இராகு 1½-வருஷம் |
| புதன் 1-மாதம் | கேது 1½-வருஷம் |
| குரு 1-வருஷம் | இவ்விதமாய் சஞ்சரிப்பார்கள் |

சீஷன்:—சுவாமி! கவனித்துக்கொண்டேன், ஆனால், நவக்கிரகங்களின் பார்வை ஸ்தானத்தின் விபரத்தைச் சொல்வீரென்று கோருகிறேன்.

குரு :—சிஷ்யா, சூரியனுக்கு 3-7-ம், சந்திரனுக்கு 7-ம், செவ்வாய்க்கு 4-7-8-ம், புதனுக்கு 7-ம் குருவுக்கு 5-7-9-ம், சுக்கிரனுக்கு 7-ம், சனிக்கு 3-7-10-ம், இராகுவுக்கு 3-7-12-ம் கேதுவுக்கு 3-7-12-ம் பார்வை ஸ்தானமாகும். இவர்களில் குரு, புதன், சுக்கிரன், வளர்பிறைச் சந்திரன் பார்வையினால் சுபமாகும் மற்றவர்கள் பார்வையினால் அசுபமாகும்.

சீஷன் :—சுவாமி! பிள்ளை பிறந்தால் அதற்கு நாமகரணம் சூட்டுதல் பெயரிடும்படியானவை எவ்விதம்?

குரு :—அடியில் குறிப்பித்த விதமாக எழுத்துக்களில் முதலெழுத்தைக்கொண்டு பெயரிடுவது, முன் சொன்னபடியே குழந்தை பிறந்ததினத்தின் வேளையில் எந்தெந்த நக்ஷத்திரபாகம் வருகிறதோ அந்தப் பாகத்தின் முதலெழுத்தையே குறிப்பித்து பெயரிட்டால் அந்தந்த இராசியைக் குறிப்பிக்கும். எப்படியெனில் :—அந்தக் குழந்தை பிறந்த வேளையில் அஸ்த நக்ஷத்திரம் முதற்பாதமானால் பு-என்னும் அக்ஷரம் வரும். அச்சமயம் ஆண் குழந்தையானால், புருஷோத்தமன் என்றும், பெண் குழந்தையானால், புனிதவதி யென்றும் பெயரிட வேண்டும். அப்போது அஸ்த நக்ஷத்திரத்தில் சந்திரன் சஞ்சரிப்பதால், கன்னியாராசியாகும். அதனை மேற்குறிப்பித்த பெயருடையவர்களின் ஜன்ம ராசியாகக் கொண்டு பன்னிரண்டு ராசியிலிருக்கும் கிரகங்களால் நடக்கும் பலன்களைச் சொன்னால் அனுபவத்தில் சரியாயிருக்கும். அதன் விவரம் எவ்விதமெனில் :

## நாமநக்ஷத்திர எழுத்துக்களின் விபரம்

| நக்ஷத்திரங்கள் | 1 | 2 | 3 | 4 |
|---|---|---|---|---|
| அசுவனி | சு | சே | சோ | லா |
| பரணி | லி | லூ | லெ | லோ |
| கார்த்திகை | அ | இ | உ | எ |
| ரோகணி | ஒ | வ | வி | வு |
| மிருகசீரிடம் | வே | வோ | கா | கி |
| திருவாதிரை | கு | க்க | ங | ச |
| புனர்பூசம் | கே | கோ | ஹ | ஹி |
| பூசம் | ஹூ | ஹே | ஹோ | ட |
| ஆயில்யம் | டி | டு | டே | டோ |
| மகம் | ம | மி | மு | மே |
| பூரம் | மோ | டா | டி | டு |
| உத்திரம் | டே | டோ | பா | பி |
| அஸ்தம் | பூ | ஷ | ண | ட்ட |
| சித்திரை | பே | போ | ரா | ரி |
| சுவாதி | ரு | ரே | ரோ | த |
| விசாகம் | தி | து | தே | தொ |
| அனுஷம் | நா | நீ | நு | நே |
| கேட்டை | நொ | ய | யி | யூ |
| மூலம் | யே | யோ | ப்பா | ப்பி |
| பூராடம் | ப்பூ | தா | ப | ட |
| உத்திராடம் | பே | போ | ஜ | ஜி |
| திருவோணம் | ஜூ | ஜே | ஜோ | க |
| அவிட்டம் | க | கி | கு | கே |
| சதையம் | கோ | ஸ | ஸி | ஸூ |
| பூரட்டாதி | ஸே | ஸோ | த | தி |
| உத்திரட்டாதி | து | ஷ | ஞா | த |
| ரேவதி | தெ | தொ | ச | சி |

இவ்விதமாய் அந்தந்த நாளில் பிறந்தால் அந்தந்த நாளில் நடக்கும் நக்ஷத்திரங்களில் எத்தனை நாழிகையில் குழந்தை பிறந்தாலும், அந்தந்த நக்ஷத்திரங்களின் பாதசாரத்தின்படியே வந்த எழுத்தை முதலெழுத்தா யமைத்துப் பெயரிட்டால் அதில் ஜன்ம ராசியாக சந்திரனிருந்த ஸ்தானத்தைக் குறிக்கும். இதைப் பார்த்துத்தான் இராசி பலனைச் சொன்னால் அனுபவத்தில் சரியாயிருக்கும்.

## நவக்கிரகங்களின் ஆட்சிவீடு அறியும் விபரம்

### விருத்தம்

மேஷந்தேள் குஜனுக்காட்சிமிதுனம் பெண்புதனுக் [காட்சி
தேசுலா நண்டிற்சந்த்ரன் தினகரன்சிம்பத்தாட்சி
மாசிலாதனுசும்மீனம் மறையவர்க்காட்சியாகும்
பேசியரிஷபங்கோனும் புகர்தனக்காட்சியாமே.

(இ-ள்.) சூரியபகவானுக்கு சிம்மராசி ஆக்ஷியாகும். சந்திர பகவானுக்கு கடகராசி ஆக்ஷியாகும். செவ்வாய் பகவானுக்கு மேஷ ராசியும், விருச்சிக ராசியும் ஆட்சி வீடாகும். புத பகவானுக்கு மிதுன ராசியும் கன்னியா ராசியும் ஆட்சியாகும். குரு பகவானுக்கு தனுசு ராசியும், மீனராசியும் ஆட்சியாகும். சுக்கிர பகவானுக்கு ரிஷப ராசியும், துலாராசியும் ஆட்சியாகும்.

### விருத்தம்

தின்மைசேர் சனீஸ்வரர்க்கு நவில்கும்பம் மகரம்ஆட்சி
அன்புசேர் ராகுகேதுக் காட்சிவீ டில்லாதாலே
இன்பமாயெந்தவீட்டில் இருப்பினும் அதுவேஆட்சி
பன்மையா யுந்தனுக்கு வழுத்தினேன் மனதில் [வையே.

(இ-ள்.) சனி பகவானுக்கு மகரராசியும் கும்ப ரா
யும் ஆட்சிவீடாகும். ஆனால் சப்த கிரகங்களுக்கும் பல
ரெண்டு இராசி வீடுகளும் சொந்தமாய் விட்டதாலும் அ
பால் வந்த இராகு கேதுகளுக்கு இராசி வீடு காலி யி
லாதபடியால் அவ்விருவரும் அவர்களின் அதிகார
செலுத்துவதற்கு வருகிற வீடுகள் ஒவ்வொன்றும் அவர்
இருவருக்கும் அவர்களுக்குரிய சொந்த வீடாய் மதித்
அந்த வீட்டிற்குடைய இராசிநாதன் கொடுக்கும் ப
னையே அவர்கள் கொடுப்பார்களாம்.

சீஷன் :—சுவாமி! தாங்கள் தெரிவித்த விதமே அ
தந்த கிரகங்கள் தமது ஆட்சி வீட்டிலிருந்தால் எவ்வெவ
விதமாகிய பலனைத் தருவார்கள்.

குரு :—எனது அன்புள்ள சிஷ்யா! உன் மனம்போ
லவே சொல்லுகிறேன் கவனிப்பாய்.

விருத்தம்

ஆட்சிவீட்டில்நின்றாலும் அந்தந்தகிரகமெல்லாம்
மாட்சியாய்சுபாசுபங்கள் மனிதரையடையச்செய்வார்
சூட்சியாயுந்தனுக்கு சொல்லியவிபரமெல்லாம்
யாட்சியாய் மனதில்வைத்து கவனித்துக்கொள்ளு
[வாயே

(இ-ள்.) கிரகங்கள் தமது சொந்த வீட்டிலிருந்தாலு
தாம் நின்ற ஸ்தான பலனையே தருவார்கள். இந்த மர்
இரகசியத்தைக் கவனியாமல் கிரகங்கள் தமது சொந்
வீட்டில் வந்து ஆட்சி பெற்றிருப்பதால் தமக்கு நல்
பலன் கிடைக்குமென்று மனிதர்கள் சொல்லிக் கொள்
தினுல் பிரயோசனமில்லை. அவரவர்கள் இராசி பல
யனுசரித்துதான் பலனைத் தருவார்கள். இந்த இரகசிய
தைத்தான் தெரிந்துகொள்ள வேண்டும்.

## வருஷங்கள் - 60

| | | |
|---|---|---|
| பிரபவ | சர்வசித்து | பிலவங்க |
| விபவ | சர்வதாரி | கீலக |
| சுக்கில | விரோதி | சௌமிய |
| பிரமோதூத | விக்ருதி | சாதாரண |
| பிரஜோற்பத்தி | கர | விரோதிகிருது |
| ஆங்கிரச | நந்தன | பரிதாபி |
| ஸ்ரீமுக | விஜய | பிரமாதீச |
| பவ | ஜய | ஆனந்த |
| யுவ | மன்மத | ராக்ஷச |
| தாது | துன்முகி | நள |
| ஈஸ்வர | ஹேவிளம்பி | பிங்கள |
| வெகுதானிய | விளம்பி | காளயுக்தி |
| பிரமாதி | விகாரி | சித்தார்த்திரி |
| விக்கிரம | சார்வரி | ரௌத்ரி |
| விஷு | பிலவ | துன்மதி |
| சித்திரபானு | சுபகிருது | துந்துபி |
| சுபானு | சோபகிருது | ருத்திரோத்காரி |
| தாரண | குரோதி | இரத்தாக்ஷி |
| பார்த்திப | விசுவாவசு | குரோதன |
| விய | பராபவ | அக்ஷய |

ஆக வருடம் 60

## மாதங்கள், கிழமைகள், திதிகள்

| மாதங்கள்-12 | கிழமைகள்-7 | திதிகள்-15 |
|---|---|---|
| சித்திரை | ஞாயிறு | பிரதமை |
| | | துதியை |
| வைகாசி | திங்கள் | திரிதியை |
| | | சதுர்த்தி |
| ஆனி | செவ்வாய் | பஞ்சமி |
| | | சஷ்டி |
| ஆடி | புதன் | சப்தமி |
| | | அஷ்டமி |
| ஆவணி | வியாழன் | நவமி |
| | | தசமி |
| புரட்டாசி | வெள்ளி | ஏகாதசி |
| | | துவாதசி |
| ஐப்பசி | சனி | திரயோதசி |
| | | சதுர்த்தசி |
| கார்த்திகை | | அமாவாசை |
| | | [தேய்பி |
| மார்கழி | | பௌர்ணமி |
| | | [வளர்பி |
| தை | | ஆக 1 |
| மாசி | | |
| பங்குனி | | |
| ஆக 12. | ஆக 7. | |

இவ்விதமே 15—நாளுக்கு வரும் திதிகள் தே
பிறையாகிய கடைசி திதியாகிய அமாவாசை
குப் பிறகு வருகிற திதிகள் வளர்பிறையாகு

அதன் கடைசியில் வருகிற திதிகள் தேய்பிறையா மென்றறிவாய்.

### விருத்தம்

அன்புட னுலகோரெல்லாம் ஆனதோர் சுக்ல பக்ஷ, நன்மையாம் தினத்தில் வாய்ந்த நக்ஷத்ர சுப யோகத்தில், பன்னும் வர்த்தகம் உத்தியோகம் பக்ஷமாய்ச்செய்வாரானுல், இன்பமும் சுகமும் பாக்கிய இலாபமும் பெறுவார்தானே.

*சீஷன்:*—குருஸ்வாமி! தாங்கள் அடியேனுக்கு இவ்வளவு அன்பு கூர்ந்து தெரிவித்தவைகளை முழுதும் கவனித் துணர்ந்தேன். ஆனுல், நவக்கிரக காரகாதிபதிகளின் விபரம் சொல்வீர்.

குரு:—சரி சொல்லுகிறேன் கவனிப்பாய்.

### நவக்கிரக காரகாதிபதிகள்

சூரியன்-பிதுர்காரகன்

சந்திரன்-மாதுர்க்காரகன்

செவ்வாய்-சகோதரகாரகன்

புதன்—வித்யாகாரகன்

வியாழன்-புத்ரகாரகன்

சுக்கிரன்-களத்திரகாரகன்

சனி-ஆயுள்காரகன்

இராகு } பிதாமாதுர்காரகன்
கேது }

## நக்ஷத்திரங்கள், யோகம் - கரணங்கள்

| நக்ஷத்திரங்கள்-27 | யோகங்கள்-27 | கரணங்கள்-11 |
|---|---|---|
| அஸ்வனி | விஷ்கம்பம் | பவம் |
| பரணி | பிரீதி | |
| கிருத்திகை | ஆயுஷ்மான் | பாலவம் |
| ரோகணி | சௌபாக்கியம் | |
| மிருகசீரிடம் | சோபனம் | கௌலவம் |
| திருவாதிரை | அதிகண்டம் | |
| புனர்பூசம் | சுகர்மம் | கரசை |
| பூசம் | திருதி | |
| ஆயில்யம் | சூலம் | வணசை |
| மகம் | கண்டம் | |
| பூரம் | விருத்தி | சகுனி |
| உத்திரம் | துருவம் | |
| அஸ்தம் | வியாகதம் | பத்திரை |
| சித்திரை | ஹர்ஷணம் | |
| சுவாதி | வச்சிரம் | சதுஷ்பர்தம் |
| விசாகம் | சித்தி | |
| அனுஷம் | விதிபாதம் | நாகவம் |
| கேட்டை | வரியான் | |
| மூலம் | பரிகம் | கிமஷ்துக்கினம் |
| பூராடம் | சிவம் | |
| உத்திராடம் | சித்தம் | ஆக 11. |
| திருவோணம் | சாத்தியம் | |
| அவிட்டம் | சுபம் | |
| சதயம் | சுப்பிரம் | |
| பூரட்டாதி | பிரமம் | |
| உத்திரட்டாதி | மாகேந்திரம் | |
| ரேவதி | வைதிருதி | |
| ஆக 27. | ஆக 27. | |

கேது { மோக்ஷகாரகன்
மாதாமாதுர்க்காரகன்
ஞானகாரகன் }

இவ்விதமாய் கவனித்துக்கொண்டு அவரவர்கள் ஜாதக லக்ஷணத்தின்படியே பலாபலன்களைக் கவனித்துக்கொள்ள வேண்டும்.

சீஷன் :—சுவாமி! ஒவ்வொரு தினத்திலும் அமிர்த யோகம் சித்தயோகம் கவனிப்ப தெவ்விதம்?

குரு :—ஒவ்வொரு தினத்திலும் வரும் கிழமையில் வருகிற நக்ஷத்திரங்களின்படியே அமிர்தாதி சித்தயோக தினங்கள் அமையும். அந்த சுபதினங்களில்தான் எவ்வித மான சுபகாரியங்களையும் செய்யவேண்டும். ஆனால், மரணயோகம் வரும்படியான தினங்களில் சுபகாரியங் களை ஆரம்பஞ் செய்யலாகாது.

சீஷன் :—அதை அடியேனுக்கு விபரமாய்ச் சொல்லு வீர் சுவாமி!

குரு :—சொல்லுகிறேன் கவனிப்பாய்.

## அமிர்தயோகம், சித்தயோகம் மரணயோகம்

| நட்சத்திரம். | ஞா. | திங். | செ. | புத. | வி. | வெ. | சனி. |
|---|---|---|---|---|---|---|---|
| அசுவினி | சித்த | சித்த | சித்த | மர | அமி | அமி | சித்த |
| பரணி | பிர | சித்த | சித்த | சித்த | சித்த | சித்த | சித்த |
| கிருத்திகை | சித்த | மர | சித்த | அமி | மர | சித்த | அமி |
| ரோகணி | சித்த | அமி | அமி | சித்த | மர | மர | சித்த |
| மிருகசீரிட | சித்த | சித்த | சித்த | சித்த | மர | சித்த | சித்த |
| திருவாதி | சித்த | சித்த | மர | சித்த | மர | சித்த | சித்த |
| புனர்பூசம் | சித்த | அமி | சித்த | சித்த | அமி | சித்த | சித்த |
| பூசம் | சித்த | சித்த | சித்த | சித்த | சித்த | மர | சித்த |
| ஆயிலியம் | சித்த | சித்த | சித்த | சித்த | சித்த | மர | மர |
| மகம் | மர | மர | சித்த | சித்த | அமி | மர | அமி |
| பூரம் | சித்த | சித்த | சித்த | அமி | சித்த | சித்த | சித்த |
| உத்திரம் | அமி | சித்த | அமி | அமி | மர | சித்த | மர |
| அஸ்தம் | சித்த | சித்த | சித்த | மர | சித்த | அமி | மர |
| சித்திரை | சித்த | பிர | சித்த | சித்த | சித்த | சித்த | மர |
| சுவாதி | சித்த | அமி | சித்த | சித்த | அமி | சித்த | சித்த |
| விசாகம் | மர | மர | மர | சித்த | சித்த | சித்த | சித்த |
| அனுஷம் | மர | சித்த | சித்த | சித்த | சித்த | சித்த | சித்த |
| கேட்டை | மர | சித்த | மர | சித்த | பிர | மர | சித்த |
| மூலம் | அமி | சித்த | அமி | மர | சித்த | அமி | சித்த |
| பூராடம் | சித்த | மர | சித்த | அமி | சித்த | பிர | சித்த |
| உத்திராடம் | அமி | மர | பிர | அமி | சித்த | சித்த | சித்த |
| திருவோண | அமி | அமி | சித்த | சித்த | சித்த | மர | சித்த |
| அவிட்டம் | மர | சித்த | சித்த | பிர | சித்த | சித்த | சித்த |
| சதயம் | சித்த | சித்த | மர | சித்த | மர | சித்த | அமி |
| பூரட்டாதி | சித்த | சித்த | மர | அமி | சித்த | சித்த | மர |
| உத்ரட்டாதி | அமி | சித்த | அமி | சித்த | சித்த | சித்த | சித்த |
| ரேவதி | அமி | சித்த | சித்த | மர | சித்த | சித்த | பிர |

அமி - அமிர்தயோகம். சித்த - சித்தயோகம்.
மர - மரணயோகம். பிர - பிரபலாரிஷ்டம்.

இவ்விதமாக மேற்குறிப்பித்த தினங்களில் வரும் நக்ஷத்திரங்களின்படியே வருகிற அமிர்தயோகத்தில் எந்தக் காரியத்தையும் செய்யலாம். மரண யோகமா யிருக்கும் நாளில் எந்தக் காரியத்தையும் செய்யலாகாது.

## சீஷன் சொல்வது

### விருத்தம்

ஆசிரியாவென்குருவே நாளில்தோன்றும்
 அசுபதினம்சுபதினத்தின் விபரந்தனை
வீசுபுகழென்குருவே அடியேனுக்கு
 விபரமாய்ப்புகல்வீரென் றுமதுபாதம்
மாசிலாமனத்துடனே தியானஞ்செய்து
 மதிசிதருமுமதுசொல் கவனிக்கின்றேன்
பாசமுடனெந்தனுக்கு உபதேசிப்பீர்
 பாரெங்கும் முன்னோர்கள் புகழும்நாதா.

*சீஷன்* :—சுவாமி! ஒவ்வொரு நாளிலும் சுபவேளை அசுபவேளை யென்னும் விதத்தை இன்னின்னதென்று அடியேனுக்கு உபதேசித்தருள வேண்டும்.

குரு :—என தன்பிற்கிசைந்த பிரியமான சிஷ்யனே! நீ விருப்பத்துடன் கேட்கும் விஷயங்களை எல்லாம் சுருக்க மாய்ச் சொல்லுகிறேன் கவனிப்பாய்.

| வாரங்கள் | இராகு காலம் | | குளிகை காலம் | | எமகண்ட காலம் | | அர்த்தப் பிரகணன் | | காலன் | | இரவு எம கண்டன் | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| வேளை | மணி முதல் | மணி வரை | மணி முதல் | மணி வரை | மணி முதல் | மணி வரை | மணி முதல் | மணி வரை | மணி முதல் | மணி வரை | மணி முதல் | மணி வரை |
| ஞாயிறு | $4\frac{1}{2}$ | 6 | 3 | $4\frac{1}{2}$ | 12 | $1\frac{1}{2}$ | $10\frac{1}{2}$ | 12 | 6 | $7\frac{1}{2}$ | 6 | $7\frac{1}{2}$ |
| திங்கள் | $7\frac{1}{2}$ | 9 | $1\frac{1}{2}$ | 3 | $10\frac{1}{2}$ | 12 | 9 | $10\frac{1}{2}$ | 3 | $4\frac{1}{2}$ | 3 | $4\frac{1}{2}$ |
| செவ்வாய் | 3 | $4\frac{1}{2}$ | 12 | $1\frac{1}{2}$ | 9 | $10\frac{1}{2}$ | $7\frac{1}{2}$ | 9 | $1\frac{1}{2}$ | 3 | $1\frac{1}{2}$ | 3 |
| புதன் | 12 | $1\frac{1}{2}$ | $10\frac{1}{2}$ | 12 | $7\frac{1}{2}$ | 9 | 6 | $7\frac{1}{2}$ | 12 | $1\frac{1}{2}$ | 12 | $1\frac{1}{2}$ |
| வியாழன் | $1\frac{1}{2}$ | 3 | 9 | $10\frac{1}{2}$ | 6 | $7\frac{1}{2}$ | 3 | $4\frac{1}{2}$ | $10\frac{1}{2}$ | 12 | $10\frac{1}{2}$ | 12 |
| வெள்ளி | $10\frac{1}{2}$ | 12 | $7\frac{1}{2}$ | 9 | 3 | $4\frac{1}{2}$ | $1\frac{1}{2}$ | 3 | 9 | $10\frac{1}{2}$ | 9 | $10\frac{1}{2}$ |
| சனி | 9 | $10\frac{1}{2}$ | 6 | $7\frac{1}{2}$ | $1\frac{1}{2}$ | 3 | 12 | $1\frac{1}{2}$ | $7\frac{1}{2}$ | 9 | $7\frac{1}{2}$ | 9 |

## சீஷன் சொல்வது

### விருத்தம்

எந்தனுக்கு நன்மனதாய் ஜோதிஷத்தை
எளிதாகத் தாரணியில் உபதேசித்த
சுந்தரஞ்சேர் குணமமைந்த குருவேமாந்தர்
சுற்றத்தா ருடன்விருந்து புசிக்கும்நாளில்
பந்தமுடன் யாத்திரைகள் சுபாசுபங்கள்
பக்ஷ மூறும் ஸ்நானநாள் விவரமெல்லாம்
அந்தமுட னெந்தனுக்கு உபதேசிப்பீர்
ஆசிரிய நின்பாதம் நம்பினேனே.

(இ-ள்.) சுவாமி தாங்கள் அடியேனுக்குத் தெரிவித்த காலாகாலத்தை கவனித்துக்கொண்டேன். ஆனால், வழிப் பிரயாணஞ் செய்து வஸ்திரமுடுத்தல், விருந்துண்ணல் முதலானவைகளுக்கு எந்தெந்த நாள் உபயோகமாகும்.

குரு:—சொல்லுகிறேன் கவனிப்பாயாக

## ஆகாத நக்ஷத்திரங்கள்

### விருத்தம்

ஆதிரைபரணி கிருத்திகை
ஆயில்யமும்முப் பூரங்கேட்டை
தீதுறும் விசாகம்சோதி
சித்திரை மகமீராறும்
மாதனங் கொண்டார்தாரார்
வழிநடைப் பட்டார்மீளார்
பாய்தனிற் படுத்தோர்தேரார்
பாய்பின்வாய்த் தேரையாமே.

(இ-ள்.) இருபத்தேழு நக்ஷத்திரங்களில் திருவாதிரை, பரணி, கிருத்திகை, ஆயில்யம், பூரம், பூராடம்,

பூரட்டாதி, கேட்டை, விசாகம், சுவாதி, சித்திரை, மக இந்த 12-நக்ஷத்திரங்களில் கடன் வாங்கியவர் சமபத்திக் குக் கொடுக்க முடியாது. தேசசஞ்சாரம் செய்வதற்காக பிரயாணப்படுவர் மறுபடியும் திரும்புவதற்குப் பலவித மாகிய கஷ்டம் சம்பவிக்கும். வியாதியென்று பாய் தனி படுத்தவர் சரீர சௌக்கியம் பெற்று எழுந்து வருவதற்கு கஷ்டம்.

## கோடி வஸ்திர முடுத்தல்

### விருத்தம்

காரியிலழுக்கதாகும் கதிரவன்பீடையாகும்
மாரியில்நனையுந்திங்கள் வன் புதன்கந்தையாகும்
வீரியமில்லைசெவ்வாய் வெள்ளியில்மடந்தைசேர்வாள்
கூறியவியாழன் நன்ருய் குலவிய ஆடைசாத்தே.

(இ-ள்.) சனிக்கிழமை தினத்தில் புதிய வஸ்திர அணிந்தால் சீக்கிரமாய் அழுக்காகும். ஞாயிறில் துன்ப மேங்கும். திங்கட்கிழமை தினம் சதாகாலமும் ஜலத்தி நனைந்தவிதமா யிருக்கும். புதன்கிழமை தினத்தில் புதி வஸ்திர முடுத்தினல் சீக்கிரமாய்க் கிழியும். செவ்வாய் கிழமை தினத்தில் புதிய வஸ்திர முடுத்தினல் அந் வஸ்திரத்தை உடுத்தியிருக்கும் வரையில் ம[illegible]தைரி மில்லாமல் திகிலடைந்து சஞ்சலமா யிருப்பதற்காகு வெள்ளிக்கிழமை தினத்தில் புதிய வஸ்திர முடுத்தின இலட்சுமி கடாக்ஷமுண்டாகும். வியாழக்கிழமை தின தில் புதிய வஸ்திர முடுத்தினல் சகலவித நன்மை யுண் டாகும்.

## விருந்துண்ண

### வெண்பா

வெள்ளிசனி திங்கள் விருந்துண்ணப் புதனுமாம்
கள்ளவி யாழங் கசப்பிக்கும்—கொள்ளகதிர்

தீராப் பகைகாட்டும் செவ்வாய் தனக்குமே
வாராப் பகையும் வரும்.

(இ-ள்.) புதிதாய் ஒருவர் வீட்டில் விருந்து புசிப்பதா யிருந்தால். வெள்ளி-சனி-திங்கள்-புதன் இந்த நான்கு நாட்களில் உத்தமமாகும். வியாழக்கிழமை மன வெறுப் புண்டாகும். ஞாயிற்றுக்கிழமையானுல் தீராப் பகையுண் டாகும். செவ்வாய்க்கிழமையானுல் வராத பகையெல் லாம் வரும்.

## ஊர்ப்பிரயாணம் தேசசஞ்சாரம் போவதற்கு

### எண்சீரடி விருத்தம்

திங்களொடு சனியிரண்டுங் கிழக்கேயாகா
தெற்குமுகம் போகவென்ருல் வியாழமாகா
தங்குகின்ற விடமறிந்து மேற்கேபோக
தப்பியடா வெள்ளிரவி ஆகாதாகா
அங்கெனவே வடக்குமுகம் பிரயாணந்தான்
அப்பனே செவ்வாயும் புதனுமாகா
இங்கிவைகள் சிவனுர்கைச் சூலமாகும்
ஏற்கநாள் போகவென்ருல் சூக்ஷங்கேளே.

(இ-ள்.) ஊர்ப்பிரயாணம் தேசசஞ்சார யாத்திரை வாசியாய்ப் போக நினைப்பவர்கள் சனி திங்கட்கிழமை தினத்தில் கிழக்குபக்கம் போகலாகாது. வியாழக்கிழமை யில் தெற்கே போகலாகாது. வெள்ளிக்கிழமை தினமும், ஞாயிற்றுக்கிழமை தினமும் மேற்கே போகலாகாது. செவ்வாய்க்கிழமை தினமும் புதன்கிழமை தினமும் வடக்கே போகலாகாது ஏனெனில், அந்தக் கிழமையில் அந்தந்த இடத்தில் வாரசூலையா யிருக்கும்.

## வாரசூலை சக்கரம்




## அவசியமாய்ப் போகவேண்டுமானால்

வெண்பா

வடக்குதயம் சென்றதுகால் வாழ்கிழக் கோடுச்சி
அடுக்குநமன் திசைகோடந்தி—தொட கீழ்
நடுராவிற்சென்றுலே நாள்பார்க்க வேண்டாங்காண்
வடுவில்லா தென்றே மகிழ்.

(இ—ள்.) வாரசூலையா யிருக்கும் திசைமார்க்கமாய் போகக்கூடாதாகையால், அவசியமாய்ப் போகவேண்டியதா யிருந்தால், சூரியோதயத்தில் வடக்கிலும், சூரியன் உச்சியில் வரும் சரியான மத்தியானத்தில் கிழக்கிலும், சூரியன் அஸ்தமயமான சாயங்கால வேளையில் தெற்கிலும், நடுராத்திரியில் மேற்குமாகவும்போனால் யாதொரு பயங்கரமுமில்லை. அந்தந்த சமயங்களில் அந்தந்த ஸ்தானத்தில் வாரசூலை கிடையாது.

சிஷன் :—சுவாமி! எண்ணெயிட்டு தலை முழுகும் நாளின் பயனெவை.

## எண்ணெய் ஸ்நானத்திற்குரிய நாள்

### எண்சீர் விருத்தம்

அருக்கனெண்ணெய் அழகழிக்கும்
அணியாதிங்க ளாகாது
திருக்கருஞ்செவ்வா யுயிர்போக்கும்
செய்யபுதனிற் பொருளுண்டாம்
கருத்தை நயழிக்கும் கவின்வியாழம்
கைப்பொருள்போக்கும் கனவெள்ளி
பொருத்தமுண்டாம் சனியெண்ணெய்
பேணி முழுக வல்லவரே.

(இ-ள்.) எண்ணெய் ஸ்நானஞ் செய்வோர்களுக்கு ஞாயிற்றுக்கிழமையில் அழகுபோகும். திங்கட்கிழமையில் மனச்சஞ்சல மூண்டாகும். செவ்வாய்க்கிழமையில் சரீர அசௌக்கியமும் பயங்கரமுந் தோற்றும். புதன்கிழமையில் திரவிய லாபங் கிடைக்கும். வியாழக்கிழமையில் மனவிசார முண்டாகும். வெள்ளிக்கிழமையில் திரவிய நாசமாகும். சனிக்கிழமையில் சரீராரோக்கியமும் வல்லமையும் பொருந்தி யிருக்கும்.

### விருத்தம்

ஜெயாபஜெயம் காண்பதற்கு ராசிலக்னம்
திசாபுத்திகிரகங்கள் நோக்கங்கண்டு
நயமாகத்தரணியோர் புகழ்ந்துரைக்க
நடப்பதுதானுத்தமமென் றெண்ணவேண்டும்.

குரு :—எனது அன்பார்ந்த சிஷ்யா! நீ வினவியதும் சரியான கேள்விதான். யான் சொல்வதைக் கவனிப்பாய்.

## திசாநாதர்கள் பொருந்திய நக்ஷத்திரங்கள்

| நக்ஷத்திரங்கள் | |
|---|---|
| கிருத்திகை<br>உத்திரம்<br>உத்திராடம் | இம் மூன்றும் சூரியதிசை ௵-6. |
| ரோகணி<br>அஸ்தம்<br>திருவ்வாணம் | இம் மூன்றும் சந்திரதிசை ௵-10. |
| மிருகசீரிடம்<br>சித்திரை<br>அவிட்டம் | இம் மூன்றும் செவ்வாய்திசை ௵-7. |
| திருவாதிரை<br>சுவாதி<br>சதையம் | இம் மூன்றும் இராகுதிசை ௵-18. |
| புனர்பூசம்<br>விசாகம்<br>பூரட்டாதி | இம் மூன்றும் குருதிசை ௵-16. |
| பூசம்<br>அனுஷம்<br>உத்திரட்டாதி | இம் மூன்றும் சனிதிசை ௵-19. |
| ஆயிலியம்<br>கேட்டை<br>ரேவதி | இம் மூன்றும் புதன்திசை ௵-17. |
| அஸ்வனி<br>மகம்<br>மூலம் | இம் மூன்றும் கேதுதிசை ௵-7. |
| பரணி<br>பூரம்<br>பூராடம் | இம் மூன்றும் சுக்கிரதிசை ௵-20. |

ஆகமொத்தம் நக்ஷத்திரங்கள் 27-க்கும் நவக்கிரக திசா வருஷம் 120-ஆக பொருந்தும்.

சீஷன்:—சுவாமி! திசா நாதர்களின் வருஷாதிகளில் புத்திநாதர்களிருக்கும் சகல நிர்ணயத்தையும் அடியேனுக்கு விவரமாய்ச் சொல்வீர்.

## குரு சொல்வது

எண்சீரடி யாசிரிய விருத்தம்

அன்பானசிஷ்யாகே ளுந்தனுக்கு
அறிவிப்பேன் திசா புத்தி விவரந்தன்னை
உன்மனதிலிதைநிறுத்து கணிதமெல்லாம்
ஊக்கமுடன்கவனித்துப் பலனுரைப்பாய்
ஒன்பதுபேர்திசைகளிலும் புத்திநாதர்
ஒவ்வொருவராகவந்து மனிதருக்கு
நன்மைதுன்மைபலனனைத்துங் கொடுப்பதெல்லாம்
நலமுடனேசொல்லுகிறேன் கவனிப்பாயே.

(இ-ள்.) எனது அன்பார்ந்த சிஷ்யா! நவக்கிரகங்களின் திசைகளில் அந்த ஒன்பது கிரகங்களுமே ஒவ்வொருவராய் புத்திநாதர்களாக வந்து மனிதர்கட்குக் கால நிர்ணயத்தின்படியே சுபாசுப பலன்களைக் கொடுக்கும் விசேஷத்தைச் சொல்லுகிறேன் உனது மனதை ஓரிடத்திலேயே நிறுத்தி கவனமாய்க் கேட்பாய்.

## சூரியதிசை 6-வருஷத்திற்கும் புத்திநாதர்களிருக்கும் காலநிர்ணயமும் பலாபலன்களும்

### சூரியதிசையில் சூரியபுத்தி 3-மாதம் 18 நாள்

சூரியன் சுபக்கிரகங்கள் சேர்க்கை அல்லது பார்வையுமிருந்தால் சுபமங்களகரமாகவும், சவுக்கியமாகவு

யிருக்கும். ஆனால்; சனி-ராகு-கேது பார்வை பெற்றாலும், சம்பந்தமா யிருந்தாலும் பலவிதமான துக்கமும் கஷ்டமும் பிதுர்வர்க்கத்தில் சூதகமும் உண்டாகும்.

## சூரியதிசையில் சந்திரபுத்தி 6-மாதம்

சந்திரன் கேந்திர திரிகோண வாக்குஸ்தானங்களி லிருந்தால் வித்யாலாபம், குடும்பத்தில் சந்தோஷம், திரவியலாபம், பெரியோர்கள், பிரபுக்கள் சேர்க்கை, வெற்றியுண்டாகும். ஆனால் சந்திரன் 3, 6, 8, 12-மிடங்களிலிருந்தால் வறுமையும் கஷ்டமு முண்டாகும்.

## சூரியதிசையில் செவ்வாய்புத்தி 4-மாதம் 6-நாள்

செவ்வாய் கேந்திராதிபதியாய் சுபக்கிரகங்கள் பார்வை பெற்றாலும், சுபக்கிரகங்கள் சம்பந்தமானாலும் காணி, பூமி, வீடு வாங்குதல், திரவியலாபம், கீர்த்தியும் உண்டாகும். ஆனால், சனி, ராகு கேதுவுடன் சேர்ந்து செவ்வாய் கோண திரிகோண விரயஸ்தானத்திலிருந்தால் பலவிதமான நஷ்டமும், சஞ்சலமும், கலகமும், கவலையும், கஷ்டமும் உண்டாகும்.

## சூரியதிசையில் இராகுபுத்தி 10-மாதம் 24-நாள்

இராகுபகவான் கேந்திராதிபதியாய் மேஷம், ரிஷபம், கடகம், கன்னி, மகரராசியி லிருந்தால் திரவியலாபங் கிடைக்கும். விரயஸ்தானத்தி லிருந்தால் வறுமையும் துன்பமும் உண்டாகும்.

## சூரியதிசையில் குருபுத்தி
## 6-மாதம் 18-நாள்

குருபகவான் இலக்கினம், வாக்குஸ்தானம், கோண திரிகோண லாபஸ்தானத்திலிருந்தால், வித்தியாலாபம், புத்திரலாபம், வியாபார விர்த்தி, திரவியலாபம், பந்து கூட்டமும் உண்டாகும். ஆனால், குரு பகவான் 3, 6, 8, 12-ம் ஸ்தானத்திலிருந்து சனி, ராகு, கேது பார்வை பெற்றாலும், சம்பந்தமானாலும் பலவித கலகமும், வியாதியும், வறுமையும், கஷ்டமும், கவலையும் உண்டாகும்.

## சூரியதிசையில் சனிபுத்தி
## 11-மாதம் 12-நாள்

சனிபகவான் கேந்திராதிபதியாய், நட்பு, ஆக்ஷி, உச்ச ஸ்தானத்திலிருந்து சுபக்கிரகங்கள் பார்வை பெற்றிருந்தால் தீரமும், வல்லமையும், உத்தியோகவிர்த்தியும், திரவிய லாபமும் கிடைக்கும். ஆனால், சனிபகவான் பகை நீசஸ்தானத்தி லிருந்தால் பலவிதமான கஷ்டமும் கவலையும், வறுமையும் உண்டாகும்.

## சூரியதிசையில் புதன்புத்தி
## 10-மாதம் 6-நாள்

புதன் இலக்கின வாக்குஸ்தான திரிகோண ஸ்தானத்தி லிருந்தால் திரவியலாபம், வித்தியாலாபம், கீர்த்தியும் உண்டாகும். ஆனால், புதன் 3, 6, 8, 12-இராசியிலிருந்தால் துக்கமும், சோம்பலும், கஷ்டமும், கலகமும் வறுமையும் உண்டாகும்.

## சூரியதிசையில் கேதுபுத்தி
## 4-மாதம் 6-நாள்

கேதுபகவான் சுபக்ஷேத்திரத்திலிருந்து குரு சுக்கிரன் பார்வை பெற்றால் கல்வியும், ஞானமும், கீர்த்தியுமுண்டாகும். ஆனால், சூரியன் சனி, செவ்வாய் பார்வை பெற்றால் பலவிதமான கஷ்டமும், வறுமையும், கவலையும் நேரிட்டு தேச சஞ்சாரியாயலையச் செய்யும்.

## சூரியதிசையில் சுக்கிரபுத்தி 1-வருஷம்

சுக்கிரன் கேந்திர திரிகோண, இலக்கினம், வாக்குஸ்தானத்திலிருந்தால், கல்வியும், வித்தையும், புத்தியுமுண்டாகும். சுக்கிரன் 3, 6, 8, 12-ம் ஸ்தானத்திலிருந்து சனி, செவ்வாய், ராகு, கேது பார்வை பெற்றால் பலவிதமான வியாதியினால் மெலிந்து கஷ்டப்படுவார்கள்.

சீஷன்:—குருநாதா! தாங்கள் புகன்றவை யனைத்தும் கவனித்துக் கொண்டேன். ஆனால் சந்திர திசையில் வரும் ஒவ்வொரு புத்திநாதரின் பலன்களையும் அடியேனுக்குச் சொல்லுவீர் சுவாமி.

குரு:—அப்படியே சொல்லுகின்றேன் கவனிப்பாய்.

## சந்திரதிசையில் சந்திரன் புத்தி 10-மாதம்

சந்திரன் இலக்கினம் வாக்குஸ்தானம் கேந்திர திரிகோணத்திலிருந்தால் விசேஷ நற்பலனும், வித்தியாபிவிர்த்தியும் உத்தியோக விர்த்தியும், திரவியலாபமும் தருவார். சந்திரன் மறைவுஸ்தானத்திலிருந்து சனி ராகு, கேது பார்வை பெற்றும், சம்பந்தமானாலும், சீதளம், ஜுரம், மதிமயக்கம், வறுமை பிணியும் உண்டாகும்.

### சந்திரதிசையில் அங்காரகபுத்தி 7-மாதம்

அங்காரகன் ஆட்சி உச்ச நட்பு ஸ்தலங்களிலிருந்து புதன், குரு, சுக்கிரன் பார்வை பெற்ருல் சுபகரமான நல்ல பலன்களும், சரீர சவுக்கியமும் பந்து மித்திரர் சகாயமும் உண்டாகும். காணி பூமி லாபமும் கிடைக்கும். ஆனால், அங்காரகன் பகை நீசஸ்தானத்திலிருந்து சனி, ராகு, கேது பார்வை பெற்ருல் உஷ்ண வியாதியும், கலகமும், சண்டை சச்சரவும் நஷ்டமும் உண்டாகும்.

### சந்திரதிசையில் இராகுபுத்தி 1-வருஷம் 6-மாதம்

இராகு தனக்குரிய சுபஸ்தானத்திலிருந்து குரு சுக்ரன், புதன், சந்திரன் பார்வை பெற்ருல், பலவித நன்மையும் திரவியலாபமும் கிடைக்கும். ஆனுல் இராகு, சனி, செவ்வாய் பார்வையானுல் பலவிதமான கலகமும் கவலையும் உண்டாகும்.

### சந்திரதிசையில் குருபுத்தி 1-வருஷம் 4-மாதம்

குருபகவான் சந்திரனுக்கு கேந்திர திரிகோண ஸ்தானத்திலிருந்தால் புத்ரமித்ர களத்திர லாபமும், வியாபார விருத்தியும், திரவியலாபமும் கிடைக்கும். ஆனுல், குருபகவான் சந்திரனுக்கு 6-8-12-ம் ஸ்தானத்திலிருந்தால் பலவிதமான கலகமும் கவலையும் உண்டாகும்.

### சந்திரதிசையில் சனிபுத்தி 1-வருஷம் 7-மாதம்

சனி பகவான் கேந்திர ஸ்தானங்களி லிருந்தால் கீர்த்தியும், பெருமையும், வியாபார விர்த்தியும், உத்தியோக லாபமும், திரவிய லாபமும் கிடைக்கும். ஆனுல்

சந்திரனுக்கும் மறைவு ஸ்தானத்தி லிருந்தால் பித்த வியாதியும் கஷ்டமும் கவலையும் உண்டாகும்.

### சந்திரதிசையில் புதன்புத்தி 1-வருஷம் 5-மாதம்

புதபகவான் திசாநாதனுகிய சந்திரனுக்கு கேந்திர திரிகோண ஸ்தானங்களி லிருந்தால் சரீர சவுக்கியமும், மனோற்சாகமும், சங்கீத பிரியமும், ஸ்திரீ சேர்க்கையும், திரவிய லாபமும் கிடைக்கும். ஆனால் புதன் பகை நீச ஸ்தானத்திலிருந்து சனி, ராகு, கேது பார்வையானுல் மன சஞ்சலமும், திகிலும், கவலையும், வறுமையும், கஷ்டமும் உண்டாகும்.

### சந்திரதிசையில் கேதுபுத்தி 7-மாதம்

கேதுபகவான் சந்திரனுக்கு 3-6-11-ம் ஸ்தானத்தி லிருந்து குரு, சுக்கிரன் பார்வையானுல் மாத்திரம் கவலை யில்லாமல் ஞானமும், கீர்த்தியும், வித்யாலாபமும் பகவத் பக்தியானந்தமும் பொருந்தி யிருக்கும்.

### சந்திரதிசையில் சுக்கிரபுத்தி 1-வருஷம் 8-மாதம்

சுக்கிரன் ஆட்சி உச்ச நட்பு ஸ்தானங்களிலிருந்து திசாநாதனுகிய சந்திரனுக்கு கேந்திர திரிகோண ஸ்தா னங்களிலிருந்தால் சுக சவுக்கியமும், திரவிய லாபமும் கிடைக்கும். சுக்கிரன் திசாநாதனுகிய சந்திரனுக்கு மறைவு ஸ்தானத்தி லிருந்தாலும், லக்கின ஜீவன பாக்கிய குடும்பஸ்தான ராசியில் அஸ்தமனமா யிருந்தாலும் தீராக் கவலையும், சஞ்சலமும் வறுமையும் உண்டாகும்.

### சந்திரதிசையில் சூரியபுத்தி 6-மாதம்

சூரியன் திசாநாதனுகிய சந்திரனுக்கு கேந்திர கோண திரிகோண ஸ்தானத்தி லிருந்து சிம்மராசி

யில் ஆட்சி பெற்றிருந்தால் பலவிதமான நன்மையும் திரவியலாபமும் பிரபுக்கள் சகாயமும் உத்தியோக விர்த்தியும் வியாபார லாபமும் கிடைக்கும். ஆனால் திசா நாதனுகிய சந்திரனுக்கு மறைவு ஸ்தானத்திலிருந்து பகை நீசஸ்தானத்திலிருந்தால், வறுமையும், கவலையும், கஷ்டமும் பொருந்தி யிருக்கும்.

சிஷன்:—குருநாதா! தாங்கள் உபதேசித்தவை யனைத்தும் கவனித்தேன். இனி செவ்வாய் திசையில் நடக்கும் ஒவ்வொரு புத்தி நாதர்களின் பலன்களையும் விவரமாய்த் தெரிவிப்பீர்.

குரு:—அவ்விதமே தெரிவிக்கிறேன் கவனிப்பாய்.

## செவ்வாய்திசையில் செவ்வாய்புத்தி
## 4-மாதம் 27-நாள்

செவ்வாய் பகவான் ஆட்சி, உச்ச, நட்பு ஸ்தானங்களிலிருந்து இலக்கினத்திற்கு கேந்திர ஸ்தானத்தி லிருந்தால் பூமி, வீடு, நிலம் முதலான லாபத்துடன் கீர்த்தியும், புகழு முண்டாகும். ஆனால், செவ்வாய் பகை நீசஸ்தானத்திலிருந்து ஜனன லக்கினத்திற்கு மறைவு ஸ்தானத்திலும் சனி, ராகு, கேது பார்வை பெற்று மிருந்தால் பலவிதமான கலகமும், இரத்தகாயம், சண்டை சச்சரவு முதலான கஷ்டங்களு முண்டாகும்.

## செவ்வாய்திசையில் இராகுபுத்தி
## 11-வருஷம் 18 நாள்

இராகுபகவான் திசாநாதனுகிய செவ்வாய் பகவானுக்கு கேந்திரஸ்தானங்களிலிருந்து ஆட்சி உச்சமா

யிருந்தால் மனோற்சாகம், தைரியம், பொருள் சேர்க்கை முதலான சாமர்த்தியமெல்லாம் பொருந்தி யிருக்கும் மறைவு ஸ்தானமாகி ஜனன லக்கினத்திற்கு விரயஸ்தானத்திலிருந்து சனியின் பார்வை பெற்றால் வறுமை, பிணி சத்துருபயம், பயங்கரமான கஷ்டங்களெல்லாம் தோன்றும்.

## செவ்வாய்திசையில் குருபுத்தி
## 11-மாதம் 6-நாள்

குருபகவான் ஜனன லக்கினத்திற்கு கேந்திர திரிகோண ஸ்தானத்திலிருந்து திசாநாதனாகிய செவ்வாய் பகவான் பார்வை பெற்றிருந்தால் பகவத்பக்தி தீர்த்த யாத்திரை, திருவிழா காட்சி, லாபம், பெரியோர் சகவாசம் முதலான சகல பலனும் கிடைக்கும். ஆனால் பகை நீசஸ்தானத்திலிருந்தால் மனோ விசாரம், மனோ துக்கம் கஷ்டம், கவலையும் பொருந்தி யிருக்கும்.

## செவ்வாய்திசையில் சனிபுத்தி
## 1-வருஷம் 1-மாதம் 9-நாள்

சனிபகவான் திசாநாதனாகிய செவ்வாய் பகவானுக்கு கேந்திரஸ்தானத்திலும் நட்பாட்சி உச்சஸ்தானத்திலு மிருந்தாலும் கீர்த்தி, மனோற்சாகம் தைரியம் திரவிய லாபமும் பொருந்தியிருக்கும். ஆனால், சனிபகவான் இலக்கினத்திற்கு மறைவு ஸ்தானத்தி லிருந்தாலும், திசாநாதனுக்கு மறைவு ஸ்தானத்திலிருந்தாலும் பலவிதமான கலகமும் கலவரமும் வறுமையும் பித்த உஷ்ணமும் ஜுர வியாதியும் பொருந்திய கஷ்டமெல்லாம் தோன்றும்.

## செவ்வாய்திசையில் புதன்புத்தி
## 14-மாதம் 27-நாள்

புதபகவான் ஜனன லக்கினத்தின் கோண திரி கோணஸ்தானத்தில் ஆக்ஷி, உச்சம், நட்புபெற்றும் திசா நாதனாகிய செவ்வாய் பகவானுக்கு கேந்திராதிபதியா யிருந்தால் வித்யாபிவிருத்தி, வியாபார லாபம், புத்திர பாக்கியம், பந்துக்கூட்டம், திரவிய லாபம், முதலான நல்ல பலன்களுண்டாகும். திசாநாதனுக்கு மறைவு ஸ்தானத்தி லிருந்தால் புத்தி மயக்கம், சித்தப்ரமை, வறுமை முதலான பிணி பயங்கரமான கஷ்டமா யிருக்கும்.

## செவ்வாய்திசையில் கேதுபுத்தி
## 4-மாதம் 27-நாள்

கேதுபகவான் ஜனன லக்கினத்திற்கு மறைவு ஸ்தா னத்திலிருந்த சனி பார்வைபெற்று திசாநாதனாகிய செவ் வாய் பகவானுக்கு சத்துரு ஸ்தானத்திலிருந்தால் இரத்த காயம், அக்கினி, விஷம் கலகங்களால் கண்டங்களும் நஷ்டமுந் தோன்றும். திசாதாதனுக்கு கேந்திர ஸ்தா னத்திலிருந்து ஜனன லக்கினத்திற்கு 3-6-11-ம் ஸ்தா னத்திலிருந்தால், சத்துருஜெயம், பகவத்பக்தி திரவிய லாபமும் கிடைக்கும்.

## செவ்வாய்திசையில் சுக்கிரபுத்தி
## 1-வருஷம் 2-மாதம்

சுக்கிரபகவான் ஜனனலக்கினம் வாக்கு சுகஸ்தானம் கோணம் திரிகோண ஸ்தானத்தில் நட்பு, ஆட்சி, உச்ச ஸ்தானத்திலிருந்து, திசாநாதனுக்கு கேந்திர ஸ்தானத்தி லிருந்தால், சத்துருஜெயம், சிநேகிதர் சேர்க்கை, பந்து கூட்டம் களத்திரலாபமும் கிடைக்கும். ஆனால், திசா

நாதனுகிய செவ்வாய் பகவானுக்கு சுக்கிரபகவான் மறைவு ஸ்தானத்திலிருந்தால் பலவித கஷ்டமும் வறுமை யும் உண்டாகும்.

## செவ்வாய்திசையில் சூரியபுத்தி 4-மாதம் 6-நாள்

சூரியபகவான் ஜனன லக்கினத்திற்கு கேந்திர ஸ்தா னம் நட்பு, ஆட்சி, உச்ச ஸ்தானங்களிலிருந்து திசா நாத னுகிய செவ்வாய் பகவானுக்கு கேந்திர ஸ்தானத்திலிரு தால், வியாபார விருத்தி, உத்தமர் சேர்க்கை உத்தியோ விருத்தி, திரவியலாபம், தானதர்ம பரோபகாரஞ் செய்யு நன்மையெல்லாம் கிடைக்கும். ஆனல் சூரியன் திசா நா னுக்கு மறைவு ஸ்தானத்திலிருந்து சனி, இராகு, கேது பார்வை பெற்று பகை நீசஸ்தானத்திலிருந்தால் வறுமை யும் கவலையும், உஷ்ண வியாதியும், கலவரமும் கஷ்டமு தோன்றும்.

## செவ்வாய்திசையில் சந்திரபுத்தி 7-மாதம்

சந்திரபகவான் ஜனன லக்கினத்தின் லக்கினம் கேந்திரம், கோணம், திரிகோண ஸ்தானத்தி லிருந்து திசாநாதனுகிய செவ்வாய் பகவானுக்கு கேந்திர ஸ்தா னங்களிலிருந்தால் ஆபரணுதிகளும் வஸ்திர சம்பத்தும் திரவிய லாபமும், உத்தியோக விர்த்தியும், வியாபார லாப மும் கிடைக்கும் ஆனல், சந்திரபகவான் திசாநாதனுக்கு மறைவு ஸ்தானத்திலிருந்தால், கஷ்டமும், கவலையும் பலவிதமான நஷ்டமும் உண்டாகும்.

*சிஷன்* :—குருநாதா ! இராகுதிசை 18-வருஷம் வனை யிலும் வரும் புத்திநாதர்களின் பலன்களையும் விபரமாய் புகல்வீர்.

குரு:—சிஷ்யா! உனது விருப்பத்தின்படியே சொல்லு கிறேன் கவனிப்பாய்.

## இராகுதிசையில் கன்புக்தி
## 2-வருஷம் 8 மாதம் 12-நாள்

இராகு பகவான் ஜனன லக்கினத்திற்கு கேந்திர ஸ்தானத்திலிருந்தால் தனது சுயபுத்தியில் பயங்கர மில்லாமல், கோட்சார பலனை அனுசரித்து பொதுவாய் சுபத்தில் நடக்கும் ஆனால், இலக்கினத்திற்கு 6, 8, 12-ம்வீட்டிலிருந்தால், சுயபுத்தி முழுமைக்கும் கஷ்டமும், கவலையும், பந்துமித்திரர் கலகமும், மனைவியின் மீது வெறுப்பும், பூமி, வீடு கைவிட்டுப் போகுதல் முதலான கவலையும், தேசாந்திரியாய்த் திரியும் கஷ்டமும் பொருந்தி யிருக்கும்.

## இராகுதிசையில் புதன்புக்தி
## 2-வருஷம் 4-மாதம் 24-நாள்

குருபகவான் ஜனனலக்ன குடும்பஸ்தான கோண திரிகோண நட்பு, ஆக்ஷி, உச்சஸ்தானங்களிலிருந்து திசாநாதனுகிய இராகுபகவானுக்கு கேந்திர ஸ்தானத்திலிருந்தால் சரீராரோக்கியம், ஸ்திரீ சேர்க்கை, சுகசவுக்கியம், கீர்த்தி, திரவியலாபமும் கிடைக்கும். ஆனல் குருபகவான் 3, 6, 8, 12-வது ஸ்தானத்திலிருந்து திசாநாதனும் தானிருக்கும் ஸ்தானம் பகை நீசஸ்தானமாகவும் இருந்தால் மனபயங்கரம், உத்தியோக ஸ்தானத்தில் கலகம், வியாபாரத்தில் நஷ்டமும், பகையும், பந்துமித்திரர் மனவெறுப்பும், யாத்திரை வாசமும் தரித்திர ஹிம்சையும் பலவிதமான கஷ்ட நஷ்டமும் பொருந்தி யிருக்கும்.

## இராகுதிசையில் சனிபுத்தி
## 2-வருஷம் 10-மாதம் 6-நாள்

சனிபகவான் ஜனன லக்கினத்தின் 3, 6, 11-ம் ஸ்தானத்தில் நட்பு, ஆக்ஷி, உச்சஸ்தானாதிபதியா யிருந்து திசாநாதனாகிய இராகு பகவானுக்கு கேந்திரஸ்தானத்திலிருந்தால் மன தைரியமும் நல்லோர் சேர்க்கையும், இரும்பு, கறுப்பு தான்யாதிகள் வியாபாரமும், திரவிய லாபமும், வீரத் தன்மையான உத்தியோகமும், சாமர்த்தியமும் பொருந்தி யிருக்கும். ஆனால், சனிபகவான் பகை, நீசஸ்தானத்திலிருந்து திசாநாதனுக்கும் மறைவு ஸ்தானத்தி லிருந்தால் பலவிதமான துன்பமும், துயரமும், வறுமையும், கஷ்டமும், கவலையும் தோன்றும்.

## இராகுதிசையில் புதன்புத்தி
## 2-வருஷம் 6-மாதம் 18-நாள்

புதபகவான் சஷ்டாஷ்டம விரயஸ்தானத்தில் பகை நீசமாயிருந்து திசாநாதனாகிய இராகு பகவானுடன் சம்பந்தமானாலும் பார்வை பெற்றாயினு மிருந்தால் பலவிதமான கலகமும், கஷ்டமும், கவலையும், பகையும், வியாதியும் மனபயங்கரமுமா யிருக்கும். ஆனால், புதபகவான் ஆக்ஷி, உச்சநட்பு ஸ்தானத்திலிருந்து திசாநாதனுக்கு கேந்திர திரிகோண ஸ்தானத்திலிருந்தால் வியாபார விருத்தியும், உத்தியோக மேன்மையும், திரவிய லாபமும் புத்திர சம்பத்தும், புகழும், கீர்த்தியும், பெருமையும் உண்டாகும்.

## இராகுதிசையில் கேதுபுத்தி
## 1-வருஷம் 18-நாள்

கேதுபகவான் மேஷம், ரிஷபம், கடகம், கன்னி, விருச்சிகம், மகர ராசியிலிருந்து புதன், குரு, சுக்கிரன் பார்வை பெற்றால் வித்யா லாபம், சாஸ்திர விசாரணை, மகான்கள் தரிசனம், வியாபார விருத்தி, திரவிய லாபம், உத்தியோக சம்பத்து முதலானவை யனைத்தும் கிடைக்கும். ஆனால், கேதுபகவான் உதய லக்கினத்திற்கு விரய ஸ்தானத்திலிருந்து சூரியனும் சந்திரனும் சம்பந்தமானாலும் பார்வை பெற்றாலும் பலவிதமான துன்பமும் தொல்லையும் கவலையும் கஷ்ட நஷ்டங்களு முண்டாகும்.

## இராகுதிசையில் சுக்கிரபுத்தி
## 3-வருஷம்

சுக்கிரபகவான் லக்கினம், வாக்குஸ்தானம், கேந்திர திரிகோண லாப ஸ்தானத்திலிருந்து திசாநாதனுகிய இராகு பகவானுக்கு கேந்திர ஸ்தானத்திலிருந்தால் சுக சவுக்கியம், ஸ்திரீகள் சேர்க்கை வியாபாரவிருத்தி, உத்தமர் சேர்க்கை, உத்தியோக சம்பத்து, திரவிய லாபம் முதலான நன்மை யுண்டாகும் ஆனால், சுக்கிர பகவான் ஜனன லக்கினத்திற்கு 6, 8, 12 ஸ்தானத்திலும் கன்னியா ராசியிலுமிருந்து திசாநாதனுக்கு ரோகஸ்தானம், விரயஸ்தானத்தி லிருந்தால் பலவிதமாகிய துன்பமும், துயரமும் ஸ்திரீகளின் பகையும், விபசார தோஷத்தினால் வியாதியும் கஷ்டமும் கவலையும் பொருந்தியிருக்கும்.

## இராகுதிசையில் சூரியபுத்தி
## 10-மாதம் 24-நாள்

சூரியபகவான் ரோகஸ்தானம், ஆயுள் ஸ்தானம், விரயஸ்தானம், துலாம், மகரம் கும்பராசியிலிருந்து திசா நாதனாகிய இராகு பகவான் பார்வை பெற்றாலும், சம்பந்தமா யிருந்தாலும் பலவிதமான துன்பமும், துயரமும் சண்டை சச்சரவும், தரித்திர ஹிம்சையும், கஷ்டமும் கவலையுமாய் அழுகையுந் துக்கமும் தேச சஞ்சாரமும், விஷபயமும், அக்கினிபயமுமா யிருக்கும். ஆனால், சூரிய பகவான் நட்பு, ஆட்சி உச்ச ஸ்தானத்திலிருந்து குரு, புதன், சுக்கிரன் பார்வை பெற்றாலும், சம்பந்தமா யிருந் தாலும், திசா நாதனுக்கு மறைவு ஸ்தானத்திலிருந்தாலும், தானிருந்த ஸ்தானாதிபத்தியத்திற் கிசைந்த சுப பலன்க ளாகிய பந்துமித்திர சேர்க்கை, வியாபார விருத்தி, திரவிய லாபம், உத்தியோக சம்பத்து, சரீர சவுக்கியம், முதலான நன்மையே உண்டாகும்.

## இராகுதிசையில் சந்திரபுத்தி
## 1-வருஷம் 6-மாதம்

சந்திரபகவான் லக்கின குடும்பஸ்தான கேந்திர திரிகோண இலாபஸ்தானத்திலிருந்து திசாநாதனாகிய இராகு பகவானுக்கு மறைவு ஸ்தானத்தி லிருந்துக் கொண்டு குரு, புதன், சுக்கிரன் பார்வை பெற்று நட் பாட்சி உச்சஸ்தானத்தி லிருந்தால் வித்தியா லாபம், வியாபார லாபம், திரவிய லாபம், பந்துஜன கூட்டம், ஸ்திரீகள் சேர்க்கை, மனோற்சாகம், புத்திரசம்பத்து மு

லான நற்பலன்கள் உண்டாகும். ஆனால், சந்திரபகவான் பகை நீசஸ்தானத்திலிருந்து திசாநாதனாகிய ராஜசம் பந்தமும் பார்வை பெற்றாலும் சிறை, கலகம், சத்துரு சேர்க்கை, கைப்பொருள் நஷ்டம், வியாபார நஷ்டம், உத்தியோக விரோதம் முதலான பலவிதமாகிய கஷ் டத்தை யுண்டாக்கும்.

## இராகுதிசையில் செவ்வாய்புத்தி
## 1-வருஷம் 18-நாள்

செவ்வாய்பகவான் விருச்சிகம், மகரம், மேஷ ராசியி லிருந்து உதய லக்கினத்திற்கு கேந்திர லாபஸ்தானத்தி லிருந்து திசாநாதனாகிய இராகு பகவானுக்கும் கேந்திர ஸ்தானத்திலிருந்தால் பூமிலாபம், சத்துருஜெயம், வியா பார விருத்தி, திரவிய லாபமும், உத்தியோக சம்பத்து முதலாகிய நன்மையெல்லாம் கிடைக்கும். ஆனால். செவ் வாய்பகவான் பகை நீசஸ்தானத்திலிருந்து திசாநாத னாகிய இராகு சம்பந்தமானாலும் பார்வை பெற்றாலும் பல விதமான கஷ்ட நஷ்டங்களும் சத்துரு விரோத கலகங் களும், வியாதி, தரித்திர இம்சையும், அன்ன வஸ்திரத் திற்குப் பஞ்சமுமா யிருக்கும்.

சீஷன்:—சுவாமி குருநாதரே! தாங்கள் எனக்கு உப தேசித்தவை யனைத்தும் கவனித்துணர்ந்தேன். ஆனால், தேவகுருவாகிய வியாழபகவான் திசையில் நடக்கும் ஒவ் வொரு புத்திநாதர்களின் சுபாசுப பலன்களையும் விவர மாய்ப் புகல்வீர் சுவாமி.

குரு:—அவ்விதமே சொல்லிக்கொண்டு வருகின்றேன் கவனமாய்க் கேட்பாய்.

## குருதிசையில் குருபுத்தி
## 2-வருஷம் 1-மாதம் 18-நாள்

குருபகவான் நட்பாக்ஷி உச்சஸ்தான இலக்கின குடும்ப கோண திரிகோண லாபஸ்தானாதிபத்தியம் பெற்றிருந்தால் வித்தியாலாபம், புத்தி சாதுர்யம், பந்து மித்திரர் நட்பு, உத்தம சிநேகிதர் சேர்க்கை, உத்தியோக விர்த்தி, திரவியலாபம், வியாபார மேன்மை முதலான நன்மைகளும், சரீராரோக்கியம், பகவத் பக்தி விரதானுஷ்டான சுகவாழ்வும் பெருகும். குருபகவான் ஜனன லக்கினத்திற்கு மறைவு பெற்று பகை நீசஸ்தானத்திலிருந்து சனி, ராகு, கேது சம்பந்தமானாலும் பார்வை பெற்றாலும், கைப்பொருள் நஷ்டம், வியாபார நஷ்டம், உத்தியோக ஸ்தானத்தில் கலகம், சித்தப்பிரமை, மனவிசாரம், தேசசஞ்சாரம், அன்னவஸ்திர பஞ்சம் வறுமை முதலான துக்கமும் துயரமுமா யிருக்கும்.

## குருதிசையில் சனிபுத்தி
## 2-வருடம் 6-மாதம் 12-நாள்

சனிபகவான் பகை நீசஸ்தானத்திலிருந்து சூரியன் சம்பந்த பார்வையாய் திசாநாதனாகிய குருபகவானுக்கு மறைவு ஸ்தானத்திலிருந்தால் கைப்பொருள் நஷ்டம், வியாதி, மனசஞ்சலம், திருடர்களாலும் வஞ்சகர்களாலும், திரவிய நஷ்டம், மனசஞ்சலம், திகில், சூதகம், வியாபார நஷ்டம், உத்தியோக ஸ்தானத்தில் கலகம், அன்னவஸ்திர பஞ்சம், கடன்காரர் தொந்தரை முதலான கஷ்டமெல்லாம் விலகும். ஆனால், சனிபகவான், கும்பம், மகரம்,

துலா ராசியிலிருந்து புதன், சுக்கிரன் பார்வை பெற்றும், திசாநாதனுக்கு கேந்திர திரிகோணஸ்தானத்திலிருந்தால் மனதைரியமும், வியாபார விர்த்தியும், உத்தியோக சம்பத்தும், திரவிய லாபமும் கிடைக்கும்.

## குருதிசையில் புதன்புத்தி
## 2-வருடம் 3-மாதம் 6-நாள்

புதபகவான் ஜனனலக்ன வாக்குஸ்தான கோண திரிகோண லாபஸ்தானத்தில், ஆட்சி, உச்சி, நட்பு ஸ்தானாதிபதியாயிருந்து திசாநாதனாகிய குருபகவானுக்கு கோண திரிகோண ஸ்தானத்திலிருந்தால், வித்தை, விவேகம், புத்தி, சாதுரியம், பந்துமித்திரர் சேர்க்கை, மனையாள் சுகானந்தம், புத்திரசம்பத்து, வியாபாரலாபம், உத்தியோக விர்த்தி, திரவியலாபமும் கிடைக்கும். ஆனல், புதபகவான் இலக்கினத்திற்கு ஆறெட்டு பனிரெண்டாமிடத் ததிபதியாய் பகைநீச ஸ்தானத்திலிருந்து திசாநாதனுக்கு மறைவு ஸ்தானத்திலிருந்தால், மறதி, சோம்பல், விசேஷ நித்திரை, வியாபார நஷ்டம், உத்தியோக ஸ்தான கலகம், திரவிய நஷ்டம், பந்து ஜனங்களின் பகை முதலான நஷ்டங்களெல்லாம் விளைவிக்கும்.

## குருதிசையில் கேதுபுத்தி
## 11-மாதம் 6-நாள்

கேதுபகவான் மேஷம், ரிஷபம், கடகம், கன்னி விருச்சிகம் மகரராசியிலிருந்து குரு சுக்கிரன் பார்வை

பெற்று ஜனனலக்கினத்திற்கு ஆருமிடத்திலிருந்தாலும், கேந்திரஸ்தானத்திலிருந்தாலும், திசாநாதனுகிய குருபக வானுக்கு திரிகோணஸ்தானத்திலிருந்தால், தெய்வபக்தி, மஹான்கள் தரிசனம் தேவாலய பூசை, விரதானுஷ்டானம், வித்தியாலாபம், திரவியலாபம் முதலான நன்மை யனைத்துங் கிடைக்கும். ஆனுல், கேதுபகவான் சனி, செவ்வாய் பார்வைபெற்று திசாநாதனுக்கு மறைவு ஸ்தானத்திலிருந்தால் பலவிதமான மனச்சஞ்சலம், கைப்பொருள் நஷ்டம், திருடர் பயம், வறுமை, பிணி முதலான கஷ்டமும் கவலையுமா யிருக்கும்.

## குருதிசையில் சுக்கிரபுத்தி
## 2-வருஷம் 8-மாதம்

சுக்கிரபகவான் ஜனனலக்ன சுகபஞ்சம பாக்கிய இலாபஸ்தானத்தில் நட்பாட்சி உச்சமா யிருந்தும் திசாநாதனுகிய குரு பகவானுக்குக் கோண திரிகோண ஸ்தானத்திலிருந்தால் ஞானம், கல்வி, வித்யாபிவிருத்தி, உத்தமர் சேர்க்கை, மனைவி மைந்தர் சுகவாழ்வு, கீர்த்தி, வியாபார லாபம், பொன், பொருள் பூஷணுதிகளனைத்தும் பொருந்தி இருக்கும். ஆனுல், சுக்கிர பகவான் கஷ்டநஷ்டம் விரயஸ்தானத்தில் பகை நீசமாயிருந்து, சனி, இராகு, கேது சம்பந்தமும், திசாநாதனுக்கு மறைவு ஸ்தானத்திலும் இருந்தால் மந்தபுத்தி, ஞாபகக் குறைவு, பந்து மித்திரர் பகை, சண்டை, சச்சரவு, வழக்கு, வியாஜ்யம் திரவிய நஷ்டம் முதலான கஷ்டங்களும் விளைவிக்கும்.

## குருதிசையில் சூரியபுந்தி
## 9-மாதம் 18-நாள்

சூரியபகவான் நட்பாட்சி உச்சனுயிருந்து கேந்திர ஸ்தானுதிபதியாய் திசாநாதனுக்கு கோண த் திரிகோண ஸ்தானங்களி லிருந்தால், வித்யாபிவிருத்தி கீர்த்தி, ஞாபக சக்தி, வீரத்தன்மை, வியாபாரவிருத்தி, உத்தி யோக மேன்மை, சம்பத்தும் திரவிய லாபமுங் கிடைக்கும். ஆனல், சூரியபகவான் பகை நீசஸ்தானத்திலிருந்து சனி, ராகு, கேது, பார்வைபெற்று திசாநாதனுக்கு, மறைவு ஸ்தானத்திலிருந்தால் மனஸ்தாபமும், நஷ்டமும், கவலை யும் துன்பமும், துயரமும், அலேச்சல்பட்டலேயச் செய்யும். ஆனல், சூரியன் சத்துரு ஸ்தானத்திலிருந்தால் எத்த கைய துன்பத்திற்கும் அஞ்சாமல் தைரியமாய் விளங்கும் படியாகச் செய்யும்.

## குருதிசையில் சந்திரபுத்தி
## 1-வருஷம் 4-மாதம்

சந்திரபகவான் ஜனனலக்ன குடும்பஸ்தான கேந் திர கோணுதிபதியாய் திசாநாதனுக்கு நட்பாட்சி உச்சனு யிருந்தால் வித்யாபிவிர்த்தி, குரு உபதேசம் குடும்ப சவ ரட்சணே, அதிகாரம், வியாபார விருத்தி, உத்தியோக சம்பத்து, திரவியலாபம் சுகசவுக்கிய மெல்லாம் பொருந்தி யிருக்கும். சந்திரபகவான் பகை நீசஸ்தானத்திலிருந்து குரு பகவானுக்கு ஆறெட்டு பனிரெண்டா மிடத்திலிருந் தால் பாலாரிஷ்டம், கண்டாதி கண்டம், கலகம், வறுமை, துன்பம், துயரம், கவலே, அலேச்சல், பகைவரால் துன்பம், வழக்கு வியாஜ்யம் முதலான கஷ்டமெல்லாந் தோன்றும்.

## குருதிசையில் செவ்வாய்புத்தி
## 11-மாதம் 6-நாள்

செய்வாய் பகவான் ஜனனலக்னத்திற்கு அஷ்டம விரயஸ்தானத்தில் பகைநீசஸ்தானத்திலிருந்து திசாநாதனாகிய குரு பகவானுக்கு மறைவு ஸ்தானத்திலிருந்தால் பலவிதமான அலைச்சலும் உஷ்ண வியாதி, சொரி சிரங்கு, சீதபேதி முதலான வியாதிகளும் பொருந்தி பலஹீனப் படுத்துவதுடன் சத்துரு பயம், வழக்கு, வியாஜ்ஜியத்தினால் கைப்பொருள் நஷ்டம், மனை, வீடு, கைவிட்டுப் போவது முதலான கஷ்டத்தை விளைவிக்கும். ஆனால், செவ்வாய் பகவான் ஜனன லக்கினத்திற்கு கேந்திராதிபதியாய் நட்பாட்சி உச்சனாயிருந்து திசாநாதனுக்குக் கேந்திராதிபதியா யிருந்தால், வித்யாபிவிருத்தி, ஞாபக சக்தி, பகவத்பக்தி, கல்வி, ஞானம், அறிவு, ஆலோசனை, வியாபார லாபம், வீடு வாங்குதல், திரவிய லாபம், சரீரா ரோக்கியம், மனைவி மைந்தர் சுகவாழ்வு, கீர்த்தி பெருந் தன்மையான புத்தி சாதுர்ய மனைத்தும் பொருந்தி யிருக்கும்.

## குருதிசையில் இராகுபுத்தி
## 2-வருடம் 4-மாதம் 24-நாள்

இராகுபகவான் மேஷம், ரிஷபம், கடகம், விருச்சிகம், மகரராசியிலிருந்து திசாநாதனாகிய குருபகவானுக்கு கேந்திர ஸ்தானத்திலிருந்தால் கல்வி, மன உற்சாகம், அறிவு, ஆலோசனை விளக்கம், ஞாபக சக்தி, திரவியலாபம், வியாபாரலாபம், உத்தியோக சம்பத்து, பெரியோர் நேசம், பந்துஜனக் கூட்டம், மனைவி மைந்தர் சுகவாழ்வு, சரீர

சவுக்கிய மனோற்சாக மனைத்தும் பொருந்தி யிருக்கும். ஆனால், இராகு பகவான் பகை நீசஸ்தானத்திலிருந்தால் பலவிதமான கஷ்ட நஷ்டமும், கவலையும் அன்னவஸ்திரத்திற்குப் பஞ்சமும், பயங்கரமும், சத்துரு விரோதமும் பொருந்தி யிருக்கும்.

*சீஷன்:*—குருஸ்வாமி! தாங்கள் அடியேன் மீது அன்புகூர்ந்து சனிதிசையில் நடத்தும் ஒவ்வொரு புத்தி நாதர்களின் பலன்களையும் விபரமாய்த் தெரிவிப்பீர்.

குரு:—சரி அவ்விதமே தெரிவிக்கின்றேன் கவனிப்பாய்.

## சனிதிசையில் சனிபுக்தி
### 3-வருடம் 3-நாள்

சனிபகவான் இலக்கினத்திற்கு 3-6-11-ம் இடத்தில் நட்பாட்சி உச்சனுயிருந்து குரு சுக்கிரன் புதன் பார்வை போனுல் தைரியம், உற்சாகம், திரவியலாபம், வியாபார விருத்தி, உத்தியோகசம்பத்து, அரசாங்கத்தார் சகாயம், பந்துமித்திரர் சகாயம், மனைவி மைந்தர் சுகசவுக்கிய வாழ்வானந்தமா யிருப்பதற்காகும். ஆனால் சனிபகவான் பகை நீசஸ்தானத்திலிருந்து கோண திரிகோணதிபதியாயிருந்தால் பலவிதமான கஷ்டமும் கவலையுமாயிருக்கும்.

## சனிதிசையில் புதன்புத்தி
### 2-வருடம் 8-மாதம் 9-நாள்

புதபகவான் லக்கினத்திற்குக் கோண திரிகோண வாக்கு லாபஸ்தானுதிபதியாய் நட்பாட்சி உச்சனு

யிருந்து திசாநாதனுகிய சனிபகவானுக்கு கேந்திராதிபதி யாய் குரு சுக்கிரன் பார்வை பெற்றால் கல்வி, ஞானம், வித்யாபிவிர்த்தி, பெரியோர்கள் சேர்க்கை உற்றார், உறவினர் சகாயம், மனைவி மைந்தர் சுகவாழ்வு, வியாபார விர்த்தி, பெருந்தன்மை, உத்தியோகவிருத்தி, திரவிய லாபம், சுகவாழ்வு மாதா பிதா புத்திரகளத்திர சுகசவுக்கிய மனைத்தும் பொருந்தி யிருக்கும். புதபகவான் பகை நீசஸ்தானத்திலிருந்து திசாநாதனுக்கு மறைவு ஸ்தானத்திலிருந்து இராகு கேது பார்வை பெற்றால் பலவித மான கஷ்டமும், மனவிசாரமும் பொருந்தி யிருக்கும்.

## சனிதிசையில் கேதுபுத்தி
## 1-வருடம் 1-மாதம் 9-நாள்

கேதுபகவான் மேஷம், ரிஷபம், கடகம், விருச்சிகம், மகரராசியிலிருந்து திசாநாதனுகிய சனிபகவானுக்கு கேந்திர ஸ்தானத்திலிருந்து குரு, சுக்கிரன், புதன் பார்வை யானுல் ஞானமும், கல்வியும், வித்யாபிவிர்த்தியும், பகவத் பக்தியானந்த விரதானுஷ்டானமும் தேவாலய பூஜையும், மஹான்கள் தரிசனமும், பெரியோர்கள் சேர்க்கையும், சரீராரோக்கிய சுகவாழ்வும் பொருந்தி யிருக்கும். கேதுபகவான் திசாநாதனுக்கு மறைவு ஸ்தானத்திலும் ஜனன லக்கினத்திற்கு மறைவு ஸ்தானத்திலு மிருந்தால் அன்ன வஸ்திரத்திற்குப் பஞ்சமும், பந்துஜன மித்திரர் பகையாகி அலட்சியஞ் செய்யும்படியான கஷ்டமுமா யிருக்கும்.

## சனிதிசையில் சுக்கிரபுத்தி
## 3-வருஷம் 2-மாதம்

சுக்கிரபகவான் ஜனனலக்னம் வாக்குஸ்தானம் கேந்திர கோண திரிகோண லாபஸ்தானத்தில் நட்பு ஆட்சி உச்சனுய் திசாநாதனுக்கும் கேந்திராதிபதியா யிருந்தால், வியாபார லாபம், உத்தியோக சம்பத்து, சரீராரோக்கியம், ஸ்திரீகள் சேர்க்கை முதலான சுகானந்த வைபவ மனைத்தும் பொருந்தி யிருக்கும். ஆனுல் சுக்கிரபகவான் ஜனன லக்கினத்திற்கு 6, 8, 12-ல் பகை நீசஸ்தானத்திலிருந்து திசாநாதனுக்கு மறைவு ஸ்தானத்திலிருந்தால் வியாதி, ஸ்திரீகளால் கலகம், விபசார வீண் வழக்கு மனவிசாரம் முதலான கஷ்டநஷ்ட கவலைகளும் பொருந்தி யிருக்கும்.

## சனிதிசையில் சூரியபுத்தி
## 11-மாதம் 12-நாள்

சூரியபகவான் நட்பு ஆட்சி, உச்சஸ்தானுதிபதியாய் திசாநாதனுகிய சனி பகவானுக்குக் கேந்திராதிபதியா யிருந்தால் வியாபார லாபம், திரவிய லாபம், புத்திர மித்திர களத்திர சுகசவுக்கியமாய் மனேற்சாகமா யிருப்பதற்காகும். ஆனுல் சூரியபகவான் பகை நீசஸ்தானத்தி லிருந்து சனிபகவான் பார்வை சம்பந்தமா யிருந்தால் பிதாபுத்ர கலகம், பகைவரால் கலகம், மனவிசாரம், துயரமும், துன்பமும், வறுமையும், வியாதியும், கவலையும் கஷ்டமுமா யிருக்கும்.

## சனிதிசையில் சந்திரபுத்தி
## 1-வருடம் 7-மாதம்

சந்திர பகவான் லக்கின குடும்பஸ்தான கோண திரிகோண ஸ்தானத்திலிருந்து திசாநாதனாகிய சனி பகவானுக்கு கேந்திராதிபதியாய் நட்பு, ஆட்சி, உச்ச ஸ்தானத்தி லிருந்தால் பந்துமித்திரர் சுகானந்த உற்சாகம், கல்வி, வித்தை, ஞானம், மனோவுல்லாசம், திரவிய லாபம், சுகசவுக்கிய மனைத்தும் உண்டாகும். ஆனால் சந்திரபகவான் பகை நீசஸ்தானத்திலிருந்து திசாநாத னுக்கு மறைவு ஸ்தானத்திலிருந்தால் பித்தசுரம், மன மயக்கம், பலவித கஷ்டநஷ்ட மனைத்தும் உண் டாகும்.

## சனிதிசையில் செவ்வாய்புத்தி
## 1-வருடம் 1-மாதம் 9-நாள்

செவ்வாய்பகவான் நட்பு, ஆட்சி, உச்சனாய் திசா நாதனாகிய சனிபகவானுக்கு கேந்திராதிபதியா யிருந் தால் தைரியம், சரீரசவுக்கியம், திரவியலாபம், வியாபார விருத்தி, உத்தியோக சம்பத்து, பிரக்யாதி முதலாகிய பலவித நன்மையு முண்டாகும். ஆனால், செவ்வாய் பக வான் பகை நீசஸ்தானத்திலிருத்து திசாநாதனுக்கு மறைவு ஸ்தானத்திலிருந்தால் பித்த உஷ்ண வியாதி மேக காரக ரோகாதிகளால் துன்பமும் மனவிசாரமும் நேரிடும்.

## சனிதிசையில் இராகுபுத்தி
## 2-வருடம் 10 மாதம் 6-நாள்

இராகுபகவான் ஜனன லக்கினத்தின் மூன்று ஆறு பதினொராமிடத் ததிபதியாய் மேஷம், ரிஷபம், கடக

விருச்சிக ராசியிலிருந்து திசாநாதனுக்கு கேந்திராதிபதியா யிருந்தால் வீரப்ரதாம், வீரவான்கள் சிநேகம், வியாபார விருத்தி, உத்தியோக சம்பத்து, திரவி பலாபம், சரீராரோக்கியம், மனைவி மைந்தர் குடும்ப க்ஷேமமாகவு மிருக்கும். ஆனால், இராகுபகவான் ஜனன லக்கினத்திற்கு அஷ்டம விரய ஸ்தானாதிபதியாய் திசாநாதனுக்கு, மறைவு ஸ்தானத்திலிருந்தால் வீண்வழக்கு, வம்பு சண்டை, கைப்பொருள் நஷ்டம், கவலை, மனவிசாரம் துன்பமும், துயரமும், கஷ்டமுமா யிருக்கும்.

## சனிதிசையில் குருபுத்தி
## 2-வருஷம் 6-மாதம் 12-நாள்

குருபகவான் ஜனன லக்கின வாக்குஸ்தான குடும்ப சுக சப்தமபாக்கிய லாபாதிபதியாய், ஆஷி, உச்ச, நட்பு ஸ்தானங்களிலிருந்து திசாநாதனாகிய சனிபகவானுக்கு கோண திரிகோண ஸ்தானங்களிலிருந்தால் வித்யா சாமர்த்தியம், ஞாபகசக்தி, வியாபாரவிருத்தி, உத்தியோக சம்பத்து, திரவிய லாபம், மனைவி-மைந்தர்-மாதா-பிதா-பந்துஜன மித்திரர் சுகசவுக்கியம், ஆலயபூசை அன்னதான தர்ம கைங்கரியம், தானதர்ம பரோபகாரம், சரீராரோக்கியமா யிருக்கும். ஆனால், குருபகவான் ஜனன லக்கினத்திற்கு 6-8-12-மிடத்து அதிபதியாய், பகை நீச அஸ்தமயமாய் திசாநாதனுக்கு மறைவுஸ்தானத்திலிருந்தால், மனமயக்கம், மன விசாரம், சொற்சோர்வு, வியாபார நஷ்டமும் உண்டாகும்.

சிஷன்:—குருநாதா! புததிசையில் வருகிற புத்தி நாதர்களின் பலன்களேயும் விபரமாய்ப் புகல்வீர்.

குரு:—அன்பான சிஷ்யா! உன் மனம்போலவே புத திசையில் வருகிற புத்திநாதர்களின் பலன்களேயும் சொல்லுகிறேன் கவனிப்பாய்.

## புதன்திசையில் புதன்புத்தி
## 2-வருஷம் 4-மாதம் 27-நாள்

புதபகவான் லக்கின குடும்பஸ்தான திரிகோண லாப ஸ்தானத்திலிருந்து, நட்பு-உச்சமா யிருந்தால், கல்வி, ஞானம், சங்கீத க்யானம், நடனப்பிரியம், வித்யாபிவிர்த்தி, வியாபாரலாபம், பந்துமித்திரர், மாதா பிதா புத்திர களத்திர சுகசவுக்கிய முண்டாகும். ஆனல், புதபகவான் ஜனன லக்கினத்திற்கு ஆறு எட்டு பன்னிரண்டாம் ஸ்தானுதிபதியாய் பகை நீசஸ்தானத்திலிருந்து திசாநாதனுக்கு மறைவு ஸ்தானத்திலிருந்தால் பலவித கஷ்டமும், கவலேயும், வியாபார நஷ்டமும், உத்தியோக ஸ்தான கலகமும், கவலேயும், மனமயக்கம், திகில் பந்துமித்திரர் கலகம் பலவிதமாகிய கஷ்ட நஷ்டங்களும் உண்டாகும்.

## புதன்திசையில் கேதுபுத்தி
## 11-மாதம் 27-நாள்

கேதுபகவான் ஜனன லக்கினத்திற்கு கேந்திர ஸ்தானுதிபதியா யிருந்து குரு, சுக்கிரன் பார்வை பெற்று, மேஷம், ரிஷபம், கடகம், விருச்சிகம்,

ராசியிலிருந்து திசாநாதனுகிய புதபகவானுக்கு கேந்திர ஸ்தானத்திலிருந்தால், வித்யாபிவிருத்தி, சங்கீத பிரியம், சாஸ்திர விசாரணை, பந்துமித்திர புத்திரகளத்திர மாதா பிதா குடும்ப சவுக்கியம். ஆனுல், கேது பகவான் திசா நாதனுக்கு மறைவு ஸ்தானத்திலிருந்து சனி பார்வை பெற்றுல் மறதி, மனவிசாரம், கைப்பொருள் சேதம், விஷ ஜெந்துக்களால் துன்பம், விபரீத கஷ்ட நஷ்டமாய் கவலை யும் கலவரமுமாய் இருப்பதற்காகும்.

## புதன்திசையில் சுக்கிரபுத்தி
## 2-வருஷம் 10-மாதம்

சுக்கிரபகவான் லக்கின குடும்ப, சுகபாக்கிய இலாப ஸ்தானுதிபதியாய் ஆட்சி, உச்ச, நட்பு ஸ்தானத்தி லிருந்து திசாநாதனுகிய புதபகவானுக்குக் கோண திரி கோண கேந்திர ஸ்தானுதிபதியா யிருந்தால், மனைவி, மைந்தர், மாதா பிதா சுகசவுக்கியம் வித்யாபிவிருத்தி, சங்கீதக்கியானம், வேசிகள் சேர்க்கை, வியாபாரவிருத்தி, உத்தியோக சம்பத்து, திரவியலாபம், கீர்த்திப்ரதாபம் பொருந்தி யிருக்கும். ஆனுல், சுக்கிரபகவான் ஜனன லக் கினத்திற்கு சஷ்டாஷ்டம விரயஸ்தானுதிபதியாய் பகை நீசஸ்தானத்திலிருந்து திசாநாதனுக்கு மறைவு ஸ்தா னத்திலிருந்தால் மனமயக்கம், திகில், தாசி வேசிகளால் கலகம், வியாபார நஷ்டம், உத்தியோக ஸ்தான கலகம், பந்து மித்திரர் பகை, அன்னவஸ்திர பஞ்சம், வியாதி முதலான பலவித கஷ்டமா யிருக்கும்.

## புதன்திசையில் சூரியபுத்தி
## 10-மாதம் 6-நாள்

சூரியபகவான் ஜனனலக்கின கேந்திராதிபதியாய் நட்பாட்சி உச்சனு யிருந்து, திசாநாதனுகிய புத பகவானுக்கு கேந்திராதிபதியாய் குரு பார்வை பெற்றிருந்தால் வித்யாலாபம், வியாபார விருத்தி, பொன், பொருள், பூமி வீடு வாங்கல், புத்திர சம்பத்து முதலான சகல சம்பத்துடன் மனமகிழ்வா யிருக்கும். ஆனால், சூரியபகவான் பகை நீசஸ்தானத்திலிருந்து திசாநாதனுகிய புதபகவானுக்கு மறைவுஸ்தானத்திலிருந்தால் மனவிசாரம், திகில் கவலை நஷ்டம் துன்பமும் துயரமும் உண்டாகும்.

## புதன்திசையில் சந்திரபுத்தி
## 1-வருஷம் 5-மாதம்

சந்திரபகவான் ஜனன லக்கின வாக்குஸ்தான கேந்திரகோண ஸ்தானுதிபதியாய் நட்பாட்சி உச்சனு யிருந்து திசாநாதனுகிய புத பகவானுக்கு கேந்திர கோண திரிகோண ஸ்தானுதிபதியா யிருந்தால் வித்யாபிவிர்த்தி, சங்கீதக்கியானம், வியாபார லாபம், தாசி வேசிகள் சகாயம், உத்தியோக விருத்தி திரவிய லாபம், மாதா பிதா களத்திர புத்திர சுகசவுக்கியமும், சரீராரோக்கியமும், பெருமையும், காந்தியும் பொருந்தி யிருக்கும்.

## புதன்திசையில் செவ்வாய்புத்தி
## 11-மாதம் 27-நாள்

செவ்வாய் பகவான் ஜனன லக்கின கேந்திராதிபதியாய் ஆட்சி, உச்சம், நட்பு ஸ்தானத்திலிருந்து திசாநாதனுகிய புதபகவானுக்கு கேந்திராதிபதியா யிருந்தால்

சாமர்த்தியமான தீரம், வல்லமை, வாய் சாதுர்யமாய்ப் பேசுதல், உற்சாகம், திரவியலாபம், பூமிலாபம், பந்துமித்திர குடும்ப சவுக்கியம், பெருமை கீர்த்தியாகவு மிருக்கும். ஆனால், செவ்வாய்பகவான் பகை நீசஸ்தானத்திலிருந்து திசாநாதனுக்கு மறைவு ஸ்தானத்திலிருந்தால் வாத உஷ்ணரோகம், காமாலை ஜுரவியாதிகளும், சத்துரு விரோதம், இராஜபயம், திகில், வியார நஷ்டம், உத்தியோக ஸ்தான கலகம், வறுமையும் மனவிசாரமுமாய் இருக்கும்.

## புதன்திசையில் இராகுபுத்தி
## 2-வருடம் 6-மாதம் 18-நாள்

இராகுபகவான் ஜனன லக்கின திரிதிய பஞ்சம விரயாதிபதியாய் பகை நீசஸ்தானத்திலிருந்து திசாநாதனாகிய புதபகவானுக்கு மறைவு ஸதானத்திலிருந்தால் மனபயங்கரம், திகில், கலகம், கவலை, பந்துமித்திரர் கலகம், சண்டைசச்சரவு, வழக்கு வியாஜ்ஜியம், பரஸ்திரீகளால் தூரதேச பிரயாணம், மனஸ்தாபமும் பலவிதமான கெடுதியு முண்டாகும். ஆனால், இராகுபகவான் உச்ச ஸ்தானமாகிய விருச்சிகத்திலிருந்து திசாநாதனாகிய புதபகவானுக்கு கேந்திர ஸ்தானத்திலிருந்தால் யாதொரு கஷ்டநஷ்டமு மில்லாமற் சுகசவுக்கியமா யிருப்பதற்காகும்.

## புதன்திசையில் குருபுத்தி
## 2-வருடம் 3-மாதம் 6-நாள்

குருபகவான் ஜனன லக்ன குடும்ப சுகசப்தம பாக்கிய லாபாதியாய் ஆக்ஷி உச்ச நட்பு ஸ்தானாதிபதியாய் திசா நாதனாகிய புதபகவானுக்கு கோண திரிகோண லாபஸ்தானத்திலிருந்தால் வித்யாபிவிர்த்தி, பிரபுக்கள்-

சேர்க்கை, இராஜ தரிசனம், பந்து மித்திர களத்திர புத்தி; மாதா பிதா குடும்ப சவுக்கியம் உண்டாகும். ஆனால், குரு பகவான் ஜனன லக்கினத்திற்கு சஷ்டாஷ்ட விரய ஸ்தானத்தில் பகை நீசமாய் திசா நாதனாகிய புத பகவானுக்கு மறைவு ஸ்தானத்தி லிருந்தால் பலவித மாகிய கஷ்ட நஷ்டங்களும், பகையும், தீராத தொடுவழக்கும், வறுமை பிணி முதலாகிய துன்பமும் துயரமுமா யிருக்கும்.

## புதன்திசையில் சனிபுத்தி
## 2-வருஷம் 8-மாதம் 9-நாள்

சனிபகவான் ஜனன லக்கினத்திற்கு திரிதிய லாப ஸ்தானத்திலிருந்து நட்பு, ஆக்ஷி, உச்சஸ் நானாதிபதியாய் திசாநாதனாகிய புதபகவானுக்கு கேந்திர ஸ்தானத்தி லிருந்தால் வியாபாரிகளின் நட்பு, வர்த்தகத்தில் லாபம், உத்தியோக தொழில் முறையில் கீர்த்தி, திரவியலாபம் சரீராரோக்கியம், பந்து மித்திரர் சகாயம், பெரியோர் சேர்க்கை, திரவிய லாபமும் கிடைத்து கீர்த்தி பிரகாசமா யிருக்கும். ஆனால், சனிபகவான் நீசஸ்தானத்திலிருந்து திசா நாதனுக்கு மறைவு ஸ்தானத்திலிருந்தால் பித்த சம்பந்தமான வியாதிகள், தொடு வழக்கு, சண்டை விரோதம், வறுமை, கைப்பொருள் சேதம் முதலான கஷ்ட நஷ்ட முண்டாகும்.

சிஷ்ன்:—குருஸ்வாமி! தாங்கள் அனுக்கிரகஞ் செய்த வரையிலும் தெரிந்துக் கொண்டேன். இனி

கேதுதிசையில் வரும் ஒன்பது நாதர்களின் பலனையும் விவரமாய்ச் சொல்ல வேண்டும்.

குரு:—சரி; அப்படியே சொல்லுகிறேன் கவனிப்பாய்.

## கேதுதிசையில் கேதுபுத்தி
## 4-மாதம் 27-நாள்

கேதுபகவான் ஜனன லக்கினத்திற்கு மூன்றுறு இலாப ஸ்தானத்திலிருந்து குரு, சுக்கிரன், புதன் பார்வையா யிருந்தால் கல்வி, ஞானம், திரவிய லாபமும் பொருந்தி யிருக்கும். ஆனால், கேது ஜனன லக்ன சப்தம அஷ்ட விரய ஸ்தானத்திலிருந்து சனி சூரியன் பார்வை பெற்றால் சத்துருக்கள் விரோதத்தாலும், கைப்பொருள் நஷ்டமும், கவலையும் நேரிடுவதுடன் பந்துஜன மித்திரர் கலகத்தினாலும் மனைவி மைந்தரைப் பிரிந்து இருக்க இடமில்லாமல் அலைந்து அந்நிய தேசவாசியா யலையும்படியான கஷ்ட நஷ்ட துன்பமும் துயரமும் பொருந்தி யிருக்கும்.

## கேதுதிசையில் சுக்கிரபுத்தி
## 1-வருஷம் 2-மாதம்

சுக்கிரபகவான் ஜனன லக்ன குடும்பசுக சப்தம பாக்கிய இலாப ஸ்தானாதிபதியாய் ஆட்சி, உச்ச, நட்பு பெற்று, திசாநாதனாகிய கேது பகவானுக்கு கேந்திர ஸ்தானத்திலிருந்தால் வித்யாபி விர்த்தியும், ஞானமும் சங்கீத பிரியமும், தாசிகள் நேசமும், குடும்ப சவுக்கிய

மும், திரவிய லாபமும், சரீராரோக்கிய சுகசவுக்கியமும் பொருந்தி யிருக்கும். ஆனால், சுக்கிரபகவான் பகை நீச ஸ்தானத்திலிருந்து ஜனன லக்கினத்தின் சஷ்டாஷ்டம விரயஸ்தானத்தில் பகை நீசமாயிருந்து திசாநாதனுக்கு மறைவு ஸ்தானமா யிருந்தால் ஸ்திரீகளால் கலகம் பந்து மித்திரர் மனவெறுப்பு, கஷ்டமும், கவலையும், தீராத் துயர மும், துன்பமும் பொருந்தி யிருக்கும்.

## கேதுதிசையில் சூரியபுத்தி
### 4-மாதம் 6-நாள்

சூரியபகவான் ஜனன லக்கினத்திற்கு மூன்று பதினோராமிடத் ததிபதியாய் ஆட்சி, உச்ச, நட்பு ஸ்தா னத்திலிருந்து திசாநாதனாகிய கேது பகவானுக்கு கேந் திராதிபதியா யிருந்தால் மனோற்சாகம், தைரியமும், வியாபார லாபம், கீர்த்தி பிரகாசமுமா யிருக்கும். ஆனால், சூரியபகவான் அஷ்டம விரயஸ்தானத்தில் பகை நீசம் பெற்று திசாநாதனுக்கு சஷ்டாஷ்டம விரயஸ்தானத்தி லிருந்தால் அக்கினிபயம், உஷ்ணஜுரம், சத்துரு விரோ தம், திரவிய நஷ்டம், கைப்பொருள் சேதமும், பலவித மான துன்பமும் துயரமும் பொருந்தி யிருக்கும்.

## கேதுதிசையில் சந்திரபுத்தி
### 7-மாதம்

சந்திரபகவான் ஜனன லக்கின வாக்குஸ்தான கேந்திர திரிகோண இலாபஸ்தானத்திலிருந்து திசா நாதனாகிய கேது பகவானுக்கு கேந்திர ஸ்தானத்தி

விருந்தால் சரீர சவுக்கியமும், திரவியலாபமும், பந்து ஜனக்கூட்டமும், சுகசவுக்கியமும், சரீராரோக்கியமுமா யிருக்கும். ஆனால், சந்திரபகவான் ஜனன லக்கினத்திற்கு ஆறு எட்டு பனிரெண்டா மிடத்திலிருந்து பகை நீசமாய் சனி, ராகு, கேது பார்வை பெற்றிருந்தால் பலவிதமாகிய மனஸ்தாபமும், விஷபயமும், பித்த சீதள ஜுரமும் கவலையும், கஷ்டமுமா யிருக்கும்.

## கேதுதிசையில் செவ்வாய்புத்தி
## 4-மாதம் 27-நாள்

செவ்வாய் பகவான் ஆக்ஷி, உச்ச நட்பாயிருந்து ஜனன லக்கினத்திற்கு மூன்ருறு பதினேரும் வீட்டி விருந்து திசாநாதனுகிய கேதுபகவானுக்கு கேந்திர ஸ்தானத்தி லிருந்தால், மனதைரியம், உற்சாகம், சரீரா ரோக்கியம், கல்வி, ஞானம், வித்யாபி விருத்தி, உத்தி யோக விருத்தி, திரவியலாபம், மாதா பிதா களத்திர புத்ர சுகசவுக்கியமாயிருக்கும். ஆனல் செவ்வாய்பகவான் பகை நீசஸ்தானத்திலிருந்து சூரியன் சனி பார்வை பெற்று திசாநாதனுக்கு மறைவு ஸ்தானத்திலிருந்தால் பித்த உஷ்ண வியாதி, ஜுரம், சத்துருவிரோதம், மன விசாரம், திகில், கஷ்ட நஷ்டங்களும் உண்டாகும்.

## கேதுதிசையில் இராகுபுத்தி
## 1-வருஷம் 18-நாள்

இராகுபகவான் மேஷம், ரிஷபம், கடகம், கன்னி, விருச்சிகம் மகரராசியிலிருந்து ஜனன லக்கினத்தில்

மூன்ருறு பதினொன்றிலிருந்து குரு பார்வை பெற்ருல் திடச்சித்தம், வியாபார விருத்தி, உத்தியோகத்தில் மேன்மை, கீர்த்திப் பிரகாசமும் திரவிய லாபமுங் கிடைக்கும்.

## கேதுதிசையில் குருபுத்தி

## 11-மாதம் 6-நாள்

குருபகவான் ஆட்சி உச்ச நட்பாய் ஜனன லக்கின குடும்ப சுகசப்தம பாக்கிய லாபஸ்தானத்திலிருந்து திசா நாதனுகிய கேதுபகவானுக்கு கேந்திராதிபதியா யிருந்தால் வித்யாலாபம், ஞானம், கல்வி, தேவதாபூசை தீர்த்தயாத்திரை திரவிய லாபம், உத்தியோக சம்பத்து வியாபாரவிருத்தி, மனோற்சாகம், மனைவி மைந்தர் மாதா பிதா பந்து ஜனங்களின் சுகசவுக்கிய முதலான நன்மை யனைத்தும் கிடைக்கும். ஆனல், குருபகவான் பகை நீசமாய் மூன்ருறு எட்டு பனிரெண்டாயிடத் ததிபதியாய் பகை நீசமாயிருந்து சனி ராகு பார்வை பெற்று திசா நாதனுக்கு மறைவு ஸ்தானத்திலிருந்தால் பலவிதமான மனச்சஞ்சலம், வியாஜ்ஜியம், வழக்கு சூதகம், வறுமை, விஷபயம், சத்துரு விரோதம், உத்தியோக கலகம், வியாபார நஷ்டம், கலகம், கலவரம், துன்பம், துயரமனைத்தும் நேரிடும்.

## கேதுதிசையில் சனிபுத்தி

## 1-வருஷம் 1-மாதம் 9-நாள்

சனிபகவான் ஆட்சி நட்பு உச்சனுய் ஜனன லக்கினத்தின் மூன்ருறு பதினொன்றில் அமர்ந்து திசா

நாதனாகிய கேதுபகவானுக்கு கேந்திர ஸ்தானத்திலிருந்தால் புத்திகூர்மை, ஞாபகசக்தி, வித்யாலாபம், உத்தியோக விருத்தி, திரவியலாபம், மாதா பிதா களத்திர புத்திர பந்து ஜனங்களின் சுக சவுக்கியமும் மனோற்சாகமும் பொருந்தி யிருக்கும். ஆனால், சனி பகவான் பகை நீசஸ்தானத்திலிருந்து ஜனனலக்ன கோண திரிகோணாதிபதியால் திசாநாதனுக்கு மறைவு ஸ்தானத்திலிருந்து சூரியன், செவ்வாய் பார்வை பெற்றால் மதிமயக்கம், மனக்கிலேசம், பிதா உஷ்ண வியாதி, சத்துரு விரோதம், தூர தேச பிரயாணம், சண்டை சச்சரவு, வழக்கு வியாஜ்ஜிய கஷ்ட நஷ்டங்களு முண்டாகும்.

## கேதுதிசையில் புதன்புத்தி
## 11-மாதம் 27-நாள்

புதபகவான் ஜனன லக்கின குடும்ப சுகசப்தம பாக்கிய ஜீவன லாபஸ்தானாதிபதியாய் நட்பாட்சி உச்ச ஸ்தானத்திலிருந்து திசாநாதனாகிய கேதுபகவானுக்கு கேந்திராதிபதியா யிருந்தால் வித்தியாலாபம், வியாபார லாபம், உத்தியோகவிர்த்தி, மனைவி மைந்தர் மாதா பிதா சுற்றத்தார் சுகசவுக்கியம், உத்தியோகஸ்தர் நேசம், திரவியலாப மனைத்தும் மங்களகரமாய் நடக்கும். ஆனால், புதபகவான் பகைநீசமாய் சஷ்டாஷ்டம விரய ஸ்தானத்திலிருந்து திசாநாதனுக்கு மறைவு ஸ்தானத்திலிருந்தால் மந்தபுத்தி, மன விசாரம், திகில், பயங்கரம், சூதகம்

வியாதி வறுமை முதலான கஷ்ட நஷ்டங்களெல்லாம் தோன்றும். *

குரு சிஷ்ய சம்பாஷணையாகிய
சோதிட அரிச்சுவடி முதல் பாகம்
முற்றிற்று.

---

☞ * இதற்குப்பின் இரண்டாம் பாகத்தில் மற்ற விஷயங்களைப் பார்த்துக் கொள்ளவும்.

உ

கடவுள் துணை

குரு சிஷ்ய சம்பாஷணையாகிய

# சோதிட அரிச்சுவடி



## (இரண்டாம் பாகம்)

### கணேசர் துதி

எண்சீரடி விருத்தம்

ஆதிபராசத்திமைந்தன் கணேசன்பாதம்
அனுதினமும் மனதிருத்திமாநிலத்தில்
ஜோதிடநூலாராய்ந்து மானிடர்க்கு
சொல்லுகிறேன் அவரவர்கள்ஜாதகத்தை
நீதிசேர்பலன்களையான் விபரமாக
நிகழ்த்துவேன் மாணுக்கா நீயுங்கேட்க
ஓதினேன் முதற்பாகந் தன்னிலன்பாய்
உற்றஇரண்டாம்பாகம் சொல்லுவேனே.

சொல்லுவேனிரண்டாம் பாகத்திலுற்ற
ஜோதிடத்தினிலையதனைக் கவனித்தோர்ந்து
தொல்லுலகில்மாந்தர்கள் முன்செய்தகர்மத்தால்
தோற்றுகின்றசுகதுக்க மிரண்டுங்கண்டு
நல்லபலன்துர்ப்பலனிவ் வேளாவேளை
நடக்குமென்றுஜாதகங்கள் மதித்துக்கொண்டு
செல்வந்தராயிருக்கும் சமயங்கண்டு
செய்கின்றமுயற்சியெலாம் ஜெயங்கொள்வாரே.

சீஷன் :—குருநாதா! சுக்கிர திசையில் நடக்கும் ஒன்பது புத்திநாதர்களின் பலன்களையும் விபரமாய் தெரிவிப்பீர் சுவாமி.

குரு:—அவ்விதமே சொல்லுகின்றேன் கவனிப்பாய்.

### சுக்கிரதிசையில் சுக்கிரபுத்தி
### 3-வருஷம் 4-மாதம்

சுக்கிரபகவான் லக்னகுடும்ப சுக சப்தம பாக்கிய லாபாதிபதியாய் ஆக்ஷி உச்சநட்பு ஸ்தானத்திலிருந்தால், கல்வி, ஞானம், வித்யாலாபம், உத்தியோகவிர்த்தி, வியாபார லாபம், திரவிய லாபம் உண்டாகும். ஆனால், சுக்கிரபகவான் ஜனன லக்கினத்திற்கு ஆறெட்டு பனிரெண்டாமிடத்ததிபதியாய்ப் பகை நீசஸ்தானத்திலிருந்தால் பலவிதமாகிய கஷ்ட நஷ்ட கலகமும், வியாதியும் சத்துரு விரோதமு முண்டாகும்.

### சுக்கிரதிசையில் சூரியபுத்தி
### 1-வருஷம்

சூரியபகவான் ஜனன லக்கினத்திற்கு மூன்றாறு பதினொரு மிடத்திலிருந்து நட்பாக்ஷி, உச்சமா யிருந்தால் பலவித நன்மையும் சுகசவுக்கியமு முண்டாகும். ஆனால், சூரியபகவான் சஷ்டாஷ்டம விரயஸ்தானத்தில் பகை நீசமா யிருந்து திசாநாதனுக்கு மறைவு ஸ்தானத்திலிருந்தால் வியாதி, சத்துருபயம், பலவித கஷ்ட நஷ்டங்கள் உண்டாகும்.

## சுக்கிரதிசையில் சந்திரபுத்தி
## 1-வருடம் 8-மாதம்

சந்திரபகவான் ஜனன லக்கினத்திற்கு கோண திரி கோண ஸ்தானாதிபதியாகிய நட்பாட்சி உச்ச ஸ்தானாதி பதியா யிருந்து திசாநாதனாகிய சுக்கிர பகவானுக்கு கேந்திர ஸ்தானத்திலிருந்தால் பலவிதமான நன்மையும், சுக சவுக்கியமும் திரவிய லாபமும் கிடைக்கும். ஆனால், சந்திரபகவான் சஷ்டாஷ்டம விரயஸ்தானத்திலிருந்து, பகை நீசமாய் திசாநாதனுக்கு மறைவு ஸ்தானத்திலிருந் தால் பலவித கஷ்ட நஷ்டமும் சத்துரு விரோதமு முண் டாகும்.

## சுக்கிரதிசையில் அங்காரகபுத்தி
## 1-வருஷம் 2-மாதம்

அங்காரக பகவான் நட்பாட்சி உச்சனாய் ஜனன லக்கினத்திற்கு, மூன்றுவது இலாபஸ்தானத்திலிருந்து திசாநாதனாகிய சுக்கிரபகவானுக்குக் கேந்திரஸ்தானத்தி லிருந்தால் தைரியம் வீரம், உத்தியோகவிருத்தி, வியா பாரலாபம், திரவிய லாபமும் கிடைக்கும். ஆனால், செவ் வாய் பகவான் பகை நீசமா யிருந்து ஜனன லக்கினத் திற்கு அஷ்டம விரய ஸ்தானத்திலிருந்து திசாநாதனுக்கு மறைவு ஸ்தானத்திலிருந்தால் வியாதி, சத்துரு விரோதம் பலவிதமான கஷ்ட நஷ்டங்களும் தோற்றும்.

## சுக்கிரதிசையில் இராகுபுத்தி
## 3-வருடம்

இராகு பகவான் ஜனன லக்கினத்திற்கு மூன்றுறு பதினொன்றிலிருந்து குருபகவான் பார்வை பெற்று திசா

நாதனுகிய சுக்கிர பகவானுக்குக் கேந்திர ஸ்தானத்தி லிருந்தால் பலவித நன்மையும் திரவிய லாபமும் உண்டாகும். ஆனுல், இராகு பகவான் ஜனனலக்ன அஷ்டம விரயஸ்தானத்திலிருந்து சனி, சூரியன் பார்வை பெற்று திசாநாதனுக்கு மறைவு ஸ்தானத்திலிருந்தால் பலவிதமாகிய கஷ்ட நஷ்டங்களும், வியாதி, சத்துரு பயமு முண்டாகும்.

## சுக்கிரதிசையில் குருபுத்தி
## 2-வருஷம் 8-மாதம்

குருபகவான் லக்கின குடும்ப சுக சப்தம பாக்கிய ஜீவன லாபஸ்தானுதிபதியாய், நட்பாட்சி உச்சனுய் திசாநாதனுகில் சுக்கிர பகவானுக்குக் கேந்திர திரிகோண ஸ்தானுதிபதியா யிருந்தால் கல்வி, ஞானம், வாத்திமைத் தொழில், பிரசங்கம், திரவியலாபம், சுகசவுக்கியமா யிருக்கும். ஆனுல், குருபகவான் பகை நீசஸ்தானத்திலிருந்து சுக்கிரபகவானுக்கு மறைவு ஸ்தானமா யிருந்தால் பலவித கஷ்ட நஷ்டமும் தீராக் கவலையுமா யிருக்கும்.

## சுக்கிரதிசையில் சனிபுத்தி
## 3-வருடம் 2-மாதம்

சனி பகவான் ஜனன லக்கினத்திற்கு மூன்று பதினேராமிடத்திலிருந்து நட்பாட்சி உச்சனுய் திசாநாதனுகிய சுக்கிர பகவானுக்குக் கேந்திர ஸ்தானத்தி லிருந்தால் பலவித நன்மையும், திரவிய லாபமும், சுகசவுக்கியமும் உண்டாகும். ஆனுல், சனி பகவான்

பகை நீசஸ்தானத்தி லிருந்தும், அஷ்டம விரய ஸ்தானத்திலிருந்து திசாநாதனுக்கு மறைவுஸ்தானத் திலிருந்தால் பலவித கஷ்ட நஷ்டமும், வியாதியும், சத்துரு பயமும் உண்டாகும்.

## சுக்கிரதிசையில் புதன்புத்தி
## 2-வருடம் 10-மாதம்

புதபகவான் ஜனன லக்கினத்திற்குக் கோண திரிகோண ஸ்தானத்தில் நட்பாட்சி உச்சனு யிருந்து திசாநாதனுக்குக் கேந்திர ஸ்தானத்திலிருந்தால் உத்தியோக விருத்தி, வியாபார லாபம், திரவிய லாபம், சுக சவுக்கியமாயிருக்கும். சுக்கிரபகவான் அஷ்ட விரயஸ்தானத்தில் பகை நீசமாயிருந்தால் பலவிதமான கஷ்டமும் திரவிய நஷ்டமுமா யிருக்கும்.

## சுக்கிரதிசையில் கேதுபுத்தி
## 1-வருடம் 2-மாதம்

கேதுப்கவான் ஜனன லக்கினத்தில் மூன்ருறு பதினேராமிடத்திலிருந்து திசாநாதனுகிய சுக்கிர பகவானுக்குக் கேந்திர ஸ்தானத்திலிருந்தால் வித்தியாபிவிர்த்தி, உத்தியோகவிர்த்தி, பெரியோர் சேர்க்கை பந்துஜன மித்திரர் சுகசௌக்கியமாயிருக்கும். கேதுபகவான் திசாநாதனுக்கு மறைவு ஸ்தானத்திலிருந்தால் கஷ்ட நஷ்டமும், வியாதியும், தரித்திரமுமா யிருக்கும்.

*சீஷன்:*—குருசுவாமி! கிரகங்களின் நட்பு, ஆட்சி, உச்சம், சமமென்னும் விபரத்தையும் தெரிவிப்பீர்.

குரு :—அப்படியே தெரிவிக்கின்றேன் கவனிப்பாய்

**மேஷ ராசி**

சூரியன்-உச்சம்
சந்திரன்-சமம்
செவ்வாய்-ஆட்சி
புதன்-சமம்
குரு-நட்பு
சுக்கிரன்-சமம்
சனி-நீசம்
இராகு-பகை
கேது-பகை

**மிதுன ராசி**

சூரியன்-சமம்
சந்திரன்-நட்பு
செவ்வாய்-பகை
புதன்-ஆட்சி
குரு-பகை
சுக்கிரன்-நட்பு
சனி-நட்பு
இராகு-நட்பு
கேது-நட்பு

**ரிஷப ராசி**

சூரியன்-பகை
சந்திரன்-உச்சம்
செவ்வாய்-சமம்
புதன்-நட்பு
குரு-பகை
சுக்கிரன்-ஆட்சி
சனி-நட்பு
இராகு-நீசம்
கேது-நீசம்

**கடக ராசி**

சூரியன்-நட்பு
சந்திரன்-ஆட்சி
செவ்வாய்-நீசம்
புதன்-நட்பு
குரு-உச்சம்
சுக்கிரன்-பகை
சனி-பகை
இராகு-பகை
கேது-பகை

**சிம்ம ராசி**

சூரியன்-ஆட்சி
சந்திரன்-நட்பு

**துலா ராசி**

சூரியன்-நீசம்
சந்திரன்-சமம்

| | |
|---|---|
| செவ்வாய்-நட்பு | செவ்வாய்-சமம் |
| புதன்-நட்பு | புதன் -நட்பு |
| குரு-நட்பு | குரு-பகை |
| சுக்கிரன்-பகை | சுக்கிரன்-ஆட்சி |
| சனி-பகை | சனி-உச்சம் |
| இராகு-பகை | இராகு-நட்பு |
| கேது-பகை | கேது-நட்பு |

| கன்னி ராசி | விருச்சிக ராசி |
|---|---|
| சூரியன்-சமம் | சூரியன்-நட்பு |
| சந்திரன்-நட்பு | சந்திரன்-நீசம் |
| செவ்வாய்-பகை | செவ்வாய்-ஆட்சி |
| புதன்-ஆட்சி | புதன்-சமம் |
| குரு-பகை | குரு-நட்பு |
| சுக்கிரன்-நீசம் | சுக்கிரன்-சமம் |
| சனி-நட்பு | சனி-பகை |
| இராகு-நட்பு | இராகு-உச்சம் |
| கேது-நட்பு | கேது-உச்சம் |

| தனுசு ராசி | கும்ப ராசி |
|---|---|
| சூரியன்-நட்பு | சூரியன்-பகை |
| சந்திரன்-சமம் | சந்திரன்-சமம் |
| செவ்வாய்-நட்பு | செவ்வாய்-சமம் |
| புதன்-நட்பு | புதன்-சமம் |
| குரு-ஆட்சி | குரு-சமம் |
| சுக்கிரன்-சமம் | சுக்கிரன்-நட்பு |

| | |
|---|---|
| சனி-சமம் | சனி-ஆட்சி |
| இராகு-நட்பு | இராகு பகை |
| கேது-நட்பு | கேது-பகை |

| மகர ராசி | மீன ராசி |
|---|---|
| சூரியன்-பகை | சூரியன்-நட்பு |
| சந்திரன்-பகை | சந்திரன்-சமம் |
| செவ்வாய்-உச்சம் | செவ்வாய்-நட்பு |
| புதன்-சமம் | புதன்-நீசம் |
| குரு-நீசம் | குரு-ஆட்சி |
| சுக்கிரன்-நட்பு | சுக்கிரன்-உச்சம் |
| சனி-ஆட்சி | சனி-சமம் |
| இராகு-நட்பு | இராகு-நட்பு |
| கேது-நட்பு | கேது-நட்பு |

சீஷன் :—குரு சுவாமி! கேந்திர திரிகோண ஸ்தானங்களெவை?

குரு :—சரி, சொல்லுகிறேன் கவனிப்பாய்.

கேந்திர ஸ்தானமென்றால் இலக்கினம் சுகஸ்தானம், சப்தமஸ்தானம், ஜீவஸ்தானமுமாகும்.

திரிகோண ஸ்தானமென்றால்: இலக்கினம் பஞ்சமஸ்தானம், பாக்கியஸ்தானமுமாகும்.

சீஷன் :—அபோவிக்கிய ஸ்தானமெவை?

குரு :—3, 6-அபோவிக்கிய ஸ்தானம்.

சீஷன் :—லாபஸ்தான மெவை?

குரு:—11-ம் ஸ்தானமே லாபஸ்தானமாகும். இதனையே பணவரவென்பார்கள்.

சீஷன்:—ஆயுள் ஸ்தானமெவை?

குரு:—ஜனன லக்னத்திற்கு அஷ்டம ஸ்தானமே ஆயுள் ஸ்தானமாகும்.

சீஷன்:—சுவாமி! தாங்கள் முன் புகன்ற கிரக திசா புத்திகளில் மறைவு ஸ்தானமென்றீரே; அது எந்தெந்த ஸ்தானமாகும்.

குரு:—ஜனன லக்கினத்திற்கு 2-3-4-6-8-11-12-ம் ஸ்தானங்களையே வியாழபகவானுக்கு மறைவு ஸ்தானமென்று சொல்லுவார்கள். ஆனால் குரு, சுக்கிரன், புதன் வளர்பிறைச்சந்திரன் ஜனன லக்கினத்தைப் பார்த்தால் மிகவும் நன்மையான சுப பலனைக் கொடுப்பர். சனி, இராகு, கேது லக்கினத்தைப் பார்த்தால் கஷ்ட நஷ்டங்களும் வியாதிகளும் சத்துரு விரோதமும் சம்பவிக்கும். ஆனால், செவ்வாய் ஜனன லக்கினத்தைப் பார்த்தால் களத்திர தோஷமுண்டாகும். சூரியன் லக்கினத்தைப் பார்த்தால் கோபமுடையவர்களா யிருப்பதற்காகும்.

சீஷன்:—மாரக ஸ்தானங்களெவை?

குரு:—ஜனன லக்கினத்திற்கு 2-4-8-10-11-12-ம் ஸ்தானங்களே மாரக ஸ்தானங்களாகும். இவ்விதமான மாரக ஸ்தானாதிபர்களாகிய கிரகங்களே தமது திசைகளில் கொல்வார்கள். ஆனால், எந்தெந்த கிரகங்கள் இரண்டு மாரகஸ்தானாதிபதியாய் வருகின்றதோ அந்த கிரகங்கள் கொல்வார்கள். ஆனால், கண்டம் கண்டாதி

கண்டங்கள் தோன்றி மறையும். குரு, புதன், சுக்கிரன், ஜனன லக்கினத்தைப் பார்த்தால் நவக்கிரக சாந்தியால் சவுக்கியப்படுத்திக் கொள்வதற்காகும்.

சீஷன் விருத்தம்

அன்பான குருவே தாங்கள்
அறிவித்த ஜோதிடத்தில்
நன்மை துன்பங்க ளெல்லாம்
நலமுட னனுபவிக்கும்
தன்மையை யுரைத்தீர் சுவாமி
தரணியில் வருஷம் மாதம்
இன்னின்ன பெயர்க ளென்று
எந்தனுக் குரைப்பீரையா.

குரு சுவாமி! தாங்கள் அடியேன் மீது அன்புகூர்ந்து உலகில் வசித்துலாவும் மனிதர்களின் ஜனன லக்கினத்திற் கிசைந்த ஜோதிட சாராம்சத்தின் கணிதத்திற் கிசைந்த இராசி லக்கினத்தின் கிரகங்களிலிருக்கும் நிலைமையும் அவர்கள் தமது திசாபுத்தியில் கொடுக்கும் சுக துக்கங்களையும் அடியேனுக்கு விபரமாய் உபதேசித்தீர், தமது அனுக்கிரகத்தின்படியே அடியேனும் கவனித்துணர்ந்தேன். ஆனால், மனிதர்களின் வாழ்நாட்களில். வருஷம், மாதம், திதி, நக்ஷத்திரம், யோகம், கரணமாகிய இவைகளின் பெயர்களை வரிசைக்கிரமமாய் அடியேனுக்கு உபதேசித்தருள வேண்டும் சுவாமி.

குரு:— அப்படியே தெரிவிக்கிறேன்; கவனிப்பாய்.

சீஷன்:—சுவாமி! ஈதென்ன நூதன புதுமை தாங்கள் உரைத்தவிதமே வெகுபேர் தமக்கு இராசிநாதன்

திசாநாதன், இலக்கினேசன், புத்திநாதன் அந்தரநாதன் ஆட்சி பெற்ற தமது சொந்த வீட்டிலிருந்தும் பலன் கொடுக்கவில்லையேயென்று பரதவிக்கின்றார்கள். ஆனால், அதன் மர்மம் கவனிக்க வேண்டுமென யானும் வெகு நாளாய் சிந்தித்திருந்தேன். இன்றையதினம் தமது திரு வாக்கினால் வெளியாகுமென்று தமது திருவடியைப் பிரார்த்திக்கின்றேன். சுவாமி! நவக்கிரகாதியோர் தேவர் கள்தானே. அவர்கள் தமது சொந்த வீட்டில் வந்தாலும் சிலருக்கு நன்மையே செய்கிறார்கள். சிலருக்குக் கஷ்டத் தையே விளைவிக்கின்றார்களே, அதென்ன காரணம் சுவாமி.

குரு :—எனது அன்பான சிஷ்யா! நவக்கிரகங்கள் ஒன்பது பேரும் தேவர்கள்தான். ஆனால், அவர்கள் ஜீவர் களின் பாவ புண்ணியங்களுக்குத் தகுந்த விதமான சுகா சுக பலனைக் கொடுக்கும் அதிகாரிகள். ஆகையால், அவர் கள் தமது ஆட்சிவீடு, உச்சவீடு, நட்புவீடு, பகைவீடு, நீசவீடு ஆகிய இந்த ஐந்து விதமான இராசி வீட்டில் வந் தாலும், ஜாதகனின் இராசியை அனுசரித்துத்தான் பலன் தருவார்கள்.

*சீஷன் :—அதெவ்விதமாய் தருவார்கள்? அதன் விவ ரத்தைப் புகல்வீர் சுவாமி.*

*குரு :—சிஷ்யா! கவனமாய்க் கேட்பாய். ஒவ்வொரு மனிதர்களுடைய ராசிகட்கு, 3-6-10-11-ம் இராசிவீட்டில் சூரியன் வந்தால் திரவிய லாபமும் தைரிய சந்தோஷத்*

தையும் கொடுப்பான். மற்ற 1-2-4-5-7-8-9-12-ம் இராசி வீட்டில் வந்தால் கஷ்ட பலனைக் கொடுப்பான். சந்திர னும் அவ்விதமே 1-3-6-7-10-11-ம் இராசிவீட்டிலிருந்தால் நல்ல பலனும், மற்ற 2-4-5-8-9-12-ம் வீட்டிலிருந்தால் கஷ்ட பலனுந் தருவான். செவ்வாய் 3-6-11-ம் இராசியி லிருந்தால் வீரத்தன்மையும், திரவிய லாபமும் தருவார். மற்ற 1-2-4-5-7-8-9-10-12-ம் இராசியிலிருந்தால் பகைவர் களால் பலவிதத் துன்பமும் கவலையுங் கொடுத்துக் கஷ் டப்படுத்துவார். புதன் 2-4-10-11-ம் இராசியிலிருந்தால் புத்தி சாதுரியமும் லட்சுமீகரமும், திரவிய லாபமும் தரு வான். மற்ற 1-3-6-7-8-9-12-ம் இராசியிலிருந்தால் மதி மயக்கம் சோம்பலும் துக்கமும் வறுமையும் தந்து அலைச் சற் படுத்துவார். குரு பகவான் 2-5-7-9-11-ம் இராசியி லிருந்தால் லட்சுமீகரமும், திரவியலாபமும், பெருமையும், புகழும் கீர்த்தியும் தந்து மேன்மையா யிருக்கச் செய்வார். மற்ற 1-3-4-6-8-10-12-ம் இராசியிலிருந்தால் கஷ்டமும், கவலையும், பகைவரால் துன்பமும் துயரமும் அடையச் செய்வார். சுக்கிரன் 1-2-3-4-5-8-9-11-12-ம் ராசியிலிருந் தால் புத்தி விருத்தியும், மனோற்சாகமும், சம்பத்தும், திர விய லாபமும் தருவார். மற்ற 6-7-10-ம் இராசியிலிருந் தால் துக்கமும், துன்பமும் கவலையும் வறுமையும் துயரமுமான கஷ்ட பலனைத் தருவார் சனிபகவான் 3-6-11-ம் இராசியிலிருந்தால் தைரியமும், கீர்த்தியும், திரவிய லாபமும், பலவிதமான நன்மைகளும் கொடுப்பார். மற்ற 1-2-4-5-7-8-9-10-12-ம் இராசியிலிருந்தால் பலவித துன்ப மும் வறுமையும் பகைவரால் கலகமும் வழக்கு முதலாகிய கஷ்ட பலன்களையும் தருவார்.

இராகு கேது 3-6-11-ம் இராசியிலிருந்தால் மன தைரியமும் பலவிதமான நன்மையுந் திரவிய லாபமும் தருவார்கள். மற்ற 1-2-4-5-7-8-9-10-12-ம் இராசியிலிருந தால் கலகமும் துன்பமும், துயரமும், நஷ்டமும், வறுமை யும், திகிலுமாகிய கஷ்ட பலனைத் தருவார்கள். இவ் விதமே நவக்கிரகங்கள் 12-ம் இராசியிலும் சஞ்சரிக்கும் போது ஜன்ம ராசியே முதல் ராசியாக நியமித்துக் கொண்டு மற்ற ராசியாகிய 11-லும் கிரகங்களிருக்கும் நோக்கத்தைக் கண்டு சுபாசுப பலன்களைத் தெரிந்து கொள்ள வேண்டியது.

சீஷன்:—சுவாமி! தாங்கள் உபதேசித்தவை யனைத் தும் கவனித்துணர்ந்தேன். ஆனால், தாங்கள் தெரிவித்த விதமே சிலருக்குச் சுபஸ்தானத்தில் கிரகங்கள் வந்தாலும் கஷ்டபலனைத் தருகிறார்கள். சிலருக்குக் கிரகங்கள் அசுப ஸ்தானத்தி லிருந்தாலும் பலவிதமாகிய நன்மையுந் திர விய லாபமும் தருகின்றார்களே அதன் காரணமென்ன? தெரிவிப்பீர் சுவாமி.

குரு:—சிஷ்யா! நீ உரைத்ததும் உண்மையே! ஒவ் வொரு ஜாதகர்கட்கும் சந்திரனின்ற இராசிவீடு ஜன்ம ராசி யென்றும், உடல்ராசி யென்றும் பெயர். உதய லக் கினமே, ஜன்ம லக்கினம் உயிர்லக்கின மென்றும் சொல் லப்படும். இந்த ஜன்ம லக்கினத்துடனே சேர்ந்த பனி ரெண்டு வீட்டிலிருக்கும் கிரகங்கள் 9 ம் தமது திசாபுத்தி களில் தாங்களிருந்த ஸ்தான பலனை யனுசரித்துப் பலன் தருவார்கள்.

சீஷன்:—அதன் காரணத்தை எனக்குச் சற்று விபரமாய்ச் சொல்வீர் சுவாமி.

குரு:—முதலில் குறிப்பித்திருக்கும் ஜனன லக்கின சக்கரத்தில் சொல்லிபபடியே அவரவர்கள் பிறந்த வேளையில் உதயமான நாழிகை அளவின்படியே குறிப்பித்த லக்கினத்துடனே சேர்ந்த பனிரெண்டு ஸ்தானத்தின் பலனைத் தெரிவிக்கின்றேன் கவனிப்பாய்.

1-இலக்கினம், உயிர்லக்கினம் தனது சுக துக்கம் கவனிப்பது.

2-வது குடும்பஸ்தானம், வாக்குஸ்தானம், வித்யா ஸ்தானம்.

3-வது தைரிய ஸ்தானம், தீரஸ்தானம், சகோதர ஸ்தானம்.

4-வது சுகஸ்தானம், மாதுரு ஸ்தானம், வாகன ஸ்தானம்

5-வது புத்திரஸ்தானம்.

6-வது சத்துஸ்தானம், ரோகஸ்தானம்.

7-வது களத்திரஸ்தானம்; விரயஸ்தானம்.

8-வது ஆயுள் ஸ்தானம்.

9-வது பிதுர்ஸ்தானம், பாக்கிஸ்தானம் கர்ம ஸ்தானம்.

10-வது ஜீவனஸ்தானம், தர்மஸ்தானம்.

11-வது மூத்த சகோதரஸ்தானம், இலாப ஸ்தானம்.

12-வது சயனஸ்தானம், விரயஸ்தானம்.

என்று முன்னமே சொன்னது கோட்சார பலனுக்கிசைந்த பலனென்றால், கிரகங்களின் திசாபுத்திகளுக்கும் வெவ்வேறு விதமான பலன் நடக்கும். அச்சமயம் திசா புத்திகளில் கிரகங்கள் நல்ல பலனைக் கொடுப்பதா யிருந்தால், கோட்சாரத்தில் கிரகங்கள் கெட்ட ஸ்தானத்தி லிருந்தாலும், நல்ல பலனைச் சமமாய்த் தருவார்கள். ஆனால், திசாபுத்தி நாதர்கள் கெட்ட ஸ்தானத்திலிருந்து கொடிய பலனைத் தரும்போது கோட்சாரத்தில் கிரகங்கள் நல்ல ஸ்தானத்திலிருந்தாலும், வறுமையும் சஞ்சலமு மடைந்து, விசனித்துக் கொண்டிருப்பாள்.

*சீஷன்:*---சுவாமி! கிரகங்கள் திசாபுத்திகளில் கஷ்ட சுகத்தைக் கொடுக்கும் ஸ்தானங்களின் விபரத்தைச் சொல்வீர்.

*குரு:*---சிஷ்யா! சூரியன், செவ்வாய், சனி, இராகு, கேது இந்நால்வரும், கேந்திரஸ்தானத்திலிருந்தால் நல்ல பலனும், சந்திரன், புதன், குரு, சுக்கிரன் திரிகோண ஸ்தானத்திலிருந்தால் நல்ல பலனும் கொடுப்பார்கள். இதை யனுசரித்துத்தான் அவரவர்களின் சுகதுக்க பலாபலன்களைக் கவனித்துக் கொள்ள வேண்டும்.

*சீஷன்:*---சுவாமி! முன்னம் தாங்கள் தெரிவித்த விதமாக ஒவ்வொரு இராசியிலும் கிரகங்களிருக்கும் வருஷம்,

மாதம், நாள் தெரிவித்தீரே. ஆனால் நவக்கிரகங்களின் திசை வருஷ மெவ்வளவு?

குரு:—நவக்கிரகங்களின் திசை வருஷம்-120.

சீஷன்:—அப்படியா? ஆனால் ஒவ்வொரு கிரகங்களுக்கும் திசை வருஷம் எவ்வளவு?

குரு:—சொல்லுகிறேன் கவனிப்பாய்.

## நவக்கிரகங்களின் திசை வருஷம்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சூரியனுக்கு | வரு | 6 | சனிக்கு | வரு | 19 |
| சந்திரனுக்கு | ,, | 10 | புதனுக்கு | ,, | 17 |
| செவ்வாய்க்கு | ,, | 7 | கேதுக்கு | ,, | 7 |
| இராகுவுக்கு | ,, | 18 | சுக்ரனுக்கு | ,, | 20 |
| குருவுக்கு | ,, | 16 | | | |
| | | | ஆக. | ,, | 120 |

சீஷன்:—சுவாமி, இந்த ஒன்பது கிரகங்களும் தமது திசையில் எவ்வெவ்விதமான பலன் தருவார்கள்?

குரு:—அடியில் குறிப்பித்த விதமாய்த் தமது திசையில் அவ்வவ்விதமான பலனைத் தருவார்கள்.

## நவக்கிரகங்கள் தமது திசையில் கொடுக்கும் சுபாசுப பலன்கள்

சூரியபகவான் லக்கினம் 3-6-7-10-11-ம் ஸ்தானத்தில் குரு சுக்கிரன் புதன் வளர்பிறைச்சந்திரன் சேர்க்கையானாலும் பார்வையானாலும் தனது திசை 6-வருஷத்திலும் கீர்த்தியும் சம்பத்தும் உத்தியோக விர்த்தியும் பிதா பந்துக்கள் சகாயமும் கிடைக்கும். ஆனால், மேற் குறிப்பித்த

ஸ்தான மல்லாமல் மற்ற ஸ்தானங்களிலிருந்து செவ்வாய்-சனி-ராகு-கேது-பார்வை பெற்றாலும், சேர்க்கையானாலும் பலவிதமான துன்பமும், கஷ்டமும், கவலையும், வறுமையும் தந்து ஊநராயலையச் செய்யும்.

சந்திர பகவானும் சகல ஸ்தானத்திலிருந்து குரு-சுக்கிரன்-புதன்-பார்வை பெற்றாலும், சம்பந்த முற்றிருந்தாலும், தனதான்ய சம்பத்தும், மனைவி, புத்திரர், பந்துஜன சகாயமும் வித்தியாபிவிருத்தி, உத்தியோகமுங் கிடைக்கும். ஆனால், ஆறெட்டு பன்னிரெண்டி லிருந்தாலும் செவ்வாய்-சனி-ராகு-கேது பார்வையானாலும், சம்பந்தமா யிருந்தாலும், மனவிசாரம், சஞ்சலம், மந்தபுத்தி, வறுமை, சீதளசுரம் பகை முதலான கஷ்டங்களை உண்டாக்கும்.

செவ்வாய் பகவான் ஜனனகாலத்தில் கேந்திர ஸ்தானங்களிலிருந்தும் குரு சுக்கிரன் பார்வை பெற்றாலும் சம்பந்தமா யிருந்தாலும், தனது திசை 7-வருஷம் தைரியம், மனோற்சாகம், உத்தியோகவிர்த்தி, திரவியலாபம், அதிகாரம், சம்பத்து கீர்த்தி முதலான நல்ல புலன்களுண்டாகும். ஆனால், கோண ஸ்தான முதலானவைகளிலிருந்தும், சனி-ராகு-கேது பார்வையானாலும், பகையும், சண்டைசச்சரவும், கலகமும், உஷ்ண வியாதிகளு முண்டாகும்.

ஆனால், புதபகவான் 6-9-12-ம் ஸ்தானத்திலிருந்து சனி-ராகு-கேது பார்வையானாலும் சம்பந்தமானாலும் கஷ்ட பலனைத் தருவார். மேஷம்-ரிஷபம்-கடகம்-கன்னி-மகரம் முதலான ஸ்தானங்களி லிருந்தால் தனது திசை

18-வருஷம் வரையிலும் மனதைரியம், உற்சாகம் உத்தி யோக விருத்தி, திரவிய லாபமுங் கிடைக்கும். மற்ற ஸ்தானங்களிலிருந்து செவ்வாய் சனி சம்பந்தமா யிருந் தாலும், பார்வை பெற்றாலும் பலவிதமான கலகமும், சஞ் சலமும், துயரமும், வறுமையும், மனபயங்கரமும் பொருந்தி யிருக்கும்.

குருபகவான் ஜனனலக்கினம் வாக்கு ஸ்தான கோண திரிகோண முதலான ஸ்தானங்களி லிருந்தால் தனது திசை 16-வருஷத்திற்கும் வித்தியாலாபம், உத்தியோக விருத்தி, புத்திரபாக்கியம் பந்துமித்திரர் சகாயம், திரவிய லாபமும் உண்டாகும். ஆறெட்டு பனிரெண்டாம் ஸ்தா னங்களிலிருந்தால் கஷ்டபல னுண்டாகும்.

சனிபகவான் ஜனனகாலத்தில் கேந்திர ஆட்சி உச்ச ஸ்தானத்திலிருந்து குரு–சுக்கிரன்–புதன் பார்வையானு லும் சம்பந்தமா யிருந்தாலும் தனது திசை 19–வருஷத் திற்கும், மனதைரியம், உத்தியோக விர்த்தி, திரவிய லாபம், வியாபாரவிருத்தி, சர்வாதிகார மேன்மை முத லானவை யுண்டாகும். மற்ற கோண திரிகோண ஸ்தா னங்களிலிருந்தால் பலவித கலவரமும், கலகமும் சண்டை சச்சரவும், வழக்கு வியாஜ்ஜியம், வறுமை, கைப்பொருள் சேதம், சோம்பல் முதலாகிய கஷ்டபலனு யிருக்கும். புத பகவான் ஜனன காலத்தில் லக்கினத்திலும் வாக்கு ஸ்தான கோண திரிகோண சப்தம ஸ்தானங்களிலிருந்து சந்திரன்–குரு–சுக்கிரன் பார்வை பெற்றாலும், சம்பந்த

மானுலும் தனது திசை 17-வருஷம் வரையிலும் வித்யாபி விர்த்தியும், வியாபார லாபமும், தனதான்ய சம்பத்தும், கீர்த்தியும் பெருமையும் உண்டாக்கும்.

கேது பகவான் ஜனனகாலத்தில் மேஷம், ரிஷபம், கடகம், கன்னி மகரம் முதலான ஸ்தானங்களிலிருந்தால் வித்தை, ஞானம், அறிவு பெருந்தன்மை உத்தியோக விர்த்தி முதலான நன்மையெல்லாந் தனது திசை 7-வருஷ வரையிலும் கொடுப்பார். ஆனால், மற்ற ஸ்தானங் களிலிருந்து செவ்வாய், சனி பார்வை பெற்றுலும் சம்பந்த மானுலும் கஷ்டத்தையும் நஷ்டத்தையும் கொடுப் பார்.

சுக்கிரபகவான் ஜனனகாலத்தில் லக்னம் வாக்கு ஸ்தானம், கோண திரிகோண ஸ்தானம், சுகசப்தம ஸ்தா னத்திலிருந்தால் திரவிய சம்பத்து, வித்யாபிவிர்த்தி, உத்தியோக சம்பத்து, வேசி நேசம், மனைவி மைந்தர், சம்பத்து, திரவிய லாபமும், சுக்கிரபகவான் தனது திசை யாகிய 20-வருஷம் கொடுப்பார். ஆனுல், மறைவு ஸ்தா னங்களில் பகை நீசமா யிருந்தால், துன்பமும், துயரமும், கலகமும் வறுமையுமாகிய கஷ்ட பலனைக் கொடுப்பார். இவ்விதமே ஒன்பது கிரகங்களும் தமது திசைகளில் அவ ரவர்கள் ஜனன காலத்திலிருந்த தமது திசைகளில் சுபா சுப பலன்களைத் தருவார்கள்.

சீஷன் :—சுவாமி! தாங்களுரைத்த விதமே கவனித் திடினும் ஒவ்வொரு கிரகங்களின் திசைகளின் விபரத் தையு மந்தந்த கிரகங்களிலிருந்த ஸ்தான பலனுக் கிசைந்த பலன்களைக் கொடுக்கும் விபரத்தையும் சொன் னீர். ஆனுல், அந்தந்த கிரக திசையில் நடக்கும் புத்தி நாதர்கள் கொடுக்கும் சுபாசுப பலன்களையும் அடியே னுக்கு விபரமாய் புகல்வீர்.

குரு :—நவக்கிரகங்கள் ஒன்பது பேரில் ஒருவர் திசா நாதரானால் மற்ற கிரகங்கள் அந்தந்த திசையிலேயே புத்திநாதராய் விளங்கித் தமக்குரிய பலாபலன்களைத் தருவார்கள்.

சீஷன் :—சுவாமி! இந்த விஷயம் அடியேனுக்கு விவரமாய்ச் சொல்வீர்.

குரு :—சிஷ்யா! யான் உனக்கு முன்னமே தெரிவித்திருக்கிறேனே அவ்விதமாகவே குழந்தை பிறந்த தினத்தில் எந்த நக்ஷத்திரம் வருகிறதோ அந்தந்த நக்ஷத்திரத்தில் பிரவேசிக்கும் கிரகங்களே திசாநாதர்களாய் வருவதுண்டு. அவர்களைச் சேர்ந்த மற்ற கிரகங்களே புத்திநாதர்களாயிருந்து அவரவர்கட்கிசைந்த பலாபலன்களைத் தருவார்கள்.

சீஷன் :—சுவாமி! அந்த நக்ஷத்திரங்களின் ஆதியந்த பரம நாழிகையின் விபரமெவ்வளவு? அவை கிழமையைப் போல் வராமல் ஒவ்வொரு நாட்களிலும் பேதப்பட்டு வருவதேன்?

குரு:—சிஷ்யா! கவனமாய் கேட்பாய்! கிழமைகளாகிய ஞாயிறு, திங்கள், செவ்வாய், புதன், குரு, சுக்கிரன், சனி என்னும் கிழமைகள் 7-க்கும் கால அளவின்படியே முதல்நாள் 1, சூரிய உதயாதி முதல் மறுநாள் சூரிய உதயாதியில்தான் அடுத்த கிழமையாகும். எப்படியெனில் ஞாயிற்றுக்கிழமை காலை உதயாதியில் 1-நாழிகை என்ணிக்கையாக மறுநாள் உதயத்தில் 60-நாழிகையாகும். அப்போது திங்கட்கிழமையாகும். இந்த 60-நாழிகைக்கு இங்கிலிஷ மணி வேளை 24-மணி ஆகும். அதனாலேதான் கிழமைகள் மாத்திரம் நாள் தவறாமல் பொருந்தி யிருக்கும். நட்சத்திரங்கள் அவ்விதமாய்ப் பொருந்தா

ஏனெனில், நட்சத்திரங்கள் 27-க்கும் நாழிகைகள் பேதப் பட்டு வருவதால் முதல்நாளில் கொஞ்சமும் மறுநாள் மற் றதும் முடிந்து அடுத்த நக்ஷத்திரமும் வந்து விடும். இதனுலேதான் நட்சத்திர பேதமாய் விடுவதுடன் முதல் நாளிலும் இருந்த நட்சத்திரமே மறுநாளிலு மிருப்பதுடன் அடுத்த நட்சத்திரமும் உதயமாகும் இதற்கிசைந்த கிரக திசாபுத்திகளும் அமையும்.

## சீஷன் சொல்வது

### விருத்தம்

அன்புடை என்குருவே நட்சத்திரங்கள்
அறுபது நாழிகைக்கும் விபரந்தன்னை
தன்மையுட னெந்தனுக்குப் புகல்வீரென்று
தமதுதிரு வடிதன்னைத் துதித்துநிற்கும்
என்மனதிற் கிசைந்தபடி சொல்வீரென்று
இருகரமும் சிரமீது குவித்துயானும்
நன்மையுட னேதுதித்தேன் ஜோதிஷத்தை
நலமுடனே கற்பிக்கும் குருவே போற்றி.

*சீஷன்:*—சுவாமி தாங்கள் சொன்ன விதமே ஒவ் வொரு நாளிலும் நட்சத்திரம் பேதப்படுவதால் அந்த நட்சத்திரங்களின் நாழிகை விபரத்தை அடியேனுக்கு விபரமாய்த் தெரிவிப்பீர்.

குரு:—சரி! அப்படியே தெரிவிக்கிறேன் கவனிப் பாய்.

## நக்ஷத்திர ஆதியந்த பரம நாழிகை

| | | | |
|---|---|---|---|
| அஸ்வணி | 65 | சுவாதி | 65 |
| பரணி | 56 | விசாகம் | 61 |
| கிருத்திகை | 56 | அனுஷம் | 60 |
| ரோகணி | 56 | கேட்டை | 62 |
| மிருகசீரிடம் | 56 | மூலம் | 63½ |
| திருவாதிரை | 56 | பூராடம் | 62 |
| புனர்பூசம் | 62 | உத்திராடம் | 55 |
| பூசம் | 52 | திருவோணம் | 65 |
| ஆயில்யம் | 56 | அவிட்டம் | 66½ |
| மகம் | 54 | சதயம் | 53½ |
| பூரம் | 56 | பூரட்டாதி | 61½ |
| உத்திரம் | 56 | உத்திரட்டாதி | 63½ |
| அஸ்தம் | 57 | ரேவதி | 64 |
| சித்திரை | 60 | | |
| | | ஆக. நக்ஷத்திரங்கள் | 27 |

மேற்குறிப்பித்த விதமாக நக்ஷத்திரங்களின் நாழிகை பேதப்படுவதினுல்தான் ஒவ்வொரு தினத்திலும் நக்ஷத்திரங்கள் வித்தியாசமாய்ப் புரண்டு வருவதும், ஒவ்வொரு நக்ஷத்திரம் 2-நாளையிலும் பொருந்தியிருக்கிறது. ஆகையால் காலநிர்ணய அளவின்படியே நக்ஷத்திரத்திற்கு 60-நாழிகைதானென்று தீர்மானமாய்ச் சொல்ல முடியாது.

சீஷன்:—சுவாமி கிரகங்கள் 9-பேரும் திசாநாதர்களாக வருவது எந்தெந்த நக்ஷத்திரங்களால்? அதன் விபத்தையும் அடியேனுக்கு விபரமாய்ச் சொல்வீர்.

கயவர்களும் கபடர்களும் நம்பமாட்டார்
காசினியி லவர்வார்த்தை கவனிக்காமல்
பயமில்லாதைரியமாய் வர்த்தக உத்யோகம்
பக்ஷமுடன் செய்தால்நற் பலனுண்டாமே.

(இ-ள்.) என் அன்பான சிஷ்யனே! மனிதர்களின் கால நிர்ணயத்தின்படியே அனுபவிக்கும் சுகதுக்கத்தின் பலனை அவரவர்கள் பிறக்கும்போது உதயமாகும் இலக்கினத்தை இன்னதென் றாராய்ந்துணர்ந்து அந்த லக்கினத்திலிருக்கும் கிரகங்கள் கொடுக்கும் பலாபலன்களை இன்னின்னவையென்று கவனித்து அதன்படியே மனிதர்கள் செய்யும் காரியமும், வியாபாரம், உத்தியோகம் முதலானவை செய்வதற்குப் பொருந்தி யிருக்கும்.

சீஷன் விருத்தம்

அன்பான குருநாதா பூலோகத்தில்
அவரவர்கள் வெவ்வேருய் சுகதுக்கத்தை
துன்பசுக மாகவே யனுபவிக்கும்
சூக்ஷ்மத்தை யெந்தனுக்கு விபரமாக
நன்மையுட னினிதாக உரைப்பீரென்று
நலமாயுன் பாதத்தைப் பணிந்தேன்சுவாமி
பன்னுவீ ரென்மீது கருணை கூர்ந்து
பனிரெண்டு ராசிகளின் பலனைத்தானே.

(இ-ள்.) சுவாமி! உலகிலுதித்த மனிதர்கள் சகலரும் பகவானுடைய கிருபையால்தானே பிறந்தவர்கள்; சிலர் ஏழைகளாகவும், சிலர் தனவந்தர்களாகவும், சிலர் அங்கஹீன வியாதியஸ்தராகவும், சிலர் அழகானந்த முகவஜீகர தேஜசுடையவர்களாயிருப்பதும், சிலர் தான்யசம்பத்

துடனிருப்பதும், சிலர் தரித்திர இம்சையாயிருப்பதும், சிலர் புத்ர மித்ர களத்ரபந்துக் கூட்டத்துடன் குடும்ப ரக்ஷகரா யிருப்பதும், சிலர் ஆதரவில்லா பரதேசியாய் அலைந்து திரிவதுமென்ன காரணமோ? அவை யனைத்தும் அடியேனுக்கு விபரமாய்ச் சொல்வீர்.

## குரு சொல்வது

எண்சீர் விருத்தம்

அவரவர்கள் முன்செய்த வினையினாலே
அவனியில்தாய் வயிற்றிலிருந் துதிக்கும்போது
நவக்கிரகம் பனிரெண்டு ராசிதன்னில்
நலமுடனே தானிருக்கும் சமயம்பார்த்து
தவருமல் சுகாசுகத்தை கொடுப்பதென்று
தாரணியின் ஜோதிடநூ லுரைப்பதெல்லாம்
கவனமுட னாய்ந்து பலனைக்கண்டோர்
காசினியின் மாய்கையெனக் கருதுவாரே.

(இ-ள்.) அன்பான சிஷ்யா! மனிதர் முன் ஜென்மத்திற் செய்த கர்மானுசாரத்தினால் மறு ஜெனனத்தில் தாயார் வயிற்றிலிருந்து பூமியிற் பிறக்கும்போது பஞ்சாங்கத்தைப் பார்த்து அன்றைய தினத்தின் நட்சத்திரத்தில் சந்திரனிருக்கும் ஸ்தானமே ஜென்மராசி யென்றும் பிறந்த வேளையை ஜனன லக்கினமென்றும் கவனித்துக் குறிப்பித்துக்கொண்டு அந்த லக்கினத்தின் பலனைக் கவனித்தால் அவரவர்களின் ஆயுள்வரையிலும் அவரனுபவிக்கும் சுகதுக்கங்கள், அவரவர் அனுபவிக்கும் கஷ்

டங்களும், அவர்கள் ஆயுள் முதலானவை அறிய குறிப்பாகும். இலாப நஷ்ட மிவ்வளவென்றும் கவனிப்பதற்காகும்

### சீஷன் விருத்தம்

அவனியிலே பிறந்திருக்கும் மனிதர்தங்கள்
அல்லல்துன்பத்தால் திகைத்துக் கலங்கும்போது
கவனமுடன் அவரவர்பேர் ராசிபார்த்து
கழறுவீரென்று லெவ்விதமாய்ச் சொல்வேன்
தவயோகம் புரியுமெந்தன் குருநாதா நீர்
தயைபுரிந்து பனிரெண்டு ராசிதன்னில்
நவக்கிரக மிருந்துபலன் கொடுப்பதெல்லாம்
நவிலுவீ ரென்றுமுமைப் பணிந்திட்டேனே.

(இ-ள்.) சுவாமி! உலகத்தில் பிறந்த மனிதர்கள் தமது கால வித்தியாசத்தினால் கஷ்டமும் கவலையும் அதிகரித்துத் தமது பேர் ராசியைப் பார்த்துபலனை சொல்வீரென்றால், அதற் கெவ்விதமாய்ச் சொல்வதோ அதன் விபரத்தை அடியேனுக் கருளிச் செய்வீர் சுவாமி!

### குரு விருத்தம்

உலகுதனில் மனிதர்கள் பிறந்தநாளில்
உற்றநக்ஷத் திரத்தி னெழுத்தினாலே
நிலையான பேரமைத்துப் பொருத்தமாக
நீட்டிய அக்ஷரஞ்சேர்த்துப் பேருமிட்டால்
கலவரமில் லாமலந்த ராசிவீட்டில்
கதிர்மதிசேய் மால்குருசுக்கிரன் சனியும்பாம்பும்
நலமுடனே யிருந்துபலன் கொடுக்குமார்க்கம்
நவிலுவே னென்சிஷ்யா கவனிப்பாயே.

(இ-ள்) எனது அன்பான சிஷ்யா! நீ கவனிப்பாய்; உலகத்திலிருக்கும் மனிதர் தமது பேர் ராசியைப் பார்த்துப் பலன் சொல்லென்றால், அவர்கள் பெயரைக் கேட்டால், அவர்கள் தனது பெயர் மதுரையென்றால், அப்பேரின் முதலெழுத்து ம என்றிருப்பதால் மக நக்ஷத்திரத்திற்கு நாம நக்ஷத்திர எழுத்துக்கள் (ம-மி-மு-மெ) ம-என்ற முதலெழுத் திணைந்த பெயர் மதுரை. அந்த நக்ஷத்திரத்திற்கு அமைந்த ராசி எது என்றால் மகம், பூரம், உத்திரம் முதற் பாதமும் கொண்டது சிம்மராசியாகும். அந்த ராசியே முதல் வீடாகக்கொண்டு மற்ற பதினொரு இராசி வீட்டிலு மிருக்கும் கிரகங்களால் இன்னின்ன பலன் நடக்குமென்று தெரிந்துரைப்பாயானால் அவரவர்கள் அனுபவத்திற்குப் பொருந்தி யிருக்கும்.

அதெவ்விதமென்றால்,

விருத்தம்

சூரியன் ஜன்மம் ரெண்டில்
துலங்கிய நாலே ழைந்தில்
பாரிய வொன்பா னெட்டில்
பகர்ந்த பனிரெண்டில் நின்றால்
காரியக் கேடலைச்சல் துர்க்
கனவுகண் டலைநோக் காடு
வீரிய மின்றி நோயால்
வீட்டைவிட் டோட்டுந் தானே.

(இ-ள்.) சூரிய பகவான் ஜன்மராசியிலும் இரண்டு, நான்கு, ஐந்து, ஏழு, எட்டு, ஒன்பது, பனிரெண்டாம் இராசி வீடுகளில் எதிலாவது சூரிய பகவானிருந்தால் தான் செய்ய நினைக்கும் காரிய மாகாது. மனது பல விதமாகிய ஆலோசனையால் அலைந்து கொண்டிருக்கும். இரவில் நித்திரை செய்யும்போது துர்க்கனவு காணும்

வண்ணெரிச்சலா யிருக்கும். சோம்பலாகவும், சரீர அசௌக்கியமாகவும் இடம் விட்டுப் பெயர்வதற்காக வும் தேச சஞ்சாரஞ் செய்வதற்காகிய விருப்பமு முண் டாகும்.

## சூரியன் சுபபலன் கொடுக்கும் ராசிவீடுகள்
## சூரியனிருந்த ராசிகளின் சுபபலன்

*விருத்தம்*

ஞாயிறு மூன்றுமாறும்
நற்பதி னொன்றுபத்து
ஏயுறு மிவ்விடங்கள்
இருந்திடிற் செல்வமுண்டாம்
ஈய்தலு மிரக்கமுண்டாம்
எதிரியை வெல்லலாகும்
சேயது தரிக்கும்பாரில்
தீராநோய் தீருந்தானே.

(இ-ள்.) சூரியபகவான் ஜனன ராசிக்கு மூன்று, ஆறு, பத்து, பதினோராமிடங்களி லிருந்தால் திரவிய லாபமும், தானதருமஞ் செய்யுந் தன்மையும், இரக்கமும், தயாளமும் எதிரியை வெல்லும் தன்மையு முண்டாகும். புத்திர பாக்கியமுங் கிடைக்கும், சரீர வியாதி விலகி சவுக் கியமும் சுகசம்பத்தும் கிடைக்கும்.

## சந்திரன் துர்ப்பலன் கொடுக்கும் ராசி வீடுகள்

*விருத்தம்*

பிறைபனி ரெண்டொன் பானெட்
டிரண்டுநான் கைந்தில்நிற்கில்
சிறையுளான் கிலேசமுள்ளான்
திருடுவான் தீங்குசெய்வான்

நிறையிலான் நன்றியில்லான்
நிஷ்டூரன் நீதியில்லான்
முறையில்லான் வணக்கமில்லான்
மூதேவிக் குறைபுள்ளாவான்.

(இ-ள்.) சந்திரன் ஜனன ராசிக்கு இரண்டு, நான்கு, ஐந்து, எட்டு, ஒன்பது, பனிரெண்டாமிடங்களிலிருந்தால் அந்த ஜாதகர்களுக்குப் பலவிதமான மனசஞ்சலம், நிஷ்டூரம், அநியாய வழக்கு, பலவித கஷ்ட நஷ்டம், சிறைச்சாலையிலிருத்தல், வரன்முறையில்லாமல் வார்த்தையாடுதல், சோம்பல், துக்கம், நித்திரை, மயக்கம், மூதேவி வாசம் பொருந்தியவர்களா யிருப்பதற்காகும்.

## சந்திரன் நல்ல பலன் கொடுக்கும் ராசி வீடுகள்

*விருத்தம்*

சந்திரன் மூன்றே டொன்றுஞ்
சார்பத்துப் பதினொன் றேழும்
இந்திரன் போலேவாழ்வான்
எதிரிமார் பாணியாவான்
தந்திர வாதியாவான்
சந்தான பாக்கியனாவான்
மந்திர வாதியாவான்
வைத்திய வாதனாமே.

(இ-ள்.) சந்திர பகவான் ஜனன ராசிக்கு ஒன்றும் மூன்று, ஆறு, ஏழு, பத்து, பதினொன்றுமிடத்திலிருந்தால், வியாபாரவிருத்தி, உத்தியோகம், சம்பத்து

பகைவர்கட்கு அஞ்சாத தைரியமும், தந்திர சாமர்த்திய மும், வைத்தியத்திலும், வாதத்திலும் சிறந்தவர்களாகவு மிருப்பதற்காகும்.

## செவ்வாய் பகவான் துர்ப்பலன் கொடுக்கும் இராசி வீடுகள்

### விருத்தம்

நிலமகன் ஜன்மந்தன்னில் நிலவியரெண்டில் நான்கில், நலமறுமெட்டிற்பத்தில் நாட்டியபன்னிரண் டில்நின்ருல், பலவிதக்கேடுபெண்டீர் பதிபொருள் நாசம்வைப்பு, குலவியவாயுதத்தால் குலகுணம்பதியும் போமே.

(இ-ள்.) நிலமகனெனும் செவ்வாய்பகவான் ஜனன ராசியிலும், 2-4-6-8-10-12- ஆமிடங்களி லிருந்தால் பல விதமாகி கலகமும் சண்டையும் சச்சரவும், மனையாள் முதலாகிய பந்துக்கூட்டங்களுக்கு வியாதியும் கெடுதியும் கைப்பொருள் சேதமும் வைப்பு முதலிய கஷ்டத்தினுலும் குரூர குணத்தினுலும் இருப்பிடம் வாசஸ்தான முதலா னவை யில்லாமல் மனவிசாரமா யிருக்கும்படியான கஷ்ட மும் கவலையுமா யிருக்கும்.

## செவ்வாய் பகவான் நல்ல பலன் கொடுக்கும் இராசி வீடுகள்

### விருத்தம்

தண்பதி ஞென்றுமாறுந் தன்னுடன் மூன்றும் வீட்டில், திண்குச னிற்கிற்றீர்க்க வயதுடனீகை யுள்ளான், பெண்கலியா ணமுண்டாம் பிள்ளைபாக்கிய முண்டாகும், மண்மனை பயிருமுண்டாம் வாழ்வுகள் மிகவுண்டாமே.

(இ-ள்.) குஜக்கிரகமென்னும் செவ்வாய் பகவான் ஜனனராசிக்கு 3-6-11-ம் வீட்டிலிருந்தால் திரவிய லாபம் சரீராரோக்கியம் சுகசம்பத்தும் புத்திரபாக்கிய சம்பத்தும் மங்களகரமாகிய கலியாண விஷயங்களும், பூமிலாபம் பயிர் விருத்தியும் தனந்தான்ய சம்பத்தும் உண்டாகும்.

## புதபகவான் நல்ல பலன் கொடுக்கும் இராசி வீடுகள்

### விருத்தம்

புந்திதான் ஜென்மந்தன்னில்
பொருந்திமூன் றைந்திலேழில்
உந்தியவெட் டொன்பானில்
உகந்த பன்னிரண்டில்நின்ருல்
சிந்தைபேதகமாம் வித்தை
திரவியங் களவுபோகும்
கொந்தலர்குழலால் சேதங்
கோளிஞற் குற்றமாமே.

(இ-ள்.) புதபகவானனவர் ஜனனராசிக்கு 1-3-5-7-8. 9-12-ம் வீட்டிலிருந்தால் மனச்சோர்வு மறதி, வித்தையின் மீது வெறுப்பு, திரவியங் களவு போவது, மனையாளுக்குக் கஷ்டம், புத்தி தடுமாற்றம், வியாபார நஷ்டம் முதலாகிய பலவித கஷ்ட நஷ்டங்களுமா யிருக்கும்.

## புதபகவான் நல்ல பலன் கொடுக்கும் இராசி விடுகள்

### விருத்தம்

அதுவுடனிரண் டெட்டாறு பன்னொன்றுமிடத்தில், புதனிருந்தக் கால்மென்மேல் புத்தியும் யோக

முண்டாம், சுதனுமேல் சுதனுமுண்டாஞ் சுற்றமுஞ் சுகமுண்டாகும், ரதகஜ துரகஞ்சேனை நாலுமே மிக வுண்டாமே.

(இ-ள்.) புதபகவான் ஜனன ராசிக்கு 2-8-6-11-ம் இடத்திலிருந்தால் அறிவு, ஞானம், புத்தி, விருத்தி யுண்டாகும். மனைவி மைந்தர் சுகஜீவியா யிருப்பதற்காம். பந்து மித்திரர் சுகவாழ்வு, இரதகஜ துரக சேனுசைன்ய லாபமும் கிடைக்கும்.

### குருபகவான் துர்ப்பலன் கொடுக்கும் இராசி வீடுகள்

*விருத்தம்*

பத்துடன்மூன்றுநான்கு பன்னிரண் டெட்டோடுற்ற
மத்திமமாறிலொன்றின் மன்னனிருக்கும்போது
நித்தமுமலைச்சலுற்ற நிட்டூரம்வாதபித்தம்
பெற்றவள்பிறப்புபிள்ளை பெண்சாதிபகையுமாவார்.

(இ-ள்.) குருபகவானுனவர் ஜனனராசிக்கு 1-3-4-6-8-10-12-ம் இடங்களிலிருந்தால், மனச்சோர்வு, திகில், கஷ்டம், கவலை, பகை, வறுமை, கண்டாதி கண்டங்கள் முதலான துன்பம், பிணி முதலான மனவிசாரமாயிருக்கும்.

### குருபகவான் சுபபலன் கொடுக்கும் இராசி வீடுகள்

*விருத்தம்*

பெருபதினொன்றைந்தேழில்
பேர் ஒன்பதாமிரண்டிற்றேவ
குருவரிற் செல்வஞ்சீரூர்
குதிரை வெண்குடை தீவர்த்தி
தருமமு ந் தானமுண்டு
தாய்தந்தை துணையுமுண்டு

அருமையும் பெருமையுண்டாம்
அரசர் சேவையு முண்டாமே.

(இ-ள்.) குருபகவானானவர் ஜனனராசிக்கு 2-5-7-9 11-ம் இடங்களிலிருந்தால் தனதான்ய சம்பத்து, உத்தி யோக சம்பத்து, வியாபாரலாபம், அஸ்வவாகனம், தான தர்மஞ் செய்யும் நற்குணமும், வியாபார லாபமும், தாய் தந்தை மனைவி மைந்தர் சுற்றத்தார் சகாயமும் இலட் சுமி கடாக்ஷமும், பெருமையும், இராஜ தரிசனமுங் கிடைப் பதற்காகும்.

சுக்கிரபகவான் நல்ல பலன் கொடுக்கும்
இராசி வீடுகள்

விருத்தம்

வெள்ளியோ ராறுமேழும்
விளங்கும் பத்தாமிடத்தில்
அள்ளிய செம்பொனுண்டாம்
அன்னதானங்க ளுண்டாம்
வெள்ளியுஞ் செம்புமுண்டாம்
வித்தையும் புத்தியுண்டாம்
தெள்ளிய மொழிவு மென்மேல்
திரவியம் திருவுண்டாமே.

(இ-ள்.) சுக்கிரபகவான் ஜனனராசிக்கு ௬-7-10-ம் இடமாகிய இந்த ஸ்தானங்களி லில்லாமல் மற்ற எந்த ஸ்தானங்களி லிருந்தாலும் திரவிய லாபமும், உத்தியோக சம்பத்தும், வியாபார விர்த்தியும், பொன்பொருள் பூஷ ணாதிகளும், தானதர்ம பரோபகாரஞ் செய்யும்படியான தன்மையும் பொருந்தி யிருக்கும்.

## சுக்கிர பகவான் துர்ப்பலன் கொடுக்கும் இராசி வீடுகள்

விருத்தம்

உக்கிர மாறுமேழு மோர்பத்து பதிகடன்னில், சுக்கிர னிருந்திட்டாலே துன்பமும் தொல்லையுண்டாம், துர்க்குறி மனக்கிலேச சோர்வுடன் சொரியுமுண்டாம், வக்கிரம் பிடித்தாப்போலே மயக்கமே மிகவுண்டாமே.

(இ-ள்.) ஜனனராசிக்கு 6-7-10-ம் இடங்களில் சுக்கிர பகவானிருந்தால், உத்தியோக ஸ்தானத்தில் கலகமும் வியாபார நஷ்டமும் பலவிதமான சஞ்சலமும், கஷ்டமும் கவலையும் அதிகரித்து மனவிசாரமாய் இருக்கும்படியான வெறியர்களைப்போ லிருப்பதற்காகும்.

## சனிபகவான் நல்ல பலன் கொடுக்கும் இராசி வீடுகள்

விருத்தம்

ஆறுபன்னொன்பான் மூன்றில்
அந்தகன் நிற்குமாகில்
கூறுபொன் பொருளுமுண்டாம்
குறைவிலா செல்வமுண்டாம்
ஏறுபல்லக்கு முண்டா
மிடம் பொருளேவலுண்டாம்
காறுபாலஷ்ட லட்சுமி
கடாக்ஷ முண்டாகுந்தானே.

(இ-ள்.) ஜனன ராசிக்கு 3-6-11-ம் இடங்களில் சனி பகவானிருந்தால் உத்தியோக சம்பத்தும் வியாபார லாபமும், திரவிய லாபமும், வண்டி, வாகனாதிகள் முதலான வைபவங்களும் இடம், பொருள், ஏவலாளர் சம்பத்தும், லட்சுமி கடாட்சமும் பொருந்தி யிருக்கும்.

### சனிபகவான் துர்ப்பலன் கொடுக்கும் இராசி வீடுகள்

விருத்தம்

பனிரெண் டொன்பது
　　பத்தேழும் பகரைந்து நாலிலெட்டில்
சனியனே யிருந்தாற்றுன்பம்
　　சஞ்சலம் துக்கமுண்டாம்
முனிவனுல் மூர்க்கரோடு
　　மூண்டிடும் கலகத்தாலும்
மனோவிசா ரத்தினலே
　　மறுநக ரோடுவாரே.

(இ-ள்.) ஜனன ராசிக்கு, 1-2-4-5-7-8-9-10-12-ம் இடங்களில் சனி பகவானிருந்தால், பலவிதமான கஷ்டமும், கவலையும், சஞ்சலமும், திகிலும், பயங்கரமும், பகைவர் துன்பமும், பித்த வியாதியும், துக்கமும், துன்பமும், துயரமும், வியாபாரத்தில் கஷ்டமும், உத்தியோக ஸ்தானத்தில் கலகமும், மனசஞ்சலமும், குடும்பக் கலகமும் பொருந்தி யிருக்கும்.

### இராகு பகவான் துர்ப்பலன் கொடுக்கும் இராசி வீடுகள்

விருத்தம்

ஐந்துபத்தொன்றேழி ரண்டொன்பான்
　　யெட்டில் நானகில்
வந்திட்ட ராகுதன்ஞல்
　　வையக மனிதர் தங்கள்
சிந்தையுட் மிகமெலிந்து
　　திரவிய மழிந்து நோயால்
சந்ததம் வைத்தியத்தால்
　　தனவிரயஞ் செய்வாரே.

(இ-ள்.) இராகு பகவானுனவர் ஜனன ராசிக்கு ஒன்று, இரண்டு, நான்கு, ஐந்து, ஏழு, எட்டு, ஒன்

பது, பத்து, பனிரெண்டாம் இடங்களி லிருந்தால் மனச் சஞ்சலம், திகில், பயங்கரம், பகைவர் விரோதம், உத்தி யோகத்தில் கலகம், வியாபார நஷ்டம், வியாதி, துக்கம், துன்பம், துயரம் முதலான கஷ்ட நஷ்டமா யிருக்கும்.

## இராகுபகவான் நல்லபலன் கொடுக்கும் இராசி வீடுகள்

விருத்தம்

இராகுபன் னொன்றுமூன்று
மிடத்திற் சேரின்
பாகுதேன் பழமும்பாலும்
பதார்த்த மன்ன முண்டாம்
ஆகுங்காரியங்க ளுண்டாம்
அன்னதானங்க ளுண்டாம்
வாகுவைப்பாட்டி யுண்டாம்
வரத்துமேல் வரத்துண்டாமே.

(இ-ள்.) இராகுபகவானவர் ஜனனராசிக்கு மூன்று ஆறு, பதினொன்றும் இடங்களிலிருந்தால் திரவிய லாபம், அறுசுவை பதார்த்த திவ்யான்ன சுகபோஜனாதிகளுடன் பால், பழம், தேன், பலகார வகைகளும், நினைத்த காரியங் கைகூடுதலு முண்டாம். அன்னதானம் செய்யும்படியான நல்ல நினைவும் தன லாபமும் கிடைக்கும். தாசி, வேசி, சுக சவுக்கியமும் பொருந்தி யிருக்கும் உத்தியோக சம் பத்தும், வியாபார லாபமும் மென்மேலும் விருத்தியாகும். திரவிய லாபமும் கீர்த்தியும் பொருந்தி யிருக்கும்.

## கேதுபகவான் துர்ப்பலன் கொடுக்கும் இராசி வீடுகள்

விருத்தம்

கேதுநான் கைந்தெட் டொன்பான்
திட்டமீரைந் திரண்டேழ்

ஓதுபன்னிரண்டி லொன்றில்
சத்துருக் கிளையுந்தீ நாம்
சூதுடன் மயிர்களைந்து
சுடுபட்டு சொரூபமாறிச்
சேதுடன் காசியாத்திரை
தேசாந்திரம் போவார்தாமே.

(இ-ள்.) கேதுபகவான் ஜனன ராசிக்கு ஒன்று, இரண்டு, நான்கு, ஐந்து, ஏழு, எட்டு, ஒன்பது, பத்து, பனிரெண்டா மிடங்களிலிருந்தால் மன பயங்கரமும், கஷ்டமும், கவலையும், துன்பமும், பந்துஜன விரோதமும், சத்துருக்களின் சூதுமார்க்கத்தினுல் பலவிதமான துன்ப மெல்லாம் விளைந்து சகிக்க முடியாமல் தேச சஞ்சாரியாய் சேது, காசி முதலிய க்ஷேத்ர யாத்திரை வாசியாய் அலைந்து திரிந்து மன விசாரமா யிருக்கும்படியாய் நேரிடும்.

## கேதுபகவான் நல்லபலன் கொடுக்கும் இராசி வீடுகள்

*விருத்தம்*

மூன்றுபதி னொன்றிற்கேது
முகமலர்ந் திருக்குமானுல்
ஆன்ரோர்கள் சகாயமுண்டாம்
அதிகார உத்தியோகமுண்டாம்
சான்ரோருஞ் சிநேகமாவார்
சகலசம்பத்து லாபம்
தோன்றியே மனமகிழ்ந்து
சுகமுடன் ஜீவிப்பாரே.

(இ-ள்.) கேதுபகவானுனவர் ஜனன ராசிக்கு மூன்று, ஆறு, பதினொன்ரு மிடங்களிலிருந்தால் ஞானமும், புத்தி யும், பக்தியும், பெரியோர்கள் நேசமும், பந்துக்களின்

சகாயமும் உத்தியோக விருத்தியும், வியாபார லாபமும், பந்துஜன சகாயமும், புத்ர மித்ர களத்ராதி சுக சவுக்கிய மும் உண்டாகி சதாகாலமும் மனோல்லாசமாய் ஜீவித் திருப்பதற்காகும்.

## சீஷன் விருத்தம்

நவக்கிரகமொன்பதுபேர் மனிதர்கட்கு
நற்பலன்துற்பலன்கொடுக்கும் விபரமெல்லாம்
தவறுதலில்லாதெனக்கு உபதேசித்த
தவமுனியேகுருநாதா உம்மால்யானும்
அவனிதனில் ஜோதிஷனாய் பேரெடுத்து
அனைவர்க்கும் ஜாதகங்க ளெழுதித்தந்து
கவனமுடன் பலனுரைக்கும் உண்மையெல்லாம்
கற்றுணர்ந்தேன் குருவேநின் னருளினாலே.

(இ-ள்.) குருநாதா! யான் உமது திருவருட் கிருபா கிஷண்யத்தால் மனிதர்கள் பிறந்த ஜாதக மெழுதுந் தன்மை, அந்த ஜாதகத்தின்படியே இராசி சக்கரத்தி லிருக்கும் கிரகங்களின் பலன்களையும் விபரமாய்ச் சொல் லுந் தன்மையும் கற்றுணர்ந்தேன். ஆனால், மனிதர்கள் பிறக்கும்போது உதயமாயிருக்கும் நக்ஷத்திரங்களில் எவ் வெவ்விதமாய் பலன் கிடைக்குமோ அவ் விபரமெல்லாம் அடியேனுக்குப் புகல்வீர் சுவாமி.

## குரு விருத்தம்

அன்புடையமாணாக்கா நக்ஷத்திரங்கள்
அனுதினமும் ஒவ்வொன்றாய் வரிசையாக
நன்மையாய்காலங்கழியுந் தன்மையாக
நடப்பதற்குஏற்றாப்போல் வருகும்போது

தன்மையாய் பிறந்தவர்கள் பலன்களெல்லாம்
தனித்தனியேபோதிப்பே னிவையனைத்தும்
உன்மனதிலேயிருத்தி கற்றுணர்ந்து
உரைப்பாய்நக்ஷத்ரபல னுலகோருக்கே.

(இ-ள்.) எனது அன்பான சிஷ்யனே! நீ மிகவும் புத்திசாலியானதால் யான் இதுவரையிலுங் கற்பித்தவையனைத்துந் தெளிவாய்க் கற்றுணர்ந்து கொண்டாய். ஆனால், தற்சமயம் அந்த நக்ஷத்திரத்தில் பிறந்தவர்களின் குணாதிசயமும் நடத்தையும் பலனையும் உபதேசிக்கும்படியாய்க் கேட்டாய். அதனையும் உனக்கு விபரமாய்ச் சொல்வேன். கவனிப்பாய். அது எவ்விதமென்றால் தினமொரு நக்ஷத்திரமாக இருபத்தேழு நக்ஷத்திரங்கள் வருகிறது. அப்படியே காலக்கிரமத்தின் பிரகாரமே யுகாயுகங்கள் வரையிலும் இருபத்தேழு நக்ஷத்திரங்களும் அதிலிருந்து பிரண்டு பிரண்டு வந்துகொண்டே யிருக்கும் அதன் விபர மெவ்விதமெனில்:

விருத்தம்

அனுதினமும் நாள்போல் நக்ஷத்திரங்கள்
அமைந்துவரும் போதுதாய் கர்ப்பம்விட்டு
மனமிரண்டு மாநிலத்தில் வருகும்போது
மன்னியதோர் நாளிலுற்ற நக்ஷத்திரத்தை
கனமுடனே பார்த்தந்த வேளைக்கேற்ற
கணிதம்போ லேபலனும் நடக்குமென்று
உனக்கிந்த மர்மத்தைச் சொல்லிவிட்டேன்
உற்றுப்பார்த் ததன்பலனைக் கவனிப்பாயே.

(இ-ள்.) எனது அன்பான மாணவா! தினந்தோறும் நாள் திதி நக்ஷத்திரம் கரணம் யோகமெல்லாம் வரிசைக்கிரமமாய் வரும் சமயத்தில் எந்த நாளையில் ஜாதகன்

தாய் கர்ப்பத்தை விட்டுப் பூமியில் பிறக்கின்ருனே, அந்த நாளிலிருக்கும் நட்சத்திரத்தினுல் அந்த ஜாதகனுக்கு அமையும் சுகதுக்கமாகிய இரண்டுவித மார்க்கமாய் இனி சொல்லிக்கொண்டு வருகிறேன் கவனிப்பாய்

| | | | |
|---|---|---|---|
| அஸ்வணி | 65 | சுவாதி | 65 |
| பரணி | 56 | விசாகம் | 61 |
| கிருத்திகை | 56 | அனுஷம் | 60 |
| ரோகணி | 56 | கேட்டை | 62 |
| மிருகசீரிடம் | 56 | மூலம் | 63½ |
| திருவாதிரை | 56 | பூராடம் | 62 |
| புனர்பூசம் | 62 | உத்திராடம் | 55 |
| பூசம் | 52 | திருவோணம் | 65 |
| ஆயில்யம் | 56 | அவிட்டம் | 66½ |
| மகம் | 54 | சதயம் | 53½ |
| பூரம் | 56 | பூரட்டாதி | 61½ |
| உத்திரம் | 56 | உத்திரட்டாதி | 63½ |
| அஸ்தம் | 57 | ரேவதி | 64 |
| சித்திரை | 60 | | |
| | | ஆக. நக்ஷத்திரங்கள் | 27 |

இவ்விதமாய் இருபத்தேழு நட்சத்திரமும் வரும். ஆனுல், நாழிகை பேதத்தினுல் பிரண்டு வரும்போது, ஆதியந்த பரம நாழிகையின்படி ஒவ்வொரு தினத்தில் ஒவ்வொரு நட்சத்திரமும் முடிவாகி அந்தமானுலும், மற்ெருரு நட்சத்திரம் ஆதியாகிய உதயமானுலும், அவர்கள் பிறந்த சூரியோதய நாழிகையின் காலப் பிரமாணத்தில் எந்தநட்சத்திரமாகுமோ, அந்த நட்சத்திரங்களில் பிறந்த பலனை விபரமாய்ச் சொல்லுகிறேன் கவனிப்பாய்.

## அஸ்வனியில் பிறந்தவர்கள் பலன்

விருத்தம்

சந்ததம்பொய் சொல்லாதோன்
தன்விழி சிவந்திருப்பான்
சுந்தர மாகவேதான்
துலங்குமா பரணம்பூண்பான்
சிந்தையில் கோபமுள்ளான்
சிறந்தநற் கீர்த்தியோங்கி
அந்தமாயிருப்போ ரெல்லாம்
அஸ்வனி நக்ஷத்திரத்தாரே.

(இ-ள்.) அஸ்வனி நக்ஷத்திரத்தில் பிறந்தவர் சிவந்த விழியும், ஆபரணப் பிரியமும், கீர்த்தியும், கோப சிந்தையும் உள்ளவர்களா யிருப்பார்கள். ஆனால், அந்த நட்சத்திரங்களில் எந்தக் கிரகம் ஜனன காலத்தில் உதயமாகிறதோ அதன் பலனையும், முன்பு தெரிவித்த இராசி பலனையும், கிரக பலனையும் ஆராய்ந்து சொன்னால் பலன் நடக்கும். உண்மையான விபரமெல்லாம் ஒழுங்காய் விளங்கும்.

## பரணி நட்சத்திரத்தில் பிறந்தவர் பலன்

விருத்தம்

அன்னை தந்தையர்கள்மீது
அன்புவைத் தெந்தநாளும்
நன்மையாய் ஆதரிப்பார்
நாடிய சொற்பநித்திரை
துன்பஞ் சொற்பகோபி
துலங்கிடும் பரணிதன்னில்
இன்பமாய் பிறந்தோரெல்லாம்
இவ்வித மிருப்பர்தானே.

(இ-ள்.) பரணி நட்சத்திரத்தில் பிறந்தவர்கள் தாய் தக்ப்பனுக்குப் பிரியமானவர்களா யிருப்பார்

கள், தம்மைப் பெற்றவர்களைத் தன்னுயிர்போல காப்பாற்றுவார். சொற்ப நித்திரை புரிவார். சிற்சில சமயம் மனக்கிலேச மதிகரித்து மனிதர்மீது கோப சிந்தையுடையவராக விருப்பார்கள். ஆனால் அந்தக் கோபம் அதிகரிக்காமல் உடனுக்குடனே சாந்தமா யிருப்பார்கள்.

## கிருத்திகை நக்ஷத்திரத்தில் பிறந்தவர்கள் பலன்

பக்தியிற் சிறந்தகோமான்
பகவானைத் தினம்பணிந்து
முத்திமார்க் கத்தில்மேவும்
மூதறி வோன் வித்வானும்
சக்தியிற் சிறந்துபுத்தி
சமர்த்தன் வியா பாரஞ்செய்து
நித்திய பொருளைச்சேர்ப்பார்
நீள்கிருத்தி கையில்ஜனித்தோர்.

(இ-ள்.) கிருத்திகை நட்சத்திரத்தில் பிறந்தவர்கள் தெய்வபக்தியிற் சிறந்து பகவானைத் துதிசெய்வதுடன் கல்வியிற் சிறந்த வித்வானுகவும், ஞானியாகவும் இருப்பதுடனே இல்லற மார்க்கத்திற் கிசைந்த பொருள் சேகரிப்பதற்காக மேன்மையான வியாபாரஞ் செய்தும் கீர்த்திப் பிரகாசமா யிருப்பார்கள்.

## ரோகணி நக்ஷத்திரத்தில் பிறந்தவர்கள் பலன்

அன்புடனே ரோகணியில் பிறந்தபேர்கள்
அயலார்சொல் வுண்மையென நம்புவார்கள்
வன்மைசேர்வார்த்தைகளில் கெட்டிக்காரர்
வையகத்தில் புலவரென பேரெடுப்பார்கள்

அன்னதானஞ்செய்யும் கீர்த்தியொடு
அனுதினமும்தயிர் பால்நெய் விரும்புவார்கள்
இன்னவிதம் ரோகணியில் பிறந்தோருக்கு
இருக்குமென்றுபெரியோர்கள் சொல்லுவாரே.

(இ-ள்.) ரோகணி நக்ஷத்திரத்தில் பிறந்தவர்கள் அயலார் சொல்லும் வார்த்தையை உறுதியாய் நம்புவதுடன் தாங்கள் பேசும்படியான வார்த்தை ஸ்திரப்படுத்தும் சமர்த்தராகவு மிருப்பார்கள். கல்வியிற் சிறந்த புலவரென சகலரும் புகழ்ந்துரைக்கப்படுவார்கள். சதா காலமும் தயிர், பால், வெண்ணெய், மோர், நெய் முதலானவைகள்மீது விருப்ப முடையவர்களாகவும், அன்னதானஞ் செய்யும் தர்ம குணமும், அதற்குத் தகுந்த திரவிய லாபமும் பொருந்தி யிருப்பார்கள்.

## மிருகசீரிட நக்ஷத்திரத்தில் பிறந்தவர்கள் பலன்

### விருத்தம்

அதிகாலேஸ்நானஞ்செய்ய ஆவலுந்றேகுளிப்பார்
துதிமிகும்பகவத்பக்தி துலங்கிடும்ஞானமார்க்கம்
நிதிமிகு நடனநாட்டியம் நீணிலந்தனிலேகாண
மதித்திடுவார்களென்று மிருகசீரிடத்திற்சொல்வாய்.

(இ-ள்.) மிருகசீரிட நக்ஷத்திரத்தில் பிறந்தவர்கள் அதிகாலே யிலெழுந்து ஸ்நானபான நியம நிஷ்டை முடித்துக்கொண்டு பகவத்பக்தி யானந்தமாய் விரதானுஷ்டானம் புரியும் நற்குணமும் ஞானமார்க்கமும் ஆடல்பாடல் சங்கீத கியானத்துடன் கண்டு மனமகிழ விருப்பமுடையவர்களா யிருப்பார்கள்.

## திருவாதிரை நக்ஷத்திரத்தில் பிறந்தவர்கள் பலன்

திருவாதிரையிற் ஜனித்தோர்கள்
திறமாய்பொய்யைப் பேசிடினும்
மருவொன்றில்லா வாசகமாய்
மதிப்பாருலகோர் திடகாத்ர
உருவாய்விளங்கிடுவார் வறுமை
உற்றேதரித்ர மெய்திடினும்
பெருமையாளரைப் போல
பேசிசமர்த்தாய்த் திரிகுவரே.

(இ-ள்.) திருவாதிரை நட்சத்திரத்தில் பிறந்தவர்கள் வாய்சமர்த்தாய் பொய் வார்த்தைப்பேசிடினும் அந்நியர் உண்மையென்றே நம்புந் தன்மையா யிருக்கும். சரீரம் திடகாத்திரமா யிருக்கும். சிற்சில சமயம் வறுமையால் திகைத்துத் தரித்திர இம்சை யடைந்திருந்தாலும் தமது தைரியத்தால் சகலரும் பெருந்தன்மையாய் மதிக்குந் தன்மைக் கிசைந்த சமர்த்தரா யிருப்பார்கள்.

## புனர்பூச நக்ஷத்திரத்தில் பிறந்தவர்கள் பலன்

புனர்பூச நக்ஷத்திரத்தே பிறந்தோர்
புகழானகீர்த்தியா யிருப்பதோடு
மனமகிழ்வாய் சதாகாலம் சுத்தமாக
மகிஷியுடனேயிருப்பார் சமர்த்தராக
இனஜனங்கள் சகலருக்கும் எந்தநாளும்
இளைத்திடாசிங்கம்போல் வழி நடப்பார்
தனவான்போல்பேசிடுவார் அருகிலுள்ளோர்
தான்புகழ்ந்தால்உற்சாக மெய்துவாரே.

(இ-ள்.) புனர்பூச நட்சத்திரத்தில் பிறந்தவர்கள் சகலரும் தன்னைப் புகழ்ந்து பேசுந் தன்மையான கீர்த்தியோடு விளங்குவதுடன் சுத்தமாய் வார்த்தையாடுந் திடசித்தமும் தமது இனஜன பந்து மித்திரர்கள் மெச்சிக் கொள்ளுந் தன்மையான கீர்த்தியுடனே விளங்குவார். சிங்கம்போல் வழி நடக்கும் சாமர்த்தியமும் பொருந்தியிருப்பதுடன் தன்னைப் புகழ்ந்து பேசுவோர் மெச்சிக் கொள்ளும்படியான சாமர்த்திய முடையவர்களா யிருப்பார்கள்

## பூச நக்ஷத்திரத்தில் பிறந்தவர்கள் பலன்

பூசநக்ஷத்திரத்துதித்தோர் புனிதராயுலகில்நாளும்
மாசிலாகுணவானென்று மானிலத்தோர்மதிக்க
வாசியோகங்கள்செய்து வையகந்தனில்சிறந்து
ஈசனைத்துதித்துஞான இன்பத்தைநாடுவாரே.

(இ-ள்) பூச நட்சத்திரத்தில் பிறந்தவர்கள் துர்க்குணமில்லாத சுத்த மனதமைந்தவர்களாய் நல்ல குணவானென்று சகலரும் புகழுந் தன்மையான பகவத்பக்தியானந்தமாய் வாசியோகஞ் செய்யப் பிரியமும், பரமசிவ தியானமும், பகவத்பக்தியானந்தமாயிருந்து ஞானனந்த இன்பத்தை விரும்பி யிருப்பார்கள்.

## ஆயில்ய நக்ஷத்திரத்தில் பிறந்தவர்கள் பலன்

எண்சீரடி விருத்தம்

வன்மைசேராயில்யந்தன்னிற் பிறந்தோர்
வையகத்தில்பிறர்சொல்லைக் கேட்பதற்கு
இன்புறுவார்வஞ்சக மில்லாமனத்தோர்
எதிரிகட்குஅஞ்சாத தீரவானும்

அன்பாகதாய்தந்தைக் கினியராகும்
ஆரண்யயாத்திரைக்கும் பிரியராகும்
நன்னய மாயித்யாதி குணத்தோடன்பாய்
நலமுடனேஜீவிப்பா ருலகமீதே.

(இ-ள்.) ஆயில்ய நட்சத்திரத்தில் பிறந்தவர்களின் நிலை எவ்விதமென்ருல் அன்னியர் வார்த்தையை அன்புடன் கேட்பார்கள். வஞ்சக நினைவில்லாதவர்கள், எதிரிகட்கு அஞ்சாதவர்கள் சத்துரு ஜெயம் பெறும் தீரத்தன்மை யுடையவர்கள் தாய் தகப்பன்மீது விஸ்வாசமுடையவர்களா யிருப்பார்கள். வனசஞ்சாரியாய் ஆரண்ய யாத்திரை செய்யப் பிரியமா யிருப்பார்கள்.

## மக நக்ஷத்திரத்தில் பிறந்தவர்கள் பலன்

*சந்த விருத்தம்*

மகநக்ஷத்திரத்திற் பிறந்தோர்கள்
மதிக்குங்கீர்த் திப்ரதாபர்
பகரும்வித்யா வடிவழகர்
பலதிசைசஞ் சாரப்பிரியர்
சுகமேவியவாழ் வாய்விளங்கி
சூழ்புவிதனிலே யிருப்பார்
புகழுங்கீர்த்தி யாயிருந்து
புனிதராக விளங்குவரே.

(இ-ள்.) மக நட்சத்திரத்தில் பிறந்தவர்கள் பலதிசை சஞ்சாரஞ் செய்வதற்குப் பிரியப்படுபவரும், கீர்த்திப் பிரகாசமாய் விளங்கி சுகசரீரமாகவும் அழகானந்த முகவசீகரமாகவும், சுகவாழ்வாகவும் ஜீவித்திருப்பார்கள்.

## பூர நட்சத்திரத்தில் பிறந்தவர்கள் பலன்

விருத்தம்

பூர நட்சத்திரத்தில் பிறந்தவரெந்தநாளும்
தாரணியோர்களுக்குத் ததுந்தவார்த்தைகளைப்பேசி
தீரமாய்தொழிற்புரிந்துதிறமுடன் வியாபாரஞ்செய்வார்
வீரமாயுலகில்நாளும் வித்வானாய்ஜீவிப்பாரே.

(இ-ள்.) பூரநட்சத்திரத்தில் பிறந்தவர்கள் சதாகாலமும் நயமாக சகலரிடத்திலும் பிரிய வசனமாய்ப் பேசுவதுடன் கைத்தொழிற் புரியும் சாமர்த்தியமும், வியாபாரஞ் செய்யும் திறமையும் பொருந்தியவர்களாய் வித்வானாய் ஜீவித்திருப்பார்கள்.

## உத்திர நட்சத்திரத்தில் பிறந்தவர்கள் பலன்

விருத்தம்

உத்திரந்தன்னிற்பிறந்தோர் உலகினில் ஞானியாகி, மெத்தவம்பலமுள்ளோராய் மேன்மைசேர் கோபியாகி, சித்தத்தில்பக்திவாய்ந்து ஸ்நானத்திற் பிரியமுள்ளார், வித்தியாவிருப்பமாக விளங்கியே ஜீவிப்பாரே.

(இ-ள்.) உத்திர நட்சத்திரத்தில் பிறந்தவர்கள் முன்கைப் பலமுள்ளவர்களாகவும், கோபமுள்ளவர்களாகவும், தெய்வ பக்தியிற் சிறந்தவர்களாய் விளங்கி ஆசார அனுஷ்டானத்துடன் அவனியில் சுகமாய் ஜீவித்திருப்பார்கள்.

## அஸ்த நட்சத்திரத்தில் பிறந்தவர்கள் பலன்

எண்சீரடி விருத்தம்

அன்புடையவென்சிஷ்யா சொல்லக்கேளாய்
அஸ்தநட்சத்திரத்தில் பிறந்திட்டோர்கள்
தன்மைசேர்கல்விப்பிரியர் மார்பழகராகும்
தரித்திரர் அன்னியரை வணங்கிவாழ்வார்

இன்பத்தையெந்நாளும் விரும்பிடாமல்
இளைத்தமனத்தால் சோர்ந்துதிகைத்திருப்பார்
வன்மைசேர்வையகத்தில் தொழில்புரிந்து
வகையுடனேஜீவிப்பார் கவனிப்பாயே.

(இ-ள்.) அஸ்த நட்சத்திரத்தில் பிறந்தவர்கள் வித்யாவிருப்ப முடையவராகவும், மார்பழகாகவும், தரித்திரமாய் ஜீவித்தாலும் பல தொழில் செய்ய விருப்பமும், வியாபாரஞ் செய்வதற்குப் பிரியமும், அன்னியரிடத்தில் தந்திரமாகவும் வணக்கமாகவும் பேசிப் பொருள் சேகரஞ் செய்து ஜீவித்துக் கொண்டிருப்பார்கள்.

## சித்திரை நட்சத்திரத்தில் பிறந்தவர்கள் பலன்

எண்சீரடி விருத்தம்

சித்திரைநட்சத்திரத்திற் பிறந்தபேர்கள்
சிவந்தவிழியலங்கார தேகமுள்ளோர்
மெத்தவுமேநற்குணமாய் விளங்குவார்கள்
மேன்மைசேர் வாசனாதிகளின்மீது
சித்தம்வைத்திருப்பார்கள் மனிதர்மீது
சிநேகமாய்வாஞ்சையுடன் நேசிப்பார்கள்
வித்தைகற்று உத்யோக வியாபாரத்தில்
விருப்பமுற்றுஜீவிப்பார் கவனிப்பாயே.

(இ-ள்.) சித்திரை நட்சத்திரத்தில் பிறந்தவர்கள் சிவந்தவிழி யலங்காரமும் அழகான சரீரமும், மிகவும் நற்குணமாகவும் விளங்குவார்கள். வாசனாதிகளின் மீது பிரியமும் மனிதர்களிடத்தில் விஸ்வாசமாகவும், சிநேக

வாஞ்சையாகவு மிருப்பார்கள். வித்யா விருப்பமும், உத்தியோகத்தில் கீர்த்தியும், வியாபாரத்தினுல் திரவியஞ் சேகரித்துச் செலவு செய்யுந் தன்மையும் பொருந்தி யிருப்பார்கள்.

## சுவாதி நட்சத்திரத்தில் பிறந்தவர்கள் பலன்

*சந்த விருத்தம்*

அன்பானசுவாதி நட்சத்திரம்
அமைந்தநாளிற் பிறந்தோர்கள்
இன்பமாய்சகலர்க் கும்பிரியர்
இராஜசேவைக் கிஷ்டமுறும்
தன்மையான குணசீலர்
தந்தைதாய்க்கு மிகப்பிரியர்
நன்மையான கல்வியினில்
நகரோர்மெச்சுந் திடத்தோரே.

(இ-ள்.) சுவாதி நட்சத்திரத்தில் பிறந்தவர்கள் சகலருக்கும் பிரியமான சிநேகமா யிருப்பதுடன் இராஜசேவை காணப் பிரியப்படுவார்கள். தாய் தந்தைமீது ஆசாபாசமா யிருப்பார்கள். கல்வியில் தேர்ச்சி யடைந்து சகலருக்கும் நல்லவரா யிருப்பார்கள்.

## விசாக நட்சத்திரத்தில் பிறந்தவர்கள் பலன்

*விருத்தம்*

நன்மைசேரும்விசாக நட்சத்திரந்தனில் பிறந்தோர், முன்கோப முடையோராவார் முகத்தினில் மருவுள்ளோராம், வன்மைசேரும் சமத்தர் வஸ்திரப் பிரியராகும், தன்மையாங்குணவாளுக தரணியில் ஜீவிப்பாரே.

(இ—ள்.) விசாக நக்ஷத்திரத்தில் பிறந்தவர்கள் முன் கோபி, முகத்தில் மருவுடையவர்களா யிருப்பார்கள். மிகவும் சாமர்த்திய முடையவராகவும், வஸ்திர ஆபரண சிங்காரராகவும், நல்ல குணவந்தராகவும் ஜீவித்திருப் பார்கள்.

## அனுஷ நக்ஷத்திரத்தில் பிறந்தவர்கள் பலன்

*எண்சீரடி யாசிரிய விருத்தம்*

அன்பாய் அனுஷ நக்ஷத்திரத்தில்பிறந்தோர்
அனுதினமும் வஸ்திரப்பிரியராகும்
தன்மைசேர் அழகலங்காரராகும்
தாம்பூலப்பிரியரென சாற்றுவாரே
அன்னைதந்தைக்குப்பிரியர் கோபியாகும்
ஆபரணம்மேற்பிரிய முடையோராகும்
நன்மையாய்ச் சொல்லுறுதி பிசகிடாதோர்
நகரோர்க்கு நல்லவரா யிருப்பர்தாமே.

(இ—ள்.) அனுஷ நட்சத்திரத்தில் பிறந்தவர்கள் தினந்தோறும், ஆடை ஆபரண சிங்கார அலங்காரமாக வும், தாம்பூலப் பிரியராகவும், தாய் தந்தைக்கினிய நற் குண சாலியாகவும், சொல்லுறுதி தவறாதவராகவு மிருப் பதற்காகும்.

## கேட்டை நக்ஷத்திரத்தில் பிறந்தவர்கள் பலன்

*எண்சீரடி யாசிரிய விருத்தம்*

கேட்டைநட்சத்திரத்தில் பிறந்திட்டார்கள்
கெம்பீரமாகவே பேசுவார்கள்

தாஷ்டீகபலமுடைய சமர்த்தராகும்
சாந்தமில்லாதுஷ்டருடன் நேசிப்பார்கள்
மேட்டிமையாய் சகலருமே புகழ்ந்துபேச
மேன்மையுடனே விளங்குந் தீரராகும்
மாட்சிபெரும் சகோதரவிஸ்வாசியாக
மாநிலத்தில்மகிழ்ந்திருப்பார் கவனிப்பாயே.

(இ-ள்.) எனது அன்பான சிஷ்யா ! கேட்டை நட்சத்திரத்தில் பிறந்தவர்கள் கெம்பீரமாகப் பேசுவார்கள். தாஷ்டீகமான பலமுடையவர்களா யிருப்பார்கள். சாமர்த்திய தீரமும் பொருந்தி யிருப்பதுடன் சாந்தமில்லாத குரூரகுணமமைந்த துஷ்டர்கள் நேசமும் பொருந்தியிருந்தாலும், தனது வாய் சாமர்த்தியத்தினுலும், கை சாமர்த்தியத்தினுலும், காண்போர் புகழ்ந்துரைக்கும் தீரவானுகவும் விளங்குவதோடு சகோதர விசுவாசியாகவு மிருப்பார்கள்.

## மூல நக்ஷத்திரத்தில் பிறந்தவர்கள் பலன்

### விருத்தம்

தனவானும் ஜீவாத்மாக்கள் தன்னுயிர்போல் மதித்து, மனமகிழ்ந்துலகோர்மீது மதித்திடுநட்பு வாய்ந்த, சினமிலாகுணவானுதும் திரவியந்தேடி தர்மம், முனைந்துமேசெய்வாரந்த மூலநட்சத்திரம் பிறந்தோர்.

(இ-ள்.) மூல நட்சத்திரத்தில் பிறந்தவர்கள் சகல ஜீவர்களிடத்திலும், பிரியமுந் தன்னுயிர்போல மன்னுயிரைக் காக்குந் தயாளமும், உலகத்திலுள்ளோர் மீது நட்பும் தயாளமும் பொருந்தியவராய், கோபமில்லாத குணவந்தராய் உலகத்தில் சகலராலும்

புகழ்ந்துரைக்குந் தன்மையான கீர்த்தியுடையவர்களா யிருப்பார்கள்.

## பூராட நட்சத்திரத்தில் பிறந்தவர்கள் பலன்

விருத்தம்

வித்தியானந் தமாக விரதானுஷ்டானம் புரிந்து
நித்தியவிரதஞான நிகமிகு ஸ்திரீயென்றோதும்
உத்தமிதனை மணந்து உலகினில்வாழ்ந்திருக்கும்
புத்திமானுயிருப்பார் பூராடத்திற்பிறந்தோர்.

(இ-ள்) பூராட நட்சத்திரத்தில் பிறந்தவர்கள் உத்தமகுண முடையவராய் விளங்கி கற்புநிலை தவறுத சற்குணத்துடன் பகவத்பக்தி யானந்த விரதானுஷ்டானம் புரிந்து, ஞானானந்தமா யிருக்கும் உத்தம ஸ்திரீயை மணம் புரிந்து சுகானந்தமாய் வாழ்ந்திருக்கும் தன்மையும், புத்தியுள்ளவராகவு மிருப்பார்கள்.

## உத்திராட நட்சத்திரத்தில் பிறந்தவர்களின் பலன்

விருத்தம்

அன்னைதந்தையரின்மீது
ஆசைபாசங்களாகி
இன்பமுடன் ஆதரிக்கும்
இனியநற்குணுளராகி
தன்மையாம்உத்யோகஞ்செய்வார்
தகுந்தவர்த்தகமுஞ்செய்வார்
நன்மையஉத்திராட
நட்சத்திரந்தனிலுதித்தோர்.

(இ-ள்) உத்திராட நட்சத்திரத்தில் பிறந்தவர்கள் மிகவும் சாமர்த்தியமாய் உத்தியோகஞ் செய்தும், வியாபாரஞ் செய்தும், பொருள் சேகரஞ் செய்யுந் தன்மையும், தாய் தந்தையர் மீது ஆசாபாச நேச விஸ்வாசமாகவு மிருப்பார்கள். தமது பந்து ஜனங்களும் புகழுந் தன்மையான கீர்த்தியா யிருப்பார்கள்.

## திருவோண நட்சத்திரத்தில் பிறந்தவர்கள் பலன்

விருத்தம்

திருவோண நட்சத்திரந் தனிற்பிறந்தோர்
திறமையுடன் கல்விகற் றுணர்ந்து நல்ல
பெருமையுட னுத்யோகம் புரிந்து திரவியம்
பேதமில்லாமல்சேர்த்து வியாபாரஞ் செய்வார்
அருமையுடன் வாசனுதிகளின்மீது
ஆசையுண்டு அலங்காரவிருப்பமுண்டு
தருமகுணமாயிருப்பா ருலகின் மீது
தரணியோர்தான்மகிழ கவனிப்பாயே.

(இ-ள்.) திருவோண நட்சத்திரத்தில் பிறந்தவர்கள் கல்வி கற்றுணர்ந்து உத்தியோகஞ் செய்வார். வியாபாரம் செய்வார், வாசனுதிகளின் மீது பிரியமும், ஆடையாபரண அலங்கார சிங்காரமும் பொருந்தியவர்களாய் தம்மைச் சகலரும் புகழ்ந்துரைக்கும்படியான தருமகுணம் பொருந்தியவர்களாகவு மிருப்பார்கள்.

## அவிட்ட நட்சத்திரத்தில் பிறந்தவர்கள் பலன்

எண்சீரடி யாசிரிய விருத்தம்

உலகினிலே அவிட்ட நக்ஷத்திரத்தில்பிறந்தோர்
உத்தமராய்கல்வியிலே விருப்பமுற்று
பலகலையும் நன்குணர்ந்து தீரமாக
பாரினிலே பிரக்யாதியாயிருந்து
நிலமையுடனுத்யோகம் புரிவாரினும்
நிதிதேடிவியாபாரஞ் செய்வாரன்பாய்
கலகமிலாதரணியிலன் பாயிருப்பார்
கவனித்துக்கிரகநிலை கண்டுசொல்வாய்.

(இ-ள்.) அவிட்ட நட்சத்திரத்தில் பிறந்தவர்கள் வித்யா விருப்பத்துடன் பல நீதிசாஸ்திர புராணங்களைக் கற்றுணர்ந்தும், உத்தியோக சாமர்த்தியமும், வியாபார லாபமும், திரவிய லாபமும் பொருந்தி யிருப்பார்கள். உலகத்திலே யாதொரு விசனமும் கலகமுமில்லாமல் தந்திரமாய் ஜீவிப்பார்கள்.

## சதய நட்சத்திரத்தில் பிறந்தவர்கள் பலன்

விருத்தம்

கனிவுடனேசதய நட்சத்திரத்துதித்தோர்
கல்வியிலேவெகுபிரியர் சொல்பொருந்தோர்
முனிவுளர்போற்சிற்சமயம் தயாளமுள்ளோர்
முன்கோபிதனந்தேடுந் தன்மையாளர்

பனியொத்தகுளிர்ந்த வார்த்தைகளைப்பேசி
பட்சமுடனே யிருப்பார் தரணிமீது
தனியாகவழிநடக்க மனதிலஞ்சார்
தைரியமாயிருப்பார்கள் கவனிப்பாயே.

(இ-ள்.) சதய நட்சத்திரத்தில் பிறந்தவர்கள் தனி
யாய் வழி நடப்பதற்கு அஞ்சமாட்டார்கள்; கோப சிந்தை
யுடையவர்கள்; முன்கோபி; மிகவும் சாந்தமாகவும், மிருது
வாகவும் பேசுவார்கள்; தயாள சிந்தையுள்ளவர்கள்;
மனிதர்களிடத்தில் பட்சமாகவு மிருப்பார்கள்

## பூரட்டாதி நட்சத்திரத்தில் பிறந்தவர்களின் பலன்

எண்சீரடி யாசிரிய விருத்தம்

நலமுடையபூரட்டாதியி லுதித்தோர்
நற்குணமாய்வித்தியா விருப்பமுள்ளோர்
பலபேரும்புகழ்ந்துரைக்குந் தீரராகும்
பட்சமுடன்பெற்றோரை ஆதரிப்பார்
கலகமதுசெய்யாமல் ஞாயமாக
காசினியோர்நேசமதை வகித்திருப்பார்
சிலகாலம்ஏழையா யிருந்திட்டாலும்
சிலசமயம்தனவந்த ருவார்பாரே.

(இ-ள்) பூரட்டாதி நட்சத்திரத்தில் பிறந்தவர்கள்
நற்குணசாலியாகவும், வித்யாபி விருப்பமும், சகலரு

புகழ்ந்துரைக்குந் தன்மையாகவும், தாய் தந்தையர் மீது ஆசாபாச நேச விஸ்வாசமாகவு மிருப்பார்கள். எவர்க ளிடத்திலும் கலகஞ் செய்யார். நியாயமாக சகலரிடமும் பட்சமாய் நேசித்து நற்குணமாய் ஜீவித்துக் கொண்டிருப் பார்கள்.

## உத்திரட்டாதி நட்சத்திரத்தில் பிறந்தவர்கள் பலன்

எண்சீரடி யாசிரிய விருத்தம்

அன்புடனே உத்திரட்டாதிதன்னில்
அவனிதனில் பிறந்தோர்கள்சுகமதாக
இன்புடனேகல்விகற்ற சகலருக்கும்
இனிமையாளரென்றுமிக கீர்த்திவாய்ந்து
தன்மதானஞ்செய்து ஆயுளோடு
தரணியிலேஜீவிப்பர் மனைவிமைந்தர்
நன்மையுள்ளபந்துஜனக் கூட்டத்தோடு
நலமுடனேவாழ்ந்திருப்பார் கவனிப்பீரே.

(இ-ள்.) உத்திரட்டாதி நட்சத்திரத்தில் பிறந்தவர் கள் வித்யா விருப்ப முடையவர்களாகவும் சகலருக்கும் நல்லவர்களாய் விளங்கும் தன்மை யுடையவர்களாகவும், தான தர்மஞ் செய்யும் கீர்த்தி யுடையவர்களாகவும், திரவிய சேகரஞ் செய்யும் சாமர்த்திய மும், மனைவி மைந்தர் பந்துஜன மித்திரர்களுடனே பெருத்த கூட்டமும், பெரிய குடும்பஸ்தராகவும் வாழ்ந்திருப்பார்கள்.

## ரேவதீ நட்சத்திரத்தில் பிறந்தவர்கள் பலன்

எண்சீரடி யாசிரிய விருத்தம்

அன்புடனேரேவதியிற் பிறந்திட்டோர்கள்
ஐஸ்வரியம்பூர்ணாயுசா யிருப்பார்
தன்மையுடன்கல்வி கற்று உலகோர்மெச்ச
தனசம்பத்தராயிருப்பா ருலகமீது
அன்னை தந்தைபுத்திரர் களத்ராதிசுற்றம்
அனைவர்களும்சூழ்ந்திருக்க வாழ்ந்திருப்பார்
நன்னயமாய்ப்பகவானை மறந்திடாமல்
நலமுடனேபூஜித்து ஜீவிப்பார்கள்.

(இ-ள்.) ரேவதி நட்சத்திரத்தில் பிறந்தவர்கள் வித்யா விருப்பத்துடன் கல்வி கற்றுணர்ந்து உத்தியோகம் செய்தும், திரவிய சேகரஞ் செய்து வியாபாரஞ் செய்யும் சாமர்த்தியத்துடனும், தாய் தந்தை சகோதரர் மனைவி மைந்தர் பந்துக் கூட்டங்களுடனே வாழ்ந்திருப்பார்கள்.

சீஷன் விருத்தம்

அனுதினமுமென்மீது தயாளசிந்தை
அமைந்தஜோதிடசாஸ்திர விவரந்தன்னை
மனமகிழவெந்தனுக்கு உபதேசித்தீர்
மாக்ஷிமையானவற்றைக் கற்றுணர்ந்தேன்

தினகரனுற் பொருந்தியலக் கினமாதத்தில்
ஜெனித்தவர்கள் பலாபலனை எந்தனுக்கு
மனமகிழ்வாய்ச் சொல்வீரென் றுமதுதிவ்ய
மலரடியையான் பணிந்தேன் அருள்செய்வீரே.

(இ-ள்.) குருநாதா! தாங்கள் அடியேன்மீது அருள் புரிந்து சோதிடத்தின் நிலையை அடியேனுக்கு அனுக்கிரகஞ் செய்தீர். ஆகையால், இனி அடியேன்மீது அன்பு கூர்ந்து, சூரியனிருந்த இராசிகளின் பலாபலனை அடியேனுக்கு விவரமாய்ச் சொல்வீர் சுவாமி.

## குரு விருத்தம்

அன்புடையசிஷ்யா நீ சொல்லக்கேளாய்
அந்தராசிதனில் ரவியிருக்கும்
தன்மையாலவரவர்க ளனுபவிக்கும்
தருந்தபலன்விபரமாய்ச் சொல்வேன்கேட்பாய்
உன்மனதிலேயிதனை உறுதியாக
ஊக்கமுடன்கவனித்துக் கற்றுணர்ந்து
நன்மையாய்ச்சகலருக்கும் காலநேர்மை
நலமுடனேவிபரமாய்ச் சொல்லுவாயே.

(இ-ள்.) எனது அன்பிற்கினிய சிஷ்யா! நான் இதுவரையிலும் சொல்லிக்கொண்டு வந்த சோதிட விபரமெல்லாம் கவனித்தாய். ஆனால், தற்சமயம் ஒவ்வொரு இராசியிலும் சூரியனிருக்கும்போது ஜனனமானவர்களின் பலனையும் விபரமாய்ச் சொல்லுகின்றேன் கவனிப்பாய்.

## மேஷ ராசியில் சூரியபகவானிருக்கும் பலன்

*எண்சீரடி யாசிரிய விருத்தம்*

தினகரனுமுச்சமாய் மேஷந்தன்னில்
திறமையுடனேயமர்ந் திருக்கும்போது
கனமுடனேபிறந்தோர்கள் தைரியமாக
கல்வியுணர்ந்துஉத்யோகம் செய் வாரன்பாய்
தனதான்யசம்பத்தும் கீர்த்தியோடு
தரணியிலேவாழ்ந்திருப்பா ரெந்தநாளும்
சினமில்லாதிருப்பர்குரு பார்வையாலுல்
சிந்தித்துவிபரமாய்ச் சொல்லுவாயே.

(இ-ள்.) மேஷ ராசியில் சூரியன் உச்சமாயிருக்கும் போது பிறந்தவர்கள் மனதைரியமும், சாமர்த்தியமும் வித்யாபிவிர்த்தியும், உத்தியோக லட்சணமும், வர்த்தக விருப்பமும், தனதான்ய சம்பத்தும் பெற்றிருப்பார். குரு பகவான் சிம்மராசியிலிருந்து மேஷத்திலிருக்கும் சூரியனைப் பார்த்தால் கோபமில்லாத சாந்த மனதுடையவர்களா யிருப்பார்கள்

## ரிஷப ராசியில் சூரியபகவானிருக்கும் பலன்

*எண்சீரடி யாசிரிய விருத்தம்*

மகிழ்வாகரிஷபத்தில் பிறந்தபேர்கள்
மனமகிழ்வாய் மனைவிபுத்திரர்களோடு
ஜெகமதஜீவிப்பர் பந்துகூட்டம்
சேர்ந்தன்பாயிருந்திடவும் வறுமையில்லா

புகழாகவஸ்திரங்கள் வாசனாதி
  பூஷணாதிகள்வியா பார்ரஞ்செய்து
சுகமாகவாழ்ந்திருப்பா ரென்று நீயே
  சொல்லுவாயனுபவிக்கும் விபரந்தானே.

(இ-ள்.) ரிஷபராசியில் சூரியபகவா னிருக்கும்போது பிறந்தவர்கள் சதாகாலமும் ஆனந்தமாய் ஜீவித்திருப்பதுடன் வித்தையை விசேஷமாய்க் கற்று உத்தியோகஞ் செய்தும், வாசனாதி திரவியம், வஸ்திர வியாபாரஞ் செய்தும் ஜீவித்திருப்பதுடன், மனைவி மைந்தர் பந்து கூட்டத்துடனே கீர்த்திப் பிரகாசமாய் ஜீவித்திருப்டார்கள்.

## மிதுன ராசியில் சூரியபகவானிருந்தால் பலன்

*எண்சீரடி யாசிரிய விருத்தம்*

மிதுனத்தில்சூரிய னிருக்கும்போது
  மேதினியிற்பிறந்தோர் பலனைக்கேட்பாய்
விதிமுறைபோல்வித்தைகற்று கவிகள்பாடி
  வித்வானாய்விளங்குவார் வையகத்தில்
சதிபதிமனமகிழ்வாய்ப் பொருந்திவாழ்ந்து
  சற்புத்ரபாக்கியம்பெற் றுலகில்வாழ்வார்
மதிதனிலேசிறந்தமைந்து சிஷ்யா நீதான்
  மனமகிழ்வாய ராய்ந்து பலனைச்சொல்வாய்.

(இ-ள்.) மிதுன ராசியில் சூரியபகவா னிருக்கும் போது பிறந்தவர்கள் வித்தையில் தேர்ச்சி யடைந்தவர்க

ளாய் சாஸ்திர புராணங் கற்றுணர்ந்தும், திரவியந் தேடி தனவந்தர்களா யிருந்து, உத்தம மனைவியை மணந்து சற்புத்திரர்களைப் பெற்று, நற்குண மமைந்து பந்து கூட்டத்துடனே வாழ்ந்திருப்பார்கள்.

குரு சிஷ்ய சம்பாஷணையாகிய
சோதிட அரிச்சுவடி இரண்டாம் பாகம்
முற்றிற்று.

---

☞ மற்ற மீதியான விஷயங்களாகிய சோதிட சாராம்சத்தை மூன்றும் பாகத்தில் விபரம் விபரமாய் விமரிசையாய்த் தெரிந்து கொள்ளவும்.

உ

கடவுள் துணை

குரு சிஷ்ய சம்பாஷணையாகிய

# சோதிட அரிச்சுவடி

(மூன்றும் பாகம்)

## கணேசர் துதி

ஆதிவேதாந்தஞான ஐயனேகணேசமூர்த்தி
சோதியேசொருபானந்த சுயம்ப்ரகாசமுதேஞான
வேதியரிஷிகள்போற்றும் வேதவிக்னேசாயானும்
சோதிடங்கணித்துச்சொல்ல துணையாய்வந்தருள்
[செய்வீரே.

## சீஷன் சொல்வது

எண்சீரடி விருத்தம்

ஐயனே ஆசிரியா ஞானவாழ்வே
அடியேனுக் கஞ்ஞான இருளைப்போக்கி
பொய்யிலா ஜோதிடத்தி னுண்மை யெல்லாம்
பூரணமா யெந்தனுக்குப் போதித்தீரே
வையமிசை இவ்வளவோ இதன்மே லுண்டோ
வழுத்துவீ ரெந்தனுக்கு குருவே ஞான
மெய்யனே தமதுதிரு வடியை யானும்
மேன்மையாய் மனதிருத்தி கவனிப்பேனே.

## சீஷன் வசனம்

(இ-ள்.) குருநாதா தாங்கள் சொன்னதை யான் அங்கீகரித்தேன். ஆனால், தாங்கள் இதுவரையில்

சொன்னதை விட இன்னும் விசேஷ முண்டோ வெனும் ஆராய்ச்சி யுடையவனா யிருக்கின்றேன். தாங்கள் அடியேன் மீது அன்பு வகித்து அருள்புரிய வேண்டும் குருநாதா.

## குரு சொல்வது

எண்சீரடி விருத்தம்

ஆரப்பா ஜோதிடத்தை முழுதுங்கண்டார்
 ஆராய்ந்து பலன்சொல்வோர் சமர்த்தராவார்
கோரப்பா குருவருளை மனதிலெண்ணு
 குறிப்பாக ராசிகளில் நவக்கிரகங்கள்
நேராக நின்றபல னறிந்தே சொல்லு
 நேர்மையுட னுண்மையெல்லாம் விளங்கும் பாரே
பாரப்பா வுந்தனுக்குண்மை யுரைத்தேன்
 பக்ஷமுடன் சோதிடத்தை கவனிப்பாயே.

(இ-ள்.) வித்யா விருப்பமுடன் கல்வி கேள்விகளிற் சிறந்த சிஷ்யா! நீ ஜோதிடத்தின் மர்ம ரகஸ்யத்தைக் கவனித்து பலன் சரியாய்ச் சொல்வதற்கு கல்வி யானந்தமும், வித்யாபிவிர்த்தியும், விவேகமும், பகவத் பக்தியும் ஞானமும், ஞாபக சக்தியும் இருக்க வேண்டும். அவ்வித சத்தியுடையோர்தான் ஜோதிட வல்லவரென்று சொல்லுவதற்காகும். அத்தகைய ஞானவானாகிய சிஷனே குரு விஸ்வாசியா யிருந்து ஜாதகத்தை ஆராய்ந்து பலன் சொல்லும்போது நவக்கிரகங்களிருக்கும் ஸ்தான பலன், இலக்கின பலன் முதலான விஷயமெல்லாம் கவனித்துச் சொன்னால் ஜாதகரின் திரிகாலலக்ஷணமும் சரியாய் நடப்பதை விபரமாய்ச் சொல்வதற்காகும்.

## சீஷன் சொல்லுவது

### விருத்தம்

எனதினிய குருஸ்வாமி ஜோதிடத்தை
எந்தனுக்கு விபரமாய் கற்பித்ததற்கு
மனதினிலே மிகமகிழ்வு கொண்டவுந்தன்
மாட்சிபெரும் திருவடியை பணிந்துயானும்
அனுதினமும் தமதருளை சிரமேற்கொண்டு
அவனியில்வாழ் மனிதர்களின் ஜாதகத்தை
இனிதாக பார்த்துபலன் சொல்வதற்கு
இசைந்தபடி கற்பிப்பீர் குருவேபோற்றி.

(இ-ள்.) எனது அருமையான குருநாதா! சோதிட சாஸ்திரத்தின் ஆராய்ச்சி யனைத்தும் அடியேனுக்குப் போதிப்பதற்காக மனதிற் கருணைவாய்ந்த மாக்ஷிமை தங்கிய தமது திருவடியை துதிக்கும் அடியேன் மீது கருணை கூர்ந்து உலகிற் பிறந்த மனிதர்களின் வாழ் நாளிற்கமையும் ஜாதக ரகசியத்தின் பலனை அடியேன் சரியாகச் சொல்லும்படியாக அனுக்கிரகஞ் செய்வீர் சுவாமி.

## குரு சொல்வது

### எண்சீரடி விருத்தம்

அன்பான என்சிஷ்யா ஜோதிடத்தை
ஆராய்ச்சி செய்வதற்கு அறிவுவேண்டும்
நன்மையுடனே யிரண்டாம் பாகந்தன்னில்
நலமுடனே மிதுனத்தில் ரவியிருந்தால்
இன்னின்ன பலன் நடக்கு மென்று முன்னே
இனிதுடனே புகன்றேன்பின் தொடர்ச்சியாக
நன்னயமாய்ச் சொல்லுகின்றேன் ஜோதிடத்தை
நலமுடனே கவனித்துப் பலன்சொல்வாயே.

(இ-ள்) எனது அன்பிற் கிசைந்த புத்திசாதுர்யமான சிஷ்யா! இந்த ஜோதிட சாஸ்திரத்தின் ஆராய்ச்சி செய்வதற்கு அறிவு அதிகமாய் வேணும். நீ புத்தியுள்ள சிஷ்யனாகையால், விபரமாய்க் கவனித்துக் கற்றுணர்ந்தாய். ஆனால், இரண்டாம் பாகத்தில் சூரியன் மிதுன ராசியிலிருக்கும் வரையில் நடக்கும் பலாபலன்களை விபரமாய்ச் சொன்னேன். ஆனால், இன்னும் அந்துடர்ச்சியாக கடக ராசியில் சூரியனிருக்கும் பலனும் இன்னும் அநேக ரகசியமும் சொல்லிக்கொண்டு வருகின்றேன் கவனிப்பாய்.

## கடகராசியில் சூரியபகவானிருந்த பலன்

### எண்சீரடி விருத்தம்

கடகத்தில் சூரியனு மிருந்திட்டாலோ
காரியுடன் குஜராகு கேது பார்த்தால்
தடவரையில் வெகுதுயர மனுபவிப்பார்
சசிபுதனும் குருசேர்ந்தும் பார்த்திட்டாலும்
கடல்சூழ்ந்த பூமியிலே கீர்த்திவானாய்
கனகமுடன் நிலவளமும் விசேஷமாக
திடமாக சேகரித்து வாழ்ந்திருப்பான்
திறமையுடன் கவனித்துப் பலனைச்சொல்லே.

(இ-ள்.) கடக ராசியில் சூரியனிருக்கும்போது சனி, செவ்வாய், இராகு, கேது பார்த்தால், பலவிதமான கஷ்டமும், கவலையும், வறுமையும், சஞ்சலமும், துன்பமும் உண்டாகும். ஆனால், கடக ராசியில் சூரியனிருந்து வளர்பிறைச் சந்திரன், புதன், குரு சம்பந்தமானாலும், பார்வையுற்றாலும், பொன் பொருள் சேகரஞ்செய்து கீர்த்திவந்த

ளுய், நிலம் பூமி காணி ஆக்ஷியுடன் சுகவாளு யிருப்பதற்காகும்.

## சிம்ம ராசியில் சூரியனிருந்த பலன்

### எண்சீரடி யாசிரிய விருத்தம்

சூரியனும் சிம்மராசி தனிலிருக்க
சூழ்புவியிலே பிறந்தஜாதகர்க்கு
வீரியமும்தைரிய மும் கீர்த்திமேன்மை
விளங்கியேதனவாளு யிருப்பாராளுல்
காரியுடன் சனிபாம்பு பார்க்கலாகா
கதிரவனைகுருபார்த்தால் மெத்தநன்மை
பாரிலுள்ளஜாதகரின் பலனை நன்றுய்
பார்த்துரைப்பாய் நவக்ரக நிலைபைப்பார்த்தே.

(இ-ள்.) சூரிய பகவான் சிம்ம ராசியிலிருக்கும்போது பிறந்த ஜாதகர் மிகவும் கீர்த்திவாய்ந்தவரா யிருப்பதற்காகும். தைரியமும், மேன்மையும் பொருந்திய தனவந்தரா யிருப்பார்கள் ஆளுல் சூரியன் சிம்மத்தில் ஆட்சி பெற்றிருந்தாலும் சனி, ராகு, கேது சம்பந்தமானுலும் பார்த்தாலும் துர்ப்பலனையே அனுபவிக்கச் செய்யும். ஆளுல் குரு பார்த்தால் விசேஷ நன்மை யுண்டாகும்.

## கன்னிராசியில் சூரியனிருந்த பலன்

### எண்சீரடி விருதத்ம்

கன்னியிலேசூரியனு மிருக்கும்போது
காரியுடன்சேய்பாம்பு சேர்ந்திட்டாலும்
வன்மையுடன் பார்த்தாலும் கெடுதியுண்டு
வறுமைசிலசமயத்தில் வந்தேதீரும்
நன்மையுடன்குருபுதனும் மதியம்பார்த்தால்
நலமுடனும் சம்பந்தமுற்றுலும் நன்மை

தன்மையுடன் கிரகநிலை ஆராய்ந்தன்பாய்
ஜாதகர்க்குபலன் சொல்வாய் தெளிவாய்த்
[தானே.

(இ-ள்.) கன்னியா ராசியில் சூரிய னிருக்கும்போது சனி, செவ்வாய், ராகு, கேது பார்த்தாலும் சம்பந்தமுற்றாலும் பலவித கஷ்டமும் கவலையு முண்டாகும். ஆனால், குரு பார்த்தால் சகலவித நன்மையு முண்டாகும். புதனும் சந்திரனும் சம்பந்தமானால் விசேஷ நன்மையும் கீர்த்தியும் உண்டாகும்.

## துலாராசியில் சூரியனிருந்த பலன்

எண்சீரடி விருத்தம்

பருதிதுலாராசியிலே யிருக்கும்போது
பாம்புசனிசெய்பார்த்தால் தந்தைக்காகா
குருபுதனும்மதிகாணில் சுபமேயாகும்
கொஞ்சமேனுந்துயர மணுகிடாது
சுருதியுக்தி அனுபவ திருஷ்டாந்தத்தால்
சொல்லுவாய்பலன்விபர மாகவேதான்
அருமையாய் ஜோதிடத்தை கணித்துசீராய்
அவரவர்க்குப் பலனுரைக்க தகுதியாமே.

(இ-ள்.) துலா ராசியில் சூரிய பகவானிருக்கும்போது அந்த ராசியை சனி, ராகு கேது பார்த்தாலும் சம்பந்த முற்றாலும், ஜாதகனுடைய தந்தைக்கு ஆகாது. பலவித கஷ்ட நஷ்டமும் அடிக்கடி வந்து தீரும். ஆனால், குரு புதன், சந்திரன், பார்வையானாலும், சேர்க்கையானாலும், விசேஷ நன்மையும் கீர்த்தியும் பெருமையு முண்டாகும்; ஆனால், மற்ற கிரகங்களிருக்கும் ஸ்தானத்தைக் கண்டு அவைகட்குத் தகுந்தவிதமான சுருதி யுக்தி அனுபவ

திருஷ்டாந்தமுடன் ஜாதகர்க்குப்பலன் சொன்னால் சரியா யிருக்கும்.

## விருச்சிகராசியில் சூரியனிருந்த பலன்

*எண்சீரடி விருத்தம்*

விருச்சிகராசியிலே சூரியனிருக்க
 வியாழனும்மீன ராசிதனிலிருந்து
அருமையுடன்பார்த்தாலே விசேஷ நன்மை
 அரவுசனிபார்க்கசேர்ந் திருந்திட்டாலே
வறுமையுடன்கவலையுந் துன்ப முண்டாம்
 வையகத்தில்சிறுமையடைந் தலைகுவார்கள்
பெருமையுள்ளோர்பரிகசித் திகழ்ச்சிசெய்ய
 பேதமையாய்சந்ததமு மலைகுவாரே.

(இ-ள்.) விருச்சிகராசியில் சூரியனிருந்தால் குரு மீன ராசியிலிருந்து ஒன்பதாமிடத்தில் பார்வை செலுத்தினால் விசேஷ நன்மையாகும். ஆனால், விருச்சிக ராசியிலிருக்கும் சூரியனை சனி ராகு, கேது பார்த்தால் பலவித கஷ்ட நஷ்டமும் கவலையும் உண்டாகும். சிறுமையும், தரித்திரமும் பொருந்தியவராய் உலகத்தில் கஷ்டப்படுவார்கள். சில மனோகர்விகள் தமது செல்வச்செருக்கால் பரிகசித்தாலும் தலைகுனிந்து விசனமாய் யாதும் புகலுதற் கியலாமலும் துயரப்படுந் தன்மையா யிருப்பார்கள்.

## தனுசு ராசியில் சூரியனிருந்த பலன்

*எண்சீரடி விருத்தம்*

சூரியனும் தனுசிலே யிருக்கும்போது
 சுரர்குருவும்புதசனியும் சேர்ந்திருந்தால்

வீரியமாம்சாமர்த்திய மிகவேசெய்து
விளங்குவார்தனுசுஜன்மலக்னமானால்
பாரிலுள்ளோர்சகலருமே தலைவணங்க
பராக்ரமுடன் ராஜகெம்பீரமாக
காரியானுகூலத்தின் நன்மையாலே
காசினியிலேசமர்த்தா யிருப்பர்தானே.

(இ-ள்) சூரியபகவான் தனுசுவிலே யிருக்கும்போது, குரு புதன், சந்திரன் சேர்ந்திருந்தால் மனதைரியத்துடன் வெகு சயாத்தாய் திரவியம் சேகரித்துப் பெருமையாய் வாழ்ந்திருப்பதற்காகும். ஆனால் தனுசு ஜன்மலக்னமானால் ராஜகெம்பீரமாய் பேசுந் தன்மையும், ராஜாங்கத்திற் கிசைந்த பெருந்தன்மையான வியாபாரியா யிருந்து விசேஷ திரவியஞ் சேகரித்து சத் விஷயத்தில் பிரீதியுடையவரா யிருப்பதற்காகும்.

## சூரியன் மகரராசியிலிருந்த பலன்

எண்சீரடி விருத்தம்

மகரத்தில்சூரிய னிருக்கும்போது
மந்தனுடன்ராகுபார்வை செலுத்தினாலும்
திகழ்கேதுபுதன்சேர்ந்தால் ஜாதகர்க்கு
திக்கில்லாஏழ்மைதுன்பம் சூழுமப்பா
புகழுடனேகுருசுக்ரன் பார்வையானால்
பொல்லாங்கெல்லாம்விலகி சுகமாவார்கள்
ஜெகமீதிலிதனையனு சரித்துப்பார்த்து
செப்புவார்ஜாதகர்க்கு பலனைத்தானே.

(இ-ள்.) மகர ராசியில் சூரிய னிருக்கும்போது சனி ராகு பார்வையும், கேது, புதன் சேர்க்கையுமிருந்தால் [illegible] துன்பமும் திக்கில்லா ஏழையைப்போல

துஷ்டர்களிடத்தில் கஷ்டப்பட்டு சகலருக்கும் பகையாய் விளங்கி துயரமும் துக்கமும் அனுபவித்துக் கஷ்டப்படுவார்கள். ஆனால் குருபகவானும், சுக்ர பகவானும் பார்த்தாலும் சேர்ந்திருந்தாலும் எத்தகைய பொல்லாத வஞ்சகராகுலும், மனதில் பரிதாபமுடையவராய் துன்பஞ் செய்யாமல் இருப்பார்கள். அவ்விதமாய் எவர்களேனும் கொடுமைசெய்ய நினைந்தாலும், குருசுக்ரர் சகாயத்தினுல் பொல்லாங்கெல்லாம் விலகி நன்மையுண்டாகும். அதேனெனில் அவரவர்கள் கர்மானுசாரத்தின்படியே பூமியில் பிறக்கும்போது, கிரகங்கள் சஞ்சரிக்கும் நிலைமைக்கண்டு தான் ஜாதகர்க்கு பலன் சொல்லவேண்டும்.

## சூரியன் கும்பராசியிலிருந்த பலன்

அம்புவியில்மானிடராய் ஜன்மித்தோர்க்கு
ஆதித்தன்கும்பராசி தனிலிருக்க
சிம்மராசிதன்னிலே சனியிருந்தும்
சீறுகின்றபாம்புடன்தான் ரவியைக்காணில்
வம்புடனேவாதுகள்தான் வந்துசூழும்
வர்த்தகம்உத்தியோகஞ்செய்தாலும்
நம்பார்கள்ஜாதகனை இவனும்நம்பான்
நலமில்லாதுயருற்று கலங்குவானே.

(இ-ள்.) உலகிற்பிறந்த மனிதன் சுகதுக்கத்தை யறிவதென்ருல் கிரகங்கள் எந்தெந்த ஸ்தானத்திலிருந்தார்களோ அவைகட்கிசைந்த பலன்களைக் கொடுப்பார்கள் என்ருலும், கும்பராசியில் சூரியனிருக்க, சிம்மராசியில் சனியிருந்து சூரியனைப் பார்த்தால் பலவிதமான கஷ்டமும் கவலையும் சூழுமென்ருலும் இராகு கேதுக்களின் பார்வையுண்டானுல் பலவித துன்பமும் துயரமு முண்டா

கும். அதேனெனில், சனி, ராகு, கேது சூரியனுக்கும் பகையாயிருப்பதினால் அவர்கள் பார்வையை சூரியன் மீது செலுத்தினாலே ஜாதகன் வெகு துயரடைவதற்கா கும். ஆனால், குரு சுக்ரன், பார்வையிருந்தால் அவ்வளவு கஷ்டமும் கவலையுமில்லாமல் சாதாரணமாய் காலம் கழித்துக் கொண்டிருக்கலாகும்.

## சூரியன் மீனராசியிலிருந்த பலன்

அன்புடனேமீனத்தில் ரவியிருந்தால்
அவருடனேகுருசுக்ர னிருப்பாராகில்
பொன்பொருளும் விசேஷமாய்சேகரித்து
பூதலத்தில்கீர்த்தியாய் வாழ்ந்திருப்பார்
வண்மையுடன்சனிராகு கேதுசேர்ந்தால்
வழக்குபலஉண்டாகும் ஜாதகர்க்கு
துன்பமுண்டுதுயரடைவா ரென்றேசொல்லு
தொல்லுலகில்கிரகம் நிலையைப்பாரே.

(இ-ள்.) மீனராசியில் சூரியபகவானிருக்க அவருடனே குரு ஆக்ஷியாகவும், சுக்கிரன் உச்சமாகவுமிருந்தால் வெகுபொருள் சேகரஞ் செய்து மகா தனவந்தரா யிரும்பதற்காகும். ஆனால், மீனராசியிலிருந்த சூரியனை சனி ராகு கேது பார்த்தால் பலவித சஞ்சலமும், கஷ்டமும் கவலையும் அடைவார்கள். ஆகையால், கிரகங்கள் நின்ற நிலையைக்கண்டு பலன் சொல்லவும்.

## சீஷன் சொல்வது

### எண்சீரடி விருத்தம்

ஐயனேஎன்குருவே அடியேனுக்கு
ஆதித்தன்பனிரெண்டு ஸ்தானந்தன்னில்

உய்யவேபலன்தருகும் மார்க்கத்தோடு
உற்றகிரகபார்வையுடன் சேர்க்கையாகும்
செய்யபலன்விபரமாய்ச் சொல்லிவிட்டீர்
செழுமதியாப் சந்திரனும் இராசிதன்னில்
வையமிசைஜாதகர்க்கு அமைந்ததானுல்
வரும்பலனை அடியேனுக் குரைசெய்வீரே.

(இ-ள்.) குருசுவாமி! தாங்கள் அடியேன் மீது அன்பு கூர்ந்து சூரியபகவான் மேஷம், ரிஷபம், மிதுனம், கடகம், சிங்கம், கன்னி, துலாம், விருச்சிகம், தனுசு, மகரம், கும்பம், மீனம் என்னும் பனிரெண்டு ராசியிலும் சஞ்சரிக்கும்போது ஜாதகரனுபவிக்கும் பலாபலனெல்லாம் விபரமாய்ச் சொன்னீர். ஆனுல், சந்திரபகவான் அவ்விதமே பனிரெண்டு ராசியிலும் சஞ்சரிக்கும்போது ஜாதகர் அனுபவிக்கும் பலாபலனையும் அடியேன் கவனிக்கும்படிவாய் திருவாய்மலர்ந்தருள்வீர் சுவாமி.

## குரு சொல்வது

### எண்சீரடி விருத்தம்

தன்மையுள்ளயென்சிஷ்யா சொல்லக்கேளாய்
சந்திரனும்பனிரெண்டு ராசிதன்னில்
தன்மையுடனேயமர்ந்த பலனைச்சொல்வேன்
நலமுடனேகவனிப்பாய் அறிவமைந்த
என்சிஷ்யாஉலகினிலே பிறந்தோருக்கு
ஏற்றதொருகிரகநிலை யிருக்கும்நேர்மை
வன்மையாயுந்தனுக்கு விபரமாக
வழுத்துவேன்கவனித்துக் கொள்ளுவாயே.

(இ-ள்.) எனது அன்பிற்கிசைந்த சிஷ்யா! சந்திர பகவான் பனிரெண்டு ராசியிலும் இருக்கும்போது அந்தந்த

கிரகங்களின் சேர்க்கையாலும் பார்வையாலும் உண்டா கும் பலாபலனை விபரமாய்ச் சொல்லுகின்றேன் கவனிப் பாய்.

### சீஷன் சொல்வது

*எண்சீரடி விருத்தம்*

ஆசிரியராமென்குருவே இராசியான
ஆமேடம் மிதுனங்கடகம் சிங மங்கன்னி
மாசிலாதுலாதேள்வில் மகரம்கும்பம்
மீனமெனும்பனிரெண்டு ராசிதன்னில்
வீசுபுகழ்சந்திரன் வருகும்போது
விளங்கியஜன்மத்தி லிருந்திட்டாலும்
பேசுபுகழ்ஜாதகர்க்கு பலனைத்தானே
புகலுவீரென்றுமையான் பணிந்திட்டேனே.

(இ-ள்.) குருநாதா! மேஷம், ரிஷபம், மிதுனம், கட கம், சிம்மம், கன்னி, துலாம், விருச்சிகம், தனுசு, மகரம் கும்பம், மீனம் என்னும் பனிரெண்டு ராசியிலும் சந்திரன் வந்திருக்கும்போது ஜாதகர்க்குக் கொடுக்கும் பலாபலன் களை அடியேனுக்கு விபரமாய் அனுக்கிரகம் செய் தருளுவீர்.

### குரு சொல்வது

*எண்சீரடி விருத்தம்*

அவ்விதமேசொல்லுகின்றேன் மாணாக்கா நீ
அன்புடனேகவனித்து மதியில்நாட்டு
எவ்விதமாய்சந்திரனும் இராசிதன்னில்
இருந்தாரோஅவ் வ்வித மேபலன்கள்
அவ்வியமில்லாதவையும் காரணத்தை
அருள்புரிவேன்சிஷ்யா நீகவனமாக

ஒவ்வியேகருத்துடனே கேட்டுக்கொண்டு
ஓதுவாய்ஜாதகர்க்கு பலனைத்தானே.

(இ-ள்.) எனது பிரியமுள்ள சிஷ்யா! நீ வினவியதும் சரியே! ஆனால், யான் உனக்கு விபரம் விபரமாக சந்திரன் ஒவ்வொரு ராசியிலு மிருக்கும்போது இன்னின்ன பலன் அமையுமென்பதை விபரமாய்ச் சொல்லுகின்றேன் கவனமாய்க் கேட்டுணர்ந்து பலாபலனை விபரமாக ஜாதகர்க்குச் சொல்வாய். ஆனால், சந்திரனே மாதுர்காரகனானபடியினாலே இந்த சந்திரனின்ற இராசி வீடே ஜன்ம ராசியென்று கணக்கெடுத்துரைப்பது. ஆகையால், யான் உனக்கு ஒவ்வொரு ராசியிலும் சந்திரனிருக்கும் பலனைச் சொல்வேன் கவனித்து ஜாதகர்க்கு பலனைச் சொல்வாய் அஃதெவ்விதமெனில்:—

## மேஷராசியில் சந்திரனிருந்த பலன்

### எண்சீரடி விருத்தம்

அன்பானஎன்சிஷ்யா மேஷந்தன்னில்
ஆனசந்திரனிருக்க பலனைச்சொல்வேன்
நன்னயமாய்கவனிப்பாய் சனிசேய்பாம்பு
நலமுடனேசேர்ந்தாலும் பார்த்திட்டாலும்
துன்பமுண்டுதுயரமுடன் வறுமையாலே
துடித்துப்பின்சுகமடைவா ரின்னங்கேளு
பொன்னவன்மால்சேர்ந்தாலும் பார்த்திட்டாலு
போதவேநற்பலனைத் தருகுவாரே.

(இ-ள்.) மிகவும் புத்தி சாதுர்யமாய் சாஸ்திர ஆராய்ச்சியிற் றேர்ச்சி யடைந்த சிஷ்யனே! உனக்கு சந்திரனிருக்கும் மேஷராசியின் பலனைச் சொல்வேன் கவனிப்பாய்; மேஷத்தில் சந்திரனிருக்கும்போது சனி

செவ்வாய், இராகு, கேது சேர்ந்திருந்தாலும், பார்த்தாலும் பலவிதமாகிய துன்பமும் துயரமும் நேரிடு மென்பதற்குச் சந்தேகமில்லை. ஆனால், குரு, புதன் சம்பந்தமானாலும் சேர்ந்திருந்தாலும், சுப பலன்களும் உத்தியோக விர்த்தியும், வியாபார லாபமும் பெருகுமென்று ஜாதகர்க்குப் பலனை விபரமாய்ச் சொல்வாய். ஆனால், சந்திரன் அந்த ஸ்தானத்தில் தனியா யிருந்தால் சமபலனாய் விளங்கு மென் றுணர்வாய்.

## ரிஷபராசியில் சந்திரனிருந்த பலன்

### எண்சீரடி விருத்தம்

சந்திரனும்ரிஷபத்தி லிருக்கும்போது
சார்ந்துநின்றகிரகங்கள் வலுவைப்பார்த்து
எவ்விதம்பலன்சொல்வ தென்றுநீயும்
ஏமாராமற்கேட்டு மனதில் நாட்டு
சந்திரனேரிஷபத்தில் உச்சமானால்
சகலவிதநன்மையுமே வந்துசேரும்
இந்தவிதம் ஜாதகர்க்கு பலனைச்சொன்னால்
இனிதுடனேசரியாக அமையும்பாரே.

(இ-ள்.) சந்திரபகவான் ரிஷபராசியி லிருக்கும்போது எந்தெந்த கிரகங்கள் சம்பந்தமானாலும் பார்வையானாலும், தான் ரிஷபராசியில் உச்சம் பெற்ற பலத்தினாலும், சகலவித நன்மையும், சரீராரோக்கியமும், பந்து மித்திரர்களின் சேர்க்கையு முண்டாகும். ஆனால், குரு, புதன் சம்பந்தமானாலும், பார்வை பெற்றாலும் விசேஷ நன்மை யுண்டாகும். ஆனால், ஜாதக பலனைக் கவனித்துச் சொல்லும்

போது திசாபுத்தி அந்தர பலனையும் கணக்கெடுத்துப் பார்த்துப் பலனை விபரமாய் சொல்லுவாய்.

## மிதுனராசியில் சந்திரனிருந்த பலன்

மிதுனத்தில்சந்திரனு மிருக்கும்போது
மேன்மையுடன் புதன்சேர்ந்து தனுசில்வியாழன்
அதிகபலமாய் ஆக்ஷிபாயிருந்து
அன்புடனேசந்திரனை பார்த்திட்டாலே
நிதிசேரும்பந்துமித்ரர் வந்துசூழ்வார்
நீணிலத்திலனைவர்களும் புகழ்ந்துரைப்பார்
விதிமுறையும்மதிமுறையும் கவனித்தோர்ந்து
விளங்கும்நல்லபலனெல்லாம் வழுத்துவாயே.

(இ-ள்.) மிதுன ராசியில் சந்திரபகவா னிருக்கும் போது, புதபகவான் மிதுனத்தில் ஆட்சி பெற்று சந்திர னுடன் சம்பந்தப்பட்டும், தனுசில் குருபகவானிருந்து மிதுனத்திலிருக்கின்ற சந்திரனைப் பார்த்தால் வியாபார விர்த்தியுடன் திரவிய லாபமும் கிடைக்கும். பந்துமித் திரர் சேர்க்கையும் பலவித நன்மையு முண்டாகும். ஆனால், வளர்பிறைச் சந்திரனு யிருப்பதால் விசேஷ நன்மை யுண்டாகும்.

## கடகராசியில் சந்திரனிருந்த பலன்

எண்சீரடி விருத்தம்.

கடகமெனும்ராசியிலே மதியிருக்க
கனககுருஉச்சமாய் சேர்ந்திருக்க
திடமுடனேமகரத்தில் புதனிருந்து
திறமையுடன்சந்திரனை பார்த்திட்டாலே

அடைவுடனேபல நன்மை வந்துசூழும்
அதிகபொருள்வியாபாரத்தால் கிடைக்கும்
கடல்மார்க்கபிரயாணஞ் செய்வதற்கும்
காட்டுமென்றேஜாதகர்க்கு பலன்சொல்வாயே.

(இ-ள்) கடக ராசியில் சந்திர பகவானிருக்கும்போது சூரியபகவான் சம்பந்தமுற்று உச்சமாயிருப்பதுடன் மகர ராசியில் புதனிருந்து கடகச் சந்திரனைப் பார்த்தால், பலவித நன்மையும், திரவிய லாபமும் கூடும். கடல் மார்க்க யாத்திரையும் உத்தியோக விர்த்தியும், வியாபார லாபமும் கிடைக்குமென்று ஜாதகர்க்குரிய திசாபுத்தி அந்தர பலனையும் ஆராய்ச்சி செய்து பலன் சொல்லுவாய்.

## சிம்மராசியில் சந்திரனிருந்த பலன்

சந்திரனும்சிம்மத்தி லிருக்கும்போது
சார்ந்துரவிதானிருந்தா லமாவாசையாகும்
இந்தவிதமிருக்கும்போ துலகில்ஜனித்தால்
இசைந்திடுவான் கொலைகளவு செய்வதற்கு
சிந்தைமகிழ்ந்தேகுருவும் தனுசில்நின்றால்
திரவியலாபத்துடனே இருப்பானென்பாய்
மந்தனுடன் இராகுகேது கண்பார்த்தால்
மதிமயங்கிவறுமையடை வானென்றேதே.

(இ-ள்.) சிம்ம ராசியில் சந்திரனிருக்கும்போது சூரியனில் சிம்மத்தில் ஆட்சி பெற்றிருந்தால் அமாவாசையாகும். அந்த சமயத்தில் பிறந்த ஜாதகன் திருடுவதற்கும் கொலை செய்வதற்கும் துணிவான். ஆகையால், தனுசிலிருந்து குரு பார்த்தால் கொலை களவு செய்ய

மனதிசையால் சற்புத்திரனு யிருப்பான் என்று ஜாதகர்க்கு விபரமாய் சொல்லலாம்.

## கன்னியாராசியில் சந்திரனிருந்த பலன்

கன்னியிலேசந்திர னிருக்கும்போது
கவுரவமாய்புதபகவா னுச்சமாக
நன்னயமாய்சேர்ந்திருக்க குருமகரந்தன்னில்
நலமுடனேயிருந்து சந்திரனைப்பார்க்க
பொன்பொருளுஞ்சேர்ந்திருக்கும் பூஷணமுண்டாம்
போனபொருள்வந்தெய்தும் விசேஷநன்மை
துன்பமாம்சனிராகு கேதுசேர்ந்தால்
துயரடைவார்வறுமைநோயா லென்றுசொல்வாய்.

(இ-ள்.) கன்னியா ராசியிலே சந்திரனிருக்கும்போது புதபகவான் கன்னியில் உச்சமா யிருக்கவும் மகரத்தில் குரு இருந்து சந்திரனைப் பார்த்தால், பொன் பொருள், திரவியலாபம், வியாபாரலாபம், கீர்த்தியுண்டாகும். ஆனால், கன்னியாராசியிலிருக்கின்ற சந்திரனை சனி, இராகு கேது பார்த்தாலும் சம்பந்தமானாலும் பலவிதமாகிய துன்பமும் துயரமும் சூழ்ந்து பலவித கஷ்டப்படச் செய்யும். வறுமை சூழ்ந்தும் பித்த சம்பந்தமான வியாதியால் கஷ்டப்படச் செய்யும். சந்திரபகவான் தனியா யிருந்தால் சுகதுக்கம் சமமா யிருப்பதுடன் கவலையில்லாமல் சாதாரணமா யிருக்கும். அங்காரகன் சம்பந்தமானால் சந்ததமும் யோகமாய் மகா சமர்த்தனாக எவர்கட்கும் அஞ்சாமலிருந்து தான் சேகரஞ் செய்வானென்று சொல்லுவாய்.

## துலா ராசியில் சந்திரனிருந்த பலன்

எண்சீரடி விருத்தம்

அந்தமுள்ளமதிதுலாந் தனிலிருக்க
அம்புவிக்கவ்வீடு சமமேயாகும்
எந்தவிதமானாலும் பலன்கொடாது
எழில்குருபுதன்சேர்ந்தும் பார்த்திட்டாலும்
தொந்தரைகளணுகாது சுகமுங்கொஞ்சம்
தோற்றுமடா ஆனாலும் சுக்ரன்சேர்ந்தால்
சிந்தைமிகவேமகிழ்ந்து திரவியந்தேடி
சிறப்புடனேவாழ்ந்திடுவா ரென்றுசொல்லே.

(இ-ள்) துலாராசியில் சந்திரனிருந்தால் சமமான பலனாய் யாதொரு நன்மையுமில்லாமல் மதிமயக்கமா யிருப்பதுடன் காண்போர் அறிவில்லாதவனென்று அலட்சியமாய்ப் பேசுவார்கள். ஆனால் குரு புதன் சேர்ந்தாலும், பார்த்தாலும் கஷ்டமும் கவலையு மில்லாமல் சுகமாய் பொருள் சேகரஞ் செய்து ஆஸ்தி பூஸ்திதி யில்லாவிட்டாலும் வறுமையில்லாமல் ஜீவித்திருப்பதற்காகும். ஆனால், சுக்கிரன் சம்பந்தமுற்றால் திரவியவந்தனாய் வியாபாரத்தினாலும் பொருள் சேகரஞ்செய்து ஜீவித்திருப்பதற்காகும்.

## விருச்சிகராசியில் சந்திரனிருந்த பலன்

எண்சீரடி விருத்தம்

விருச்சிகத்தில்சந்திரனு மிருக்குமானால்
விளங்கியநீசஸ்தான மதுவேயாகும்
குருபகவான்பார்த்தாலும் சேர்ந்திட்டாலும்
கொடுமையில்லைதுயரில்லை வறுமையில்லை

பொருளுடனேகீர்த்தியுண்டு நன்மையுண்டு
புகழ்கீர்த்திவிசேஷமாய் வருகும்பாரே
பெருமையுடன்பெரியோர்கள் சேர்க்கையுண்டு
பேதமையற்றுலகினிலே யிருப்பர்தானே.

(இ-ள்.) விருச்சிகராசியிலே சந்திரனிருக்கும்போது நீசஸ்தான பலனாக யாதொரு பலனில்லாமல் மந்தமதியா யிருப்பார்கள். ஆனால், குருபகவான் சந்திரனுடன் சம் பந்தமானாலும் பார்த்தாலும் துன்பமும் துயரமுமில்லாமல் சவுக்கியமாயிருக்கும். பெரியோர்கள் சேர்க்கையும் கீர்த்தி யும் பெருமையும் விசேஷமாய்ப் பொருந்தி மன தைரிய முடன் சுகமாயிருப்பார்கள்.

## தனுசுராசியில் சந்திரனிருந்த பலன்

எண்சீரடி விருத்தம்

தேவகுருஸ்தானமெனும் தனுசில்சந்திரன்
தெளிவாகயிருந்தாலே கீர்த்தியுண்டு
ஆவலுடன் பொருள்தேடி பெரியோர்சேர்க்கை
அதிகமாயமைந்திருக்கும் ஆனாலின்னும்
பூவுலகில்தனவந்த ராயிருந்து
புனிதனெனவேயுலகோர் புகழ்ந்துரைக்க
மேவியேயிருப்பார்கள் தரணியோர்கள்
மேன்மையுடனேபுகழ்வா ரென்றுசொல்லே.

(இ-ள்.) தேவகுருஸ்தானமாகிய தனுசு ராசியில் சந்திரனிருக்க அதிக சாமர்த்தியமாய் பொருள் தேடி சமர்த்தனாயிருப்பதற்காகும். சான்றோர் தனவந்த

னென்று சொல்லும் நற்பெயரமைந்து கீர்த்திவந்தனு பிருப்பதற்காகும். (குருபகவானும் மிதுன ராசியிலேயே இருக்க விசேஷ நன்மை யுண்டாகும்.)

## மகரராசியில் சந்திரனிருந்த பலன்

மகரத்திற்சந்திரனு மிருக்கும்போது
மந்தனுடன் சேய்ராகு கேதுபார்த்தால்
ஜகமீதுள்ளோராலே பழிக்கப்பெற்று
சஞ்சலமாயிருப்பார்க ளாகையாலே
புகழுடனேகுருபகவான் சுக்ரன்பார்த்தும்
புதன்காணில்மனதைரிய மிகவுண்டாகி
மகிழுடனேதிரவியங்கள் வெகுவாய்ச்சேர்த்து
மாநிலத்தில்கீர்த்தியுடன் வாழ்குவாரே.

(இ-ள்.) மகரராசியி லிருக்கும் சந்திரனை, சனி, ராகு, கேது பார்த்தாலும் சம்பந்தமானாலும் பலவிதமான கஷ்டமும் கவலையு முண்டாகும். ஆனால், குரு புதன் சம்பந்த மானால் திரவியலாபமும் கீர்த்தியுமுண்டாகும்; பெரியோர்கள் சேர்க்கையும் பெற்று ஆஸ்தி பூஸ்தி யுடன் வாழ்வார்கள்.

## கும்பராசியில் சந்திரனிருந்த பலன்

கும்பத்தில்சந்திரனு மிருக்கும்போது
குருபுதனும்பார்த்தாலும் சேர்ந்திட்டாலும்
செம்பொன்பணி ஆடையுடன்கீர்த்திவானாய்
செல்வந்தனாகவே வாழ்ந்திருப்பார்
அம்புலியும்தனியாக யிருந்திட்டாலும்
அரவுசனிசேய் காணில் பலனேயில்லை

வம்புடனே தொல்லையுண்டு சுகமிராது
வறுமையுடனிருப்பார்க ளென்றுகூறே.

(இ-ள்.) கும்பராசியிலே சந்திர னிருக்கும்போது சனி, ராகு, கேது சம்பந்தமானலும் சேர்ந்தாலும், பல விதமாகிய கஷ்டமும் கவலையும் துன்பமும் துயரமும் சூழும். ஆனால், புதன் பார்வையானலும் சம்பந்தமானு லும் பலவித நன்மையும் திரவிய லாபமும் கிடைக்கும். சந்திரன் தனியா யிருந்தால் சகலவித நன்மையுமுண்டா கும். சுக்கிரன் சேர்ந்திருந்தால் பலவித சாஸ்திர ஆராய்ச்சியில் வல்லவரா யிருப்பார்கள்.

## மீனராசியில் சந்திரனிருந்த பலன்

எண்சீரடி விருத்தம்

மீனராசியிலிருந்த சந்திரனை வியாழன்
மேன்மையுடன் சேர்ந்தாலும்பார்த்திட்டாலும்
ஞானமுடன்வித்தையுண்டு கீர்த்தியுண்டு
நல்லறிவுதோன்றுமடா ஜாதர்கர்க்கு
தானென்றமனேற்சாக மதிகரித்து
தனவந்தனுகஉத்தி யோகஞ்செய்வான்
ஆனதொருபுதன்காணில் வியாபாரஞ்செய்து
அவனியிலேவாழ்ந்திருப்பா னென்றுசொல்லே.

(இ-ள்.) எனது அன்பான சிஷ்யா! உனது அறிவிற்கு மெச்சினேன். நீ யான் புகலும் வாக்கிய மொவ்வொன்றை யும் கவனித்துணர்வாய். குருபகவானுடைய சுயக்ஷேத் திரமாகிய மீனராசியில் சந்திரனிருக்க அந்த சந்திரனை குரு கடகத்திலிருந்து உச்சம் பெற்றுப் பார்த்தாலும் சம்

பந்தமா யிருந்தாலும், வித்தை புத்தியும் மென்மேலும் அதிகரித்து இராஜாங்க உத்தியோகஞ் செய்து திரவியஞ் சேகரித்து கீர்த்திவந்தனு யிருப்பதற்காகும். ஆனல், புதன் கன்னியிலிருந்து உச்சம் பெற்று மீனச் சந்திரனைக் கண்டால் பெரிய கௌரவமான வர்த்தகஞ் செய்து இலஷாதி பிரபுவாய் கீர்த்திப் பிரகாசமா யிருப்பதற்காகும்.

## சீஷன் சொல்வது

### எண்சீரடி விருத்தம்

என்குருவே அடியேன்மீ தருள்சுரந்து
    எழிலானஜோதிஷத்தில் ராச்சியத்தை
அன்புடன்போதித்துமதி ராசிதன்னில்
    அமர்ந்திருந்துபலன்கொடுக்கும் விபரஞ்சொன்னீர்
தன்மையுடன்குருபகவான் பனிரெண்டுராசி
    தனிலிருந்துபலன்கொடுக்கும் விபரந்தன்னை
நன்மையுடனெந்தனுக்கு உபதேசிப்பீர்
    நமஸ்கரித்துவணங்கியே துதிக்கின்றேனே.

(இ-ள்.) குருநாதா! தாங்கள் அடியேன்மீ தருள் சுரந்து ஜோதிட சாஸ்திர மனைத்தும் போதித்து சந்திர பகவான் பனிரெண்டு ராசியிலிருக்கும் பலன்களையும் விபரமாய் புகன்றீர். அடியேன் கவனித்துணர்ந்து புனிதனுனேன். ஆனல், துவாதச ராசிகளெனும் மேஷம், ரிஷபம், மிதுனம், கடகம், சிம்மம், கன்னி, துலாம், விருச்சிகம், தனுசு, மகரம், கும்பம், மீனம் என்னும் பனிரெண்டு ராசிகளில் சந்திரனிருக்கும்போது புலாபலன்

தந்தவிதமே குஜபகவானுகிய செவ்வாயும் அந்தந்த ராசியிலிருந்தால் என்னென்னவிதமாய் பலன் தருவாரோ அதனை அடியேனுக்கு விபரமாய்ப் புகல்வீர்.

## குரு சொல்வது

### எண்சீரடி விருத்தம்

எனதருமைசீடாகேள் பனிரெண்டுராசி
என்னுமந்தஸ்தானத்தில் குஜனிருந்தால்
தனக்குரியபலாபலனை தருகுமார்க்கம்
தற்சமய முந்தனுக்கு போதிக்கின்றேன்
மனமகிழகவனித்து ஜாதகர்க்கு
மர்மமெல்லாந்தெரியவே பலனைச்சொல்வாய்
உனதுளத்தில்போதிக்கும் ஜோதிடத்தை
உறுதியுடனே நிறுத்தி கவனிப்பாயே.

(இ-ள்.) எனது அருமையான சிஷ்யனே! துவாதச ராசியின் எந்தெந்த ஸ்தானத்தில் குஜ பகவானுகிய செவ்வாய் பகவானிருந்தாலும் தானிருந்த ராசி பலனும் தன்னுடன் சேர்ந்த கிரகங்கள், தன்னைப் பார்த்த கிரகங்களின் பலாபலனும் ஜாதகர்க்குக் கொடுக்கும் தன்மையும் விபரமாய்ச் சொல்வேன் கவனமாய்க் கேட்பாய்.

## மேஷராசியில் செவ்வாயிருந்த பலன்

ஆனதொருமேஷத்தில் செவ்வாய்தானே
ஆக்ஷிபெற்றுநின்ருலே பூமிலாபம்
ஞானமுண்டு தருசேர்ந்தால் பார்த்திட்டாலும்
நல்லறிவுதோணுமடா உத்தியோகஞ்செய்து

வேணபொருள்சேகரிப்பான் புதன்சேர்ந்தாலும்
விருப்பமுடன்பார்த்தாலும் வர்த்தகஞ்செய்வானே
தானென்றபெருமையுடன் கீர்த்தியோங்கி
தனவந்தனயிருப்பான் கவனிப்பாயே.

(இ-ள்) மேஷராசியில் செவ்வாய் பகவான் ஆட்சி பெற்றிருந்தால் பூமி லாபங் கிடைக்கும். ஆனால், குரு பகவான் தனுசு ராசியில் ஆட்சி பெற்று மேஷ ராசியைப் பார்த்தால் உத்தியோகஞ் செய்து வெகு பொருள் சேகரித்து கீர்த்திப் பிரகாசமாய் இருப்பதற்காகும் ஆனால் புதபகவான் மேஷத்திலிருந்தாலும் பார்த்தாலும் கௌரவமான வர்த்தகஞ் செய்து பெருமையாய் திரவிய சேகரஞ் செய்து தனவந்தரென்று தன்னை சகலரும் புகழும்படியான கீர்த்தியுடன் வாழ்ந்திருப்பதற்காகுமென் றுணர்வாய்.

## ரிஷபராசியில் செவ்வாயிருந்த பலன்

சுக்கிரனுக்காட்சியான ரிஷபந்தன்னில்
செவ்வாய்பகவானிருந்தாலே சுகமிராது
மிக்கவேசனிராகு கேதுபார்த்தால்
மிகதுன்பம்விளையுமடா சேர்க்கையாக
பக்குவமாய்குருபுதனும் சுக்கிரனும்சந்திரன்
பார்த்தாலும்சேர்ந்தாலும் பலன்களுண்டு
சிக்கிலாஜோதிடத்தை கணித்தாராய்ந்து
சிறப்புடனேபலாபலனைச்சொல்லுவாயே.

(இ-ள்.) சுக்கிரபகவானுக்கு சொந்த வீடான ரிஷப ராசியில் செவ்வாய்பகவா னிருந்தால் ஜாதகனுக்கு சுகமே

கிடையாது அந்த ராசியிலிருக்கும் செவ்வாய் பகவானை சனி, ராகு, கேது பார்த்தாலும் சம்பந்தமானாலும் பலவித மான மனக்கவலையும் கஷ்டமும் துன்பமும் துயரமும் விளையும். ஆனால், குரு, புதன், சுக்ரன் சேர்ந்தாலும் பார்த்தாலும் விசேஷ பலன் கிடைக்குமென்று ஜாதகர்க்கு பலன் சொல்வதுடன் ஜோதிடத்தையும் கணித்தா ராய்ந்து சொல்வாய்.

## மிதுனராசியில் செவ்வாயிருந்த பலன்

மிதுனமெனும்ராசியிலே குஜனிருக்க
மேன்மையுடன்குருதனுசி லிருந்துபார்க்க
புதபகவான் மிதுனத்தி லாட்சியாகி
பூரணச்சந்திரனுடனே செவ்வாயோடு
இதமாகசேர்ந்திருந்தால் வியாபாரவிருத்தி
இலாபமுடன் தனவந்த னுயிருப்பார்
அதிகதுன்பம்சனிராகு கேதுபார்த்தால்
ஆகாதுசகலருக்கும் விரோதியாமே.

(இ-ள்.) மிதுன ராசியிலே செவ்வாய் பகவானிருக்க அவரை குரு தனுசிலிருந்து பார்த்தும் புதன் மிதுன ராசியிலேயே ஆக்ஷிபெற்று அங்காரகனுடனே சம்பந்தமா யிருந்தாலும் அந்தக் கிரகங்களுடனே வளர்பிறைச் சந்திர னும் சேர்ந்திருந்தால் வியாபார விர்த்தியினால் வெகு திர வியஞ் சேகரஞ் செய்து தனவந்தனு யிருப்பதற்காகும். கல்வி கேள்விகளில் தேர்ச்சியடைந்து வித்யாபிவிர்த்தி யடைந்திருப்பதற்காகும். ஆனால், மிதுனத்து விருக்கிற

சந்திரன், சனி, ராகு, கேது பார்த்தாலும், சம்பந்தமானலும், சகலருக்கும் விரோதியாகவும் வறுமையாளனாகவுமிருப்பதுடன் சதாகாலமும் மன சஞ்சலமா யிருப்பதற்காகும்.

### கடகராசியில் செவ்வாயிருந்த பலன்

கடகமெனும்ராசியிலே குஜனிருக்க
கவலையுடன்எத்தொழிலும் செயவொண்ணாது
அடைவுடனேமீனத்தில் குருவிருந்து
அன்புடனேகடகசெவ்வாய் தன்னைப்பார்த்தால்
திடமுடனேநற்பலனே கிடைக்குமென்று
திரமுடனேபுகல்வாய் ஜாதகர்க்கு
விடநாகனெனுப்ராகு கேதுமந்தன்
விருப்பமுடன்பார்த்தாலே கொடுமையாமே.

(இ-ள்.) கடகராசியில் செவ்வாய் பகவான் இருந்தால் மனவிசாரமும் திகிலும் பொருந்தியவரா யிருப்பதுடன் எடுத்த காரியம் நிறைவேறாமலும், வறுமையாளரா யிருப்பார்கள். ஆனல், குரு பகவான் மீனராசியிலிருந்து பார்த்தாலும், கடகத்திலிருக்கும் செவ்வாய் பகவானுடன் சம்பந்தமா யிருந்தாலும் மனதைரியம், உற்சாகம், உத்யோக விர்த்தி வியாபார லாபத்தினல் திரவிய சேகரஞ் செய்து கீர்த்திப் பிரகாசமா யிருப்பதற்காகும்.

### சிம்மராசியில் செவ்வாயிருந்த பலன்

ஆதித்தனுக்காட்சிசிங்க ராசிதன்னில்
அன்புடனேசெவ்வாய்பகவா னிருப்பாராகில்

வேதியனும்குருதனுசி லிருந்துபார்க்க
விளங்குபுதன்கன்னியாராசியிலிருக்க
பூதலத்தில்கல்விகைத் தொழிலுங்கற்று
பொருள்சேர்த்து தனவந்த னுயிருப்பார்
ஆதரவாய்ச்சனிராகு கேதுபார்த்தால்
ஆகாதுவறுமைதுன்ப மெய்தும்பாரே.

(இ-ள்.) சூரியனுக்கு சொந்தமாகிய சிம்ம ராசியில் செவ்வாய்பகவா னிருக்கும்போது குருபகவான் தனுசி லிருந்து பார்க்கவும், கன்னியராசியில் புதபகவா னிருந் தால் கல்வியிலும் கைத்தொழிலிலும் தேர்ச்சி யடைந்து வெகு பொருள் சேகரஞ் செய்து தனவந்தரா யிருப்பதற் காகும். ஆனுல், சனி ராகு கேது சிம்மராசியிலிருக்கும் செவ்வாயைப் பார்த்தாலும் சேர்ந்திருந்தாலும் பலவித கஷ்டமும் கவலையும் வறுமையும் துன்பமும் துயரமு மடைந்தவர்களா யிருப்பார்கள்.

### கன்னியராசியில் செவ்வாய் நின்ற பலன்

கன்னியாராசியிலே செவ்வாய் நின்ருல்
கவலையில்லமனதைர்ய மாயிருப்பார்
நன்னயமாய்ப்புதன்சேர்ந்து மீனத்தில்விபாழன்
நலமுடனேயிருந்துகன்னி குஜனைக்காண
பொன்பொருளும்சேகரித்து தனவானுகி
பூமியுடன்நிலவளமும் பெருகிவாழ்வார்
தன்மையுடன்நவக்ரக நிலையைக்கண்டு
தரணியில்ஜாதகர்க்கு பலன்சொல்வாயே.

(இ-ள்.) கன்னியா ராசியிலே செவ்வாய் பகவானிருந்தால் சஞ்சலமில்லாமலிருப்பார்கள். ஆனால், புதன் கன்னியில் ஆட்சி உச்சமாய் பலப்பட்டு செவ்வாயுடனே சம்பந்தப்பட்டும், மீனராசியில் குருவிருந்து செவ்வாய் பகவானையும் புதனையும் பார்த்தால் வித்தியாபி விர்த்தியும் வியாபார லாபமும் கிடைத்து பொன் பொருள் சேகரஞ் செய்து மகா தனவந்தராக விளங்குவார்கள். ஆனால், மற்ற கிரகங்களின் நிலையைக் கண்டு பலாபலன் நடக்கும் விஷயங்களை விபரமாய்ச் சொல்ல வேண்டும்.

## துலாராசியில் செவ்வாயிருந்த பலன்

அன்புடனே துலாராசி தனிலேசெவ்வாய்
அமர்ந்திருக்கசுக்கிரனும் சேர்ந்திருக்க
கும்பத்திலிருந்துகுரு பார்த்திட்டாலே
குவலயத்தில் வெகுபொருளை சேகரித்து
நன்மையுடன் தனவந்த னுயிருப்பார்
நாடியேசனிராகு கேதுபார்த்தால்
துன்பமுடன்வறுமையா லலைவாரென்றே
சொல்லுவாய்ஜாதகர்க்கு பலனைத்தானே.

(இ-ள்.) துலாராசியில் செவ்வாய் பகவானிருக்க சுக்கிரனும் ஆட்சிபெற்று செவ்வாயுடன் சம்பந்தமாயிருக்க குரு பகவான் கும்பராசியிலிருந்து திரிகோண பார்வை செலுத்தினுல் மிகவும் கீர்த்திப் பிரகாசமாய் திரவியம் சேகரஞ் செய்து, வியாபார விர்த்தியினுலும் உத்தியோக விர்த்தியினுலும் திரவிய சேகரஞ் செய்து தன

வந்தனுயிருப்பதற்காகும். ஆனால், சனி ராகு கேது பார்த்தாலும் சம்பந்தமானாலும் மனவிசாரமும், அலைச்சலும் அதிகரித்து திரவிய சேகரஞ் செய்யுந் தன்மையில் சிறந்து, கீர்த்திவந்தரா யிருப்பதற்காகும். அதேனெனில் சனிபகவானுக்கு துலாராசி உச்சவீடா யிருப்பதினால் வெகு நன்மை யுண்டாகுமெனப் புகல்வாய்.

## விருச்சிகராசியில் செவ்வாயிருந்த பலன்

அன்பாகவிருச்சிகத்தில் செவ்வாய்நின்றால்
அதிகபொருள்சேகரித்து காணிபூமி
நன்மனையும் வீடுநிலம் வாங்குவார்கள்
நலமுடனேகுருபுதனும் பார்க்கசேர
பொன்பொருளும்மிகச்சேரும் தனவானாக
பூமியிலேவாழ்ந்திருப்பா ரென்றேசொல்லு
தன்மையாய்சனிராகுகேது பார்க்கசேர
தரித்திரனைப்போல் மயங்கியிருப்பார்தானே.

(இ-ள்.) செவ்வாய் பகவான் விருச்சிகராசியில் ஆட்சி பெற்றிருந்தால் வியாபார விர்த்தியினாலும், உத்தியோக விர்த்தியினாலும் வெகுபொருள் சேகரஞ் செய்து காணி, பூமி, நிலம், வீடு, மனை வாங்குவதுடன் தனவந்தரா யிருப்பார்கள். ஆனால் சனி, ராகு கேது பார்வையுற்றாலும் சனி சம்பந்தமானாலும் சதா காலமும் மனசஞ்சலமா யிருப்பார்கள்; எவ்விதமானாலும் தனவந்தராகவே யிருப்பதற்காகும்.

## தனுசுராசியில் செவ்வாயிருந்த பலன்

தனுசென்னும்ராசியிலே செவ்வாய்நிற்க
தனவந்தராகவே விளங்குவார்கள்

இனிதுடனேகுருபார்த்தும் சேர்ந்திட்டாலும்
இசைந்தநல்யோகமுடன் வாழ்ந்திருப்பார்
தனதான்ய சம்பத்தும் பெருகிவாழ்வார்
சனிராகுகேது கண்டால் பலனிராது
மனமகிழஜோதிடநூ லாராய்ந்தன் பாய்
மாநிலத்தின் ஜாதகர்க்கு பலன்சொல்வாயே.

(இ-ள்.) தனுசுராசியிலிருக்கும் செவ்வாய் பகவானை குருபகவான் சேர்ந்தாலும் பார்த்தாலும் மகா தனவந்தனாக விளங்குதற்குரிய யோகவானாய் விளங்கி உத்தியோகத்திலும் வியாபாரத்திலும் வெகு பொருள் சேகரித்து தனதான்ய சம்பத்துடன் பந்து மித்திரர்கள் சூழ பெருந்தன்மையான குடும்பரக்ஷகனா யிருப்பதற்காகும். ஆனால், சனி ராகு கேது இவர்கள் பார்த்தால் எவ்வளவு பிரயாசை எடுத்தாலும் சம்பாதித்த திரவியத்திற்கும் சாப்பிட்ட செலவிற்கும் சரியாய் அமைந்து விடுமல்லாமல் வறுமை நோயில்லாமல் மத்திய பலனாயிருக்கும்.

## மகரராசியில் செவ்வாயிருந்த பலன்

மகரமெனும்ராசியிலே செவ்வாய் நிற்க
மதிகுருவும்புதன்சுக்ரன் பார்க்கில்சேர்ந்தும்
புகழுடனேவிளங்கினல் பொருள்கைக்கூடும்
புனிதனெனஜாதகர்கள் கீர்த்தியோடு
மகிழுடனேவாழ்ந்திருப்பார் சுகமாய்நாளும்
மாக்ஷியுடனேஜீவித் திருப்பார்தானே
ஜெகமீதுகிரகநிலை தனையேப்பார்த்து
சொல்லுவாய்பலன்விபரம் தெளிவாய்நீயே.

(இ-ள்.) மகரமெனும் ராசியிலே செவ்வாயிருக்க அந்த ராசியை சந்திரன், குரு, புதன் சுக்ரன் பார்த்தால் வெகு தனவந்தனு யிருப்பதற்காகிய வித்தையும், புத்தியும், கவ்வியுர், ஞானமும் மேன்மேலு முண்டாகும் ஆனல், கிரக நிலையுடன் திசாபுத்தியையும் பார்த்துப் பலன் சொல்ல வேண்டும்.

## கும்பராசியிலிருந்த செவ்வாய் பலன்

### விருத்தம்

அம்புவியிலேபிறந்த ஜாதகர்க்கு
அளவுபோர் ஜாதகத்தின் பலனைச்சொல்ல
கும்பராசியிலிருந்த செவ்வாய்தன்னை
குருசுக்ரன் புதன்பார்த்தால் விசேஷலாபம்
வம்பணுகாசுகஜீவி யர்கநாளும்
வாழ்ந்திருப்பார்வையகத்தில் கீர்த்தியுண்டு
சம்ப்ரமதாய்சனிராகு கேதுபார்த்தால்
சரசமாய்லாபமது கிடைக்குந்தானே.

(இ-ள்.) உலகத்தில் பிறந்த ஜாதகர்க்கு பலன் சொல்வதென்றுல் அவர்கள் பிறக்கும்போது கும்பராசியில் செவ்வாயிருந்தும அவரை குரு சுக்ரன் புதன் பார்த்தால் விசேஷ நன்மை யுண்டாகும். வியாபார விர்த்தியினுலும் உத்தியோக விர்த்தியினுலும் விசேஷ திரவிய லாபம் கிடைத்து தனவந்தரா யிருப்பதற்காகும். ஆனல், சனி, ராகு, கேது, கும்பராசியிலிருக்கும் செவ்வாயைப் பார்த்தால் சமமாய் பலன் கிடைக்கும்.

## மீனராசியிலிருந்த செவ்வாய் பலன்

அன்புடனேமீனத்தில் செவ்வாய்நிற்கில்
அந்தணனும்புதன் சசியு மிருக்கப்பார்க்க
நன்மையுடன் உத்தியோகம் வியாபாரவிர்த்தி
நலமுடனேவாய்க்குமப்பா நல்லோர்சேர்க்கை
பொன்பொருளும் மிகவுண்டாம்பூஷணங்கள் சேரும்
போஜனதிகுறைவில்லாமற் கிடைக்குமென்று
வன்மையுடன்பலன் சொல்வாய் ஜாதகர்க்கு
வையகத்தோருந்தனையே நம்புவாரே.

(இ-ள்) மீனராசியி லிருக்கின்ற செவ்வாயை குரு புதன் சந்திரன் பார்த்தாலும், சேர்ந்திருந்தாலும், வித்யா சமர்த்தினாலும், கைத்தொழில் சமர்த்தினாலும் சகலரும் புகழுந் தன்மையாய் தேர்ச்சி யடைந்து, உத்தியோக விஷயத்தினாலும், வியாபார விர்த்தியினாலும் வெகு பொருள் சேகரித்து தனவந்தரா யிருப்பதுடன் நல்லோர் சேர்க்கையும் சுகபோஜனாதிகளும் கிடைத்து மிகவும் சவுக்கியமாகவும் மேன்மையாகவு மிருப்பதற்காகும்.

## சீஷன் சொல்வது

*எண்சீரடி விருத்தம்*

ஆதியிலேயெந்தன்மேல் கிருபைகூர்ந்து
அவனியோர்ஜாதகத்தின் பலனாராய்ந்து
ஜோதிடநூல்கணிதத்தின் விபரம்போல
சொல்லவே அனுக்கிரகஞ் செய்திட்டீரே
கோதிலாப்பனிரெண்டு ராசிதன்னில்
கோரியபுதனிருந்தால் பலன்தானென்ன

நீதியாயெந்தனுக்கு சொல்வீரென்று
நினதருளைசிந்தித்து பணிந்திட்டேனே.

(இ-ள்.) குருநாதா! அடிபேனுக்கு ஜோதிட சாஸ்திரத் துண்மையாக வெகு அன்பாக கற்பித்த ஆசிரியரே! இதுவரையிலும் தாங்கள் போதித்தவை யனைத்துங் கற்றுணர்ந்தேன் இனி தபது கிருபையால் புதபகவான் பனிரெண்டு ராசியிலு மிருந்தால் என்னென்ன பலன் அனுபவிப்பார்களோ? அதனை அடியேனுக்கு விபரமாய்ப் புகலுவீர் குருநாதா.

## குரு சொல்வது

அன்பானசிஷ்யா நீ சொல்லக்கேளாய்
ஆறிரண்டுராசிலே எவைபிலேனும்
தன்மையாய்புதனிருந்தால் சமயம்போல
தருகுவார் பலாபலன்கள் ஜாதகர்க்கு
நன்மைதுன்மையின்னதென்று கவனித்தற்கு
நாடியேகிரகசேர்க்கை பார்வைகண்டு
இன்பமுடன்பலனுரைத்தால் உண்மையென்று
இப்புவியோருந்தனையே புகழுவாரே.

(இ-ள்.) எனது அன்பான சிஷ்யனே! புதபகவான் ஜாதகரின் ஜனனகாலத்தில் மேஷம், ரிஷபம், மிதுனம், கடகம், சிம்மம், கன்னி, துலாம், விருச்சிகம், தனுசு, மகரம், கும்பம், மீனம் என்னும் பனிரெண்டு ராசியில் எந்தெந்த ராசியில் அந்த புதபகவா னிருக்கின்றரோ அந்தந்த ராசிக்குரிய பலனும் மற்ற கிரகங்களின்

சேர்க்கை நோக்கத்தா லுண்டாகும் பலனும் சமயோசிதமாய்க் கொடுப்பாரென் றுணர்வாய்.

### மேஷராசியிலிருந்த புதன் பலன்

வித்யாகாரகனுன புதன்மேஷத்தில்
விருப்பமுடனிருந்தாலும் குருபார்த்தாலும்
புத்தியுண்டுபக்தியுண்டு விவேகமுண்டு
பொருள்சேர்க்குந்திறமையுண்டு வித்தையுண்டு
எத்திசையுங்கீர்த்தியுண்டு புகழுமுண்டு
எங்கெங்கும்வியாபாரஞ் செய் பலாபம்
உத்தியோகவிர்த்தியுண்டு சம்பத்துண்டாம்
உதித்தலக்னபலன்போல கணித்துச்சொல்லே.

(இ-ள்.) வித்யா காரகனுகிய புதபகவான் மேஷராசியிலிருக்கும்போது அவரை குரு பார்த்தாலும் சேர்ந்தாலும், வித்தையும், புத்தியும், ஞானமும், கல்வியும், விவேகமும் பொருந்தி, வியாபாரத்தினுலும் உத்தியோக விஷயத்தினுலும் திரவியலாபம் பெற்று தனவந்தராயிருப்பதற்காகும். ஆனுல், ஜாதகர் பிறந்த ஜனன லக்கினத்தை கணித்து புதனின்ற ராசியின் கணக்கெடுத்துச் சொல்ல வேண்டும். கிரக சேர்க்கை பார்வைக் கிசைந்தவிதமாகவே சுப அசுப பலன் நடக்குமென் றுணர்வாய்.

### ரிஷபராசியில் புதனிருந்த பலன்

புதபகவான்ரிஷபத்தி லிருக்கும்போது
பொருந்தியேகுருசுக்கிரன் சசிபார்த்தாலும்
இதமுடனேபொன்பொருளும் மிகவேசேரும்
இசைவாய்உத்தியோகமதில் பெருமையுண்டு

சதமாகஎப்போதும் லாபமுண்டு
சனிராகுகேதுசெவ்வாய் இருக்கபார்க்க
அதமபலனுண்டாகும் நன்மையில்லை
அவனியிலேகவலையுடன் கலங்குவாரே.

(இ-ள்.) புதபகவான் ரிஷபராசியி லிருக்கும்போது குரு, சுக்கிரன், சந்திரன் சேர்ந்தாலும் பார்த்தாலும் வித்யாசமர்த்துடன் உத்யோகஞ் செய்தும், வியாபாரஞ் செய்தும் திரவிய சேகரஞ் செய்வதற்காகும். அதனுல், பொன், பொருள் மிகவும் சேரும். சகலரும் புகழுந் தன்மையான மேன்மையா யிருப்பதற்காகும். ஆனுல், சனி, ராகு, கேது, செவ்வாய், ரிஷபத்திலிருந்த புதனை சேர்ந்தாலும், பார்த்தாலும் பலவிதமான கஷ்டமும், கவலையு முண்டாகுமென் றுணர்வாய்.

## மிதுனராசியிலிருந்த புதன் பலன்

மிதுனத்தில்புதனுட்சி யாகநின்று
மேன்மையுடன்குருசுக்ரன் சனிபார்த்தாலும்
இதமுடனேசேர்ந்தாலும் வியாபாரத்தில்
இசைவாகவெகுலாபம் கிடைக்குமப்பா
பதமுடனேசனிராகு கேதுபார்க்க
பலதுன்பம்நேரிடுமென் றுரைத்திடாயே
நிதிசேரும்மேஷத்தில் குஜனிருக்க
நீதியாய்பூதலத்தில் ஜீவிப்பாரே.

(இ-ள்.) மிதுனராசியில் புதன் ஆட்சியா யிருக்கும் போது குரு, சுக்கிரன், சந்திரன் பார்த்தாலும் சேர்ந்தாலும் பெருந்தன்மையான வியாபாரஞ் செய்து விசேஷ

காகும். அர்சமயம் மேஷத்தில் செவ்வாய் ஆட்சி பெற்றிருந்தால், காணி, பூமி, நிலபலத்துடன் வாழ்ந்திருப்பார்கள். ஆனல், சனி, ராகு, கேது மிதுனத்திலிருக்கும் புதனுடன் சேர்ந்தாலும், பார்த்தாலும், பலவிதமான கஷ்டமும், கவலையும் சூழ்ந்து பலவித துன்பமும் துயரமும் அதிகரித்து வறுமையானரா யிருப்பதற்காகும்.

## கடகராசியிலிருந்த புதன் பலன்

கடகத்திலிருக்கும்புத னேடுசந்த்ரன்
கலந்திருக்கும்போதுகுரு உச்சமாகி
திடமாகசசிமாலோ டிருக்கும்போது
தீரவைராக்யமாய் வித்தைகற்று
படபடப்பாய்இராஜாங்க உத்யோகஞ்செய்து
பற்பலவர்த்தகஞ்செய்து கீர்த்தியோங்கி
அடைவாகபூதலத்தில் வாழ்ந்திருந்து
ஆஸ்திபூஸ்திதியுடனே விளங்குவாரே.

(இ-ள்.) கடகராசியில் புதனிருக்கும்போது சந்திரன் ஆட்சியாகவும், குரு உச்சமாகவு மிருந்து சேர்ந்திருக்க ஜாதகன் தைரியமாய் வித்யாசாலைக் கேகி வைராக்கியமாய் வித்தை கற்று மிகவும் சாமர்த்தியமாய் இராஜாங்க உத்தியோகஞ் செய்தும், இன்னும் பலவிதமான வர்த்தகஞ் செய்தும், மகா தனவந்தனுக ஆஸ்தி பூஸ்தியுடன் வாழ்ந்திருப்பார். இந்த கிரகங்கள் மூவரும் கடகத்தி லிருக்கும்போது பிறப்பதற்கு வெகு புண்யபல

யிருக்கவேண்டும். இந்த சமயத்தில் மிதுனமே லக்கினமா யிருந்தால் விசேஷ நன்மையுண்டாகும்.

## சிம்மராசியில் புதனிருந்த பலன்

சிம்மத்தில்புதனிருக்க கேதுராகு
சேர்ந்திருந்தும்பார்த்தாலும் சனிசேய்காணில்
பங்கமாய்பலகாரியம் விபர்த்தமாகும்
பட்டகஷ்டம்வீணுகி கவலையுண்டாம்
தங்கியேசூரியனும் ஆக்ஷிபெற்று
தனுசிலிருந்தேகுருவும் பார்த்திட்டாலே
எங்கெங்கும்கீர்த்திபெற்ற தனவானுக
இருப்பார்கள்பிரபுவென் றுலகோர்முன்னே.

(இ-ள்.) சிம்ம ராசியில் புதனிருக்க அவரை சனி ராகு கேது பார்க்க எந்த காரியமும் செய்வதற்கு ஆரம்பஞ் செய்தால் பலவிதமான பங்கமாகும். அப்படியும் விடா முயற்சியாய்ச் செய்தாலும் எடுத்த காரியம் வீணாகி பல வித கவலையுண்டாகும். ஆனால், சூரியன் சிம்மராசியில் ஆட்சி பெற்று புதனுடன் சம்பந்தமா யிருந்தும், தனுசில் குருவிருந்து ஆட்சியாய் சிம்மராசியிலிருந்த சூரியனையும் புதனையும் காணில் பலவிதமான சாமர்த்தியஞ் செய்து கீர்த்திப் பிரகாசமாய் வர்த்தகஞ் செய்தும், உத்தியோகஞ் செய்தும் சகலரும் புகழ்ந்துரைக்கும்படியான பெருமை யுடன் பிரயத்தனமாய் உலகத்திலுள்ளோர் மெச்சுந் தன்மையாய் ஜீவித்திருப்பார்கள்.

## கன்னியாராசியில் புதனிருந்த பலன்

கன்னியிலேபுதனுட்சி உச்சமாகி
காணுமந்தசுக்கிரனும் குருவுஞ்சந்த்ரன்

நன்னயமாய்யிருந்தாலோ வர்த்தகஉத்யோகம்
நலமுடனேதான்புரிந்து பணஞ்சேர்த்தன்டாய்
பொன்பொருள்பூஷணலாபத் துடனேவாழ்ந்து
புவியிலுள்ளதனது பந்துமித்ரரெல்லாம்
அன்புடன்புகழ்ந்துரைக்க ஆஸ்திபூஸ்தியோடின்பாய்
அவனியிலேவாழ்ந்திருப்பா ரறிகுவீரே.

(இ-ள்.) கன்னியா ராசியில் புதன் ஆட்சி உச்சமாயிருக்க, சுக்கிரனும், குருவும், சந்திரனும், புதனுடனே சேர்ந்திருந்தால் வித்தையிற் சிறந்து உத்தியோகஞ் செய்தும், பலவிதமான கௌரவ வர்த்தகஞ் செய்தும், பலவிதமான சமர்த்தினால் ஆஸ்தி பூஸ்தி யுடையவர்களாய் தனந்தான்ய சம்பத்துடன் பந்து மித்திரர் சகிதம் சுகானந்தமாய் வாழ்ந்திருப்பதற்காகும்.

## துலாராசியில் புதனிருந்த பலன்

புதபகவான்துலாராசி தனியிருக்க
பொருந்தியேசுக்கிரனும் ஆட்சியாக
சதமெனவேமிதுனத்தில்வியாழ னிருந்துபார்க்க
சனிஉச்சமாகவே சேர்ந்திருக்க
விதவிதமாய்வர்த்தகஞ்செய் தெவருமெச்ச
விளங்குவான்லக்ஷாதி பிரபுவாக
இதமாககன்னியிலே பிறந்தோருக்கு
இத்தகையபலனெல்லாம் நடக்கும்பாரே.

(இ-ள்.) புதபகவான் துலா ராசியிலிருந்தும், அந்த ஸ்தானத்திலேயே சுக்கிரபகவான் ஆட்சியாகவும், சனி பகவான் உச்சமாகவும் மிருக்கும்போது குரு பகவான்

மிதுனத்திலிருந்து துலாராசியைப் பார்க்க பலவிதமான வர்த்தகஞ் செய்து பிரபுவாக விளங்குவான். ஆனால், கன்னியா லக்கினத்தில் பிறந்தவர்களுக்கு மேற்படி துலா ராசியில் மேற்குறிப்பித்த விதமாக கிரகங்களிருந்தால் இலஷாதி பிரபுவா யிருப்பதற்காகும்.

### விருச்சிகராசியில் புதனிருந்த பலன்

விருச்சிகத்தில்புதனிருக்க செவ்வாய் ஆட்சியாக
விரும்பியிருந்தாலும்குரு கடகத்திலுச்சம்
பெருமைபெற்றுபார்வைதனை செலுத்தினாலே
பேசுபுகழ்கீர்த்திவா னாய்விளங்கி
அருமைசேர்கப்பல்வியா பாரஞ்செய்து
அநேகமாய்பொருள்சேர்த்து நிலமும்பூமி
தருணமே வாங்குவார்சனிராகு கேதுபார்க்க
தரித்திரமாயிருப்பார்கள் கவனிப்பாயே.

(இ-ள்.) விருச்சிக ராசியில் புதபகவானிருக்கும்போது செவ்வாய் ஆட்சியாய் புதனுடன் சேர்ந்திருக்கக் கடக ராசியில் குரு உச்சம் பெற்று விருச்சிகத்திலிருக்கும் புதனை யும் செவ்வாய் கிரகத்தையும் பார்த்தால் கடல் மார்க் கத்தின் தீவுகளின் சரக்குகளை கப்பலிற் கொண்டு வந்து பற்பல தேசத்திலும் வியாபாரஞ் செய்து விசேஷமாய் திரவிய சேகரஞ் செய்து கப்பல் வியாபாரியென பெய ரெடுத்து இலக்ஷாதி பிரபுவாய் விளங்கி, காணி, பூமி, வீடு, மனை முதலான நில புலன்களை வாங்கிக் கொண்டு பந்துமித்திரர் புகழ வெகு மேன்மையாக ஜீவித்திருப்பார்

கள். ஆனால், சனி ராகு கேது பார்வையானால் மன விசாரமா யிருப்பார்கள்.

## தனுசுராசியில் புதனிருந்த பலன்

தனுசென்னும்ராசியிலே புதனிருக்க
தகுந்தவிதம்மகரத்தில் சனிசேய்நிற்க
கனமுடனே குருதனுசில் ஆட்சியாக
கனகமணிவியாபாரி யாகவாழ்வான்
தனியாகபுதனிருந்தால் பலன்தானற்பம்
தக்கபடிகேதுராகு சேரபார்க்க
நினைவில்பலயோசனைகள் விளங்கினாலும்
நிலைக்காது செய்கார்யம் வர்த்தமாகாதே

(இ-ள்.) தனுசு ராசியில் புதனிருக்கும்போது மகரத்தில் சனி ஆட்சியாகவும், செவ்வாய் உச்சமாகவுமிருந்து குருவானவர் தனுசில் ஆட்சி பெற்று புதனுடனே சேர்ந்திருந்தால் நவரத்ன வியாபாரஞ் செய்து வெகு பொருள் தேடி பூமி லாபத்துட னிருப்பார்கள். புதன் தனியாக இருந்தால் சமபலனாய் நடக்கும். ராகு கேது பார்த்தாலும் சேர்ந்தாலும் மனதில் நினைவு மாத்திரம் பலவிதமாய் தோற்றும். ஆனால், நினைத்த காரியம் முடியாது.

## மகரராசியில் புதனிருந்த பலன்

மகரத்தில்புதனிருக்க சனிசேய்சேர
மாட்சிமையாய்தமிழ்வித்தை கற்றுணர்ந்து
புகழுடனேவர்த்தகத்தில் லாபமேற்று
பூமிமனை வீடுகளும் வாங்கிக்கொண்டு

ஜெகப் புகழவாழ்ந்திருப்பார் பெருமையாக
செந்திருவும் வந்ததுவும் குருபார்த்தாலே
அகமகிழவாழ்ந்திருப்பா ரென்றேநாளும்
அவனியில்சூழ்ஜாதகர்க்குப் புகலுவாயே.

(இ-ள்.) மகர ராசியிலே சனி ஆக்ஷியாகவும் செவ்வாய் உச்சமாகவு மிருக்கும்போது புதபகவானும் மகர ராசியி லிருந்தால் வித்யா விர்த்தியினலும், வியாபார விர்த்தியினுலும் திரவிய சேகரஞ் செய்து பூமி, மனை, வீடு நிலபுலத்துடனே மிகவும் பெருமையுடனே கீர்த்திப் பிரகாசமாய் வாழ்ந்திருப்பார்கள். ஆனல், குரு பார்த்தால் மகாலட்சுமி கடாக்ஷத்துடனே பந்துமித்திரர் புத்திர பாக்கியத்துடனே சுக ஜீவியாய் வாழ்ந்திருப்பதற் காகும்.

## கும்பராசியில் புதனிருந்த பலன்

கும்பத்தில்புதனிருக்க சனி ஆட்சியாக
குருசுக்ரன்சேர்ந்தாலும் பார்த்திட்டாலும்
அம்புவியிலேரா ஜ யோகமாக
அனுபவிப்பார்பலநன்மை விசேஷமாக
செம்பாம்புகேது ராகுடனே சூரியன்
சேர்ந்தாலும் பார்த்தாலும் ஜாதகர்க்கு
வன்பானபலதுன்ப துயரஞ்சூழும்
வையகத்தில்சுகமில்லா திருப்பர்தானே.

## மீன ராசியில் புதனிருந்த பலன்

மீனராசியில்குருவும் ஆக்ஷியாக
மேன்மையுடன்சுக்கிரனும் உச்சமாக

நானிருந்தால்புதனிருக்க சங்கீதவித்வானுகி
தரணியில்வாழ்வோர்க்கு குருவாய்த்தோன்றி
ஞானமுடன் தத்வப்பிரசங்கியாகி
நல்லறிவுதான்விளங்கி சுகமாய்வாழ்வார்
வானசாஸ்திரங்கற்று ஜோதிடத்தில்
வல்லவராயிருப்பார்கள் கவனிப்பீரே.

(இ-ள்) மீனராசியில் குரு ஆட்சியாகவும் சுக்கிரன் உச்சமாகவு மிருக்கும்போது, புதனும் மீனராசியி லிருந்தால் உலகத்தி லிருப்போருக்கு குருவாக விளங்கி ஞானேபதேசஞ் செய்தும், தத்வப்ரசங்கஞ் செய்தும், நல்லறிவு விளங்கி சுகமாக வாழ்ந்திருப்பதுடன், வான சாஸ்திரங் கற்று ஜோதிடத்தில் தேர்ச்சியுடையவர்களாயிருப்பார்கள்.

## சீஷன் சொல்வது

### எண்சீரடி விருத்தம்

ஐயனேகுருநாதா அடியேனுக்கு
ஆதாரமாகவே ஜோதிடத்தை
துய்யனேபோதித்தீர் கிருபைகூர்ந்து
தொல்லுலகின்ஜாதகர்க்கு இராசிதன்னில்
மெய்யனேவியாழனின்ற பலனெனக்கு
மேன்மையாய்சொல்வீரென் றுமதுபாதம்
வையமிசைநம்பியே பணிந்துயானும்
வணங்கியேதுதிக்கின்றேன் குருவேபோற்றி.

(இ-ள்.) குரு ஸ்வாமி! அடியேனுக்கு சகாயமாக ஜோதிட சாஸ்திரத்தை போதிப்பதற்கு கிருபை செய்து கிரகநிலை யனைத்தும் கற்பித்தீர். ஆனால், மேஷம்

ரிஷபம், மிதுனம், கடகம், சிம்மம், கன்னி, துலாம், விருச்சிகம், தனுசு, மகரம், கும்பம், மீனம் என்னும் பனிரெண்டு ராசிகளில் எந்தெந்த ராசியில் குருவிருந்து சுபாசுப பலன் கொடுப்பாரோ அதை அடியேனுக்கு விபரமாய்ச் சொல்வீரென்று தமது திருவடியைப் பணிந்து, தமது திருவருளை சிந்திக்கின்றேன் அனுக்கிரகஞ் செய்வீர் சுவாமி.

## குரு சொல்வது

சொல்லுவேனென்சிஷ்யா விபரமாக
ஜோதிடத்தின்சாராம்ஸம் மனதுட்கொண்டு
அல்லல்துன்பத்தாற்றிகைத்து கலங்கினாலும்
அகமெலிந்துவருத்தமுரு திருந்தென்னுளும்
வல்லாண்மையாயிருப்பீ ருலகோர் முன்னே
வானோர்கள்குருவான வியாழனெந்த
நல்லவைசெய்யும் ராசிதனிலேநின்றால்
நடக்கின்றபலன்சொல்வேன் கவனிப்பாயே.

(இ-ள்.) அன்பான சிஷ்யனே! ஜோதிட சாராம்சத்தை விபரமாய் சொல்லுகின்றேன் கவனிக்கவும் ஜாதகர்க்குத் துன்பமும், துயரமும் வருவதெல்லாம் கிரக நிலையாகுமென்று மனவிசார மெய்தாமல் மனோற்சாகமா யிருக்க வேண்டும். கிரகங்கள் நல்ல ஸ்தானத்தி லிருக்கும்போது நல்ல பலனும் கெட்ட ஸ்தானத்தி லிருக்கும்போது கெட்ட பலனும் நேரிடுமாகையால் அதற்குத் தகுந்த விதமாக சுகதுக்கத்தை யனுபவிக்கும்போது மனோ விசாரமாகிலும், மனோவிசாரம் மில்லாமல் சந்தோஷமும்

பகவத் பக்தியானந்தமா யிருந்தால் யாதொரு பாபத்தி லும் சிக்காமல் சுத்தமா யிருந்து இகத்திற் கீர்த்தியும் பரத்தில் முக்தியும் பெறுவதற்காகும். இவற்றிற் கிசைந்த விதமாய் மேஷம், ரிஷபம், மிதுனம், கடகம், சிம்மம், கன்னி, துலாம், விருச்சிகம், தனுசு, மகரம், கும்பம், மீனம் என்னும் பனிரெண்டு ராசியில் எந்தெந்த ராசியில் குரு வருகின்றாரோ அப்போது நடக்கும் பலன் விபரத்தைச் சொல்லுகின்றேன் கவனிப்பாய்.

## மேஷராசியிலிருந்த குரு பலன்

*எண்சீரடி விருத்தம்*

குருபகவான்மேஷத்தி லிருக்கும்போது
குஜனாட்சியாயிருந்து சூரியனுச்சம்பெற்று
பெருமையாயிருந்தாலே தனவந்தனாகி
பொன்பொருளும்வீடுமனை ஆஸ்திபூஸ்தி
அருமையுடனேசேர்த்து பந்துக்கூட்டம்
அனைவருக்கும்மேலாக கீர்த்திபெற்று
தருமதானஞ்செய்து வாழ்வாரென்று
தைரியமாய்ப்புகலுவாய் ஜாதகர்க்கே.

(இ-ள்.) குரு பகவான் மேஷராசியி லிருக்கும்போது செவ்வாய் பகவான் மேஷத்தில் ஆட்சியா யிருந்தும், சூரியன் உச்சனாக மேஷத்திலிருந்தால் அந்த ஜாதகர்கள் வித்யாசமர்த்தினால் உத்தியோகஞ் செய்தும் வியாபாரஞ் செய்தும், பலவிதமாய் திரவியஞ் சேகரித்து வீடு, மனை, நிலபுலத்துடனே ஆஸ்தி பூஸ்திகளாய் சுக ஜீவியா யிருந்து தமது பந்துக் கூட்டத்தார் புகழ்ந்துரைக்கு

தன்மையாய் அன்னதான தரும கைங்கரிய மனைத்தும் செய்து மனோல்லாசமாய் ஜீவித்திருப்பார்கள்.

### ரிஷபராசியிலிருந்த குரு பலன்

அன்புடனே ரிஷபத்திலே குருவிருக்க
அவருடனே சந்திரனும் புகரும்சேர
பொன்பொருளுஞ்சேகரிப்பார் தடையிராது
போதவேசனியும் சேய்பார்த்தாலும்
நன்மையில்லை துன்பமுண்டு வறுமைசூழும்
நவிலொணுபலகவலை வந்து சூழும்
வன்மையாய்ஜாதகரின் லக்னராசி
வகையுடனேதானறிந்து பலன்சொல்வாயே.

(இ-ள்.) ரிஷபராசியில் குருவிருக்க அவருடனே சந்திரன் உச்சமாகவும், சுக்கிரன் ஆட்சியாகவு மிருப்பதினுல் அந்த ஜாதகன் விசேஷமாய் திரவியம் சேகரித்து காணி, பூமி, வீடு, மனை, நிலபுலத்துடனே மகா தனவந்தனுக விளங்குவார்கள். ஆனால், சூரியன், சனி, செய்வாய் சேர்ந்தாலும் பார்த்தாலும் துன்பமும் துயரமும் கஷ்டமும் கவலையும் வறுமையும் பொருந்தியவர்களா யிருப்பார்கள். ஆகையால், ஜாதகரின் ஜனன லக்னத்தைப் பார்த்துப் பலன் சொல்லவும்.

### மிதுனராசியிலிருந்த குரு பலன்

குருபகவான்மிதுனத்தி லிருக்கும்போது
கூறவேபுதனுட்சி யாயிருக்க
கருணையுடன்சுக்கிரனும் சந்திரன்பார்க்க
சகலகலைவல்லவரா யிருக்கலாகும்
பொருளுடனே ஆபரணம்வீடுபூமி
பொன்வெள்ளிநாணயமும் சேகரித்து

பெருமையுடன்வாழ்ந்திருப்பா ருலகிலென்று
பேதமில்லாதுரைத்திடுவாய் ஜாதகர்க்கே.

(இ-ள்.) மிதுன ராசியில் குருபகவா னிருக்கும்போது புதனும் ஆட்சியாய் சேர்ந்திருக்க சுக்கிரனும் சந்திரனும் பார்வை செலுத்தினுல் அந்த ஜாதகன் எந்த கல்வியை கற்பதற்கு விரும்புகின்ருனே அவையனைத்தும் தனக்கு எளிதில் சித்தியாகி சகலவித வித்தைகளிலும் தேர்ச்சி யடைந்த சமர்த்தனுய் உத்தியோகத்தினுலும் வியாபாரத் தினுலும் திரவிய சேகரஞ் செய்து பொன், வெள்ளி ஆபர ணுதிகளுடனும் வீடு, பூமி, மனை, நிலபுலத்துடனே மிக வும் பெருமையுடன் யாவரும் புகழ்ந்துரைக்கும்படியாக ஜீவித்திருப்பார்கள்.

## கடகராசியிலிருந்த குரு பலன்

கடகத்திற்குருபகவா னுச்சமாகக்
கதிரவனுமேஷத்தி லுச்சமாகி
திடமுடனேசந்திரனுல் ஆட்சியானுல்
திருமகளின்கடாட்சத்தால் நன்மையுண்டு
அடைவுடனேசனிராகு சேய்கேதுகாணில்
ஆகாது நற்பலன்கள் கிடைத்திடாது
மடத்தனமும்பிணிமயக்கம் விசனம்சோம்பல்
மந்தபுத்தியாயிருப்பா ரென்றுசொல்லே.

(இ-ள்.) கடகராசியில் குருபகவான் உச்சமா யிருக் கும்போது சூரியன் மேஷத்தில் உச்சமாய் நிற்க சந்திரன் கடகத்தால் ஆட்சியா யிருக்கும்போது பிறந்த ஜாதக னுக்கு லட்சுமி கடாட்சமும் பொருந்தி, சதாகாலமும் தனதான்ய பசு புத்ரலாபத்துடனே தனவந்தராய் ஜீவித்திருப்பார்கள். ஆனுல், செவ்வாய், சனி, ராகு,

கேது பார்த்தாலும் சம்பந்தமானுலும், மந்த புத்தியாய் யாதொரு நற்பலனு மில்லாமல் சோம்பலும், விசனமும் பொருந்தியவரா யிருப்பதற்காகும்.

## சிம்மராசியிலிருந்த குரு பலன்

சிம்மராசியில்குருவு மிருக்கும்போது
செவ்வாயும் நட்பாக சேர்ந்திருக்க
பங்கமிலாசூரியனும் ஆட்சியாக
பராக்ரமமாய்உத்தியோக வர்த்தகத்தால்
தங்கமுடன்வெள்ளிசெம்பு பணமும்சேர்த்து
தரணியிலேபெருமையாய் வாழ்ந்திருப்பார்
சங்கையுடன்சனிராகு கேதுபார்த்தால்
சஞ்சலமும்வறுமையும்சூழுந் தலைவர்தானே.

(இ-ள்.) சிம்மராசியில் குருபகவா னிருக்கும்போது அந்த சிம்மத்தில் செவ்வாய் நட்பாய் சேர்ந்திருக்க, சூரிய பகவான் ஆட்சியாகி சம்பந்தமா யிருக்கையில் பிறந்த ஜாதகன் மகா சமர்த்தனுய் விளங்கி, வித்யாசம்பத்துடன் உத்தியோகஞ் செய்தும் வர்த்தகஞ் செய்தும் வெகு லாபத்துடன் தங்க நாணயமும் செம்பு நாணயமும் விசேஷமாக சேகரித்து பூமியிலே தமது பந்துமித்திரர்முன் மிகவும் மேன்மையாக ஜீவித்திருப்பதற்காகும்.

## கன்னியாராசியிலிருந்த பலன்

கன்னியிலேபுதனுட்சி உச்சமாக
கருதுபுகழ்வியாழனுமே சேர்ந்திருக்க
நன்மையுடன்வித்வானுய் பலசாஸ்திரங்கற்று
நலமுடனே சங்கீத வித்வானுகி

பொன்பூமிவீடு நில புலமும் பெற்று
பொருளதிகமாய்சேர்த்து வாழ்ந்திருப்பார்
தன்மையுடன் சனிராகு கேதுபார்த்தால்
தரணியிலேவறுமையினுல் திகைப்பர்தானே.

(இ ள்) கன்னியாராசியில் புதன் ஆட்சி உச்சமாய் இருக்கும்போது அவருடனே குரு பகவானிருந்தால் ஜாதகன் மகா வித்வானுய் பற்பல சாஸ்திரமும் கற்று சங்கீத வித்வானு யிருந்து பொருள் விசேஷமாய் சேகரித்து பூமி வீடு, நில புலமும் பெற்று, விஷேமாய் பொருள் சம்பாதித்து சுக ஜீவியாய் வாழ்ந்திருப்பான். ஆனுல், சனி, ராகு, கேது பார்த்தாலும் சேர்ந்திருந்தாலும் அடிக்கடி சமயம் நேரிடும்போதெல்லாம் வறுமைபாளனு யிருப்பானென் றுணர்வாய்.

## துலாராசியில் குருவிருந்த பலன்

துலாராசிதன்னிலே குருவிருந்தால்
துயரில்லாமனதைரியமாயிருப்பார்
பலகலையமன்பாக கற்றுணர்ந்து
பார்தனிலேவித்வானுய் விளங்கிநல்ல
கலையுணர்ந்தஞானமய மாய்விவேகம்
கருத்திலே நல்ல புத்தி மிகவேதோன்றி
நலமுடனேதனவந்த னுய்விளங்கி
நற்கீர்த்தியோடிருப்பார் கவனிப்பீரே.

(இ-ள்.) துலா ராசியில் குருபகவானிருக்கும்பொது துன்பமும் துயரமுமில்லாமல் மனதைரியமா யிருப்பதுடன் பலகலையும் தெளிவாய் கற்றுணர்ந்து ஞானமாய் விவேகத்திற் சிறந்து மனதில் நல்ல புத்தியுடன் விளங்கி கீர்த்திப் பிரகாசமா யிருப்பார்கள். (இவ்வளவு நன்மையும் கன்னியாராசியில் புதனிருக்கும்போது அந்த லக்கி

னத்திலேயே ஜனனமானவர்களுக்குத்தான் பொருந்தி யிருப்பதுடன் தனவந்தனுகவு மிருப்பார்கள்.)

## விருச்சிகராசியில் குருவிருந்த பலன்

### விருத்தம்

விருச்சிக ராசிதன்னில்
  வியாழனு மிருக்கும்போது
மருவிலா செவ்வாய்நாதன்
  மகரத்தி லுச்சமாக
அருமையாய் சனிகும்பத்தில்
  அமர்ந்திருந்தால் நல்யோகம்
பெருமையாய் கிடைத்துநாளும்
  பொன்பொருளுடன் வாழ்வாரே.

(இ-ள்.) விருச்சிகராசியிலே வியாழபகவானிருக்கும் போது அந்த ராசிநாதனுகிய செவ்வாய் மகரத்தில் உச்சமா யிருக்கவும், சனி பகவான் கும்ப ராசியில் ஆட்சி பெற்றிருந்தால் பெரியோர்கள் சேர்க்கையுடன் ஞானப் பிரசங்கத்தில் விருப்பமும் தர்க்க சாஸ்திரத்தில் பெரு மையும் கிடைத்து சதா காலமும் குறையாத பொன் பொருளுடன் வாழ்ந்திருப்பார்கள்.

## தனுசுராசியில் குருவிருந்த பலன்

### கட்டளைக் கலிப்பா

தனுசுராசியிலே குரு ஆக்ஷியாய்
  தக்கசுக்கிரன் மீனத்திலுச்சமாய்
தனிமையாய் சனி மகரத்திருக்கினும்
  தகுந்தபுந்தியும் மிதுனத்திலுந்றிட
தனந்தான்யபசு புத்திரலாபமும்
  தைரியமுங் கீர்த்தி உத்யோகம் [illegible]

மனமகிழ்வாய்ப்பெற்றுப் பொன்பொருள்சேர்த்து
மாநிலந்தனில் ஜீவித்திருப்பாரே.

(இ-ள்.) தனுசுராசியில் குருபகவான் ஆட்சியாயிருக்கவும், புதபகவான் மிதுனத்தில் ஆட்சியாகவு மிருக்கும்போது ஜனனமான ஜாதகனுக்கு தனந்தான்யம் பசுபுத்ரலாபமும் மனதைரியமும் கீர்த்தியும் பெற்று உத்தியோகத்திலும் வியாபாரத்திலும் மனோற்சாகத்துடன் திரவியசேகரஞ் செய்து பொன் பொருள் சேர்த்துக்கொண்டு மகா தனவந்தனாகப் பூலோகத்தில் ஜீவித்திருப்பதற்காகும்.

### மகரராசீயில் குருவிருந்த பலன்

எண்சீரடி விருத்தம்

மகரத்தில்குருவிருக்க சனிசேய்சேர
மதிவீட்டிலிருந்துபுதன் குருவைப்பார்க்க
ஜெகமீதுபலகலையு முணர்ந்துஞானத்
தெளிவற்றவிவேகியென் றெவருமெச்ச
புகழுடனேபொருள்சேர்த்து வியாபாரஞ்செய்தும்
பூதலத்தில்உத்யோகஞ் செய்தும்நன்றாய்
அகமகிழவீடுநிலம் காணியாட்சி
அதிகாரமாகவே ஜீவிப்பாரே.

(இ-ள்.) மகராராசியிலிருக்கும் குருபகவானுடனே சனிபகவானும் செவ்வாய் பகவானும் சேர்ந்திருக்க புதன் கடகத்திலிருந்து பார்க்க உலகத்தில் பற்பல சாஸ்திரத்திலுஞ் சிறந்த வித்வானாகவும், விவேகமுடைய உத்யோகஸ்தனாகவும், வியாபாரியாகவு மிருந்து வெகு பொருள் சேகரித்து வீடு, மனை காணி பூமி வாங்கிக்கொண்டு ஆளடிமையுடனே அதிகாரமாய் ஜீவித்திருப்பார்கள்.

## கும்பராசியில் குருபகவானிருந்த பலன்

கும்பமெனும் ராசியிலே சனிமால்நிற்க
குருபகவானும்அந்த ராசியேற
அம்புவியில்வெகு கீர்த்தியாயிருப்பார்
அநேகவிதமாய்தனஞ்சேர்த் துலகில்வாழ்வார்
வம்பாகபருதிமதி ராகுகேது
வளர்குஜனும்பார்த்தாலும் சேர்ந்திட்டாலும்
செம்புதுட்டும்கிடையாமல் வறுமையாக
ஜெகமீதுதுயருற்றுத் திரிவர்தாமே.

(இ-ள்.) கும்ப ராசியில் குருபகவா னிருக்கும்போது அந்த ராசியிலே சனி ஆட்சியாகவு மிருக்க இவர்களுடனே புதபகவானும் சேர்ந்திருந்தால் அந்த ஜாதகன் பூலோகத்தார் மெச்சிக்கொள்ளுந் தன்மையாக கீர்த்திப் பிரகாசமா யிருப்பதுடன் மகா சமர்த்தாக திரவியஞ் சேகரித்து குடும்பரக்ஷகனாய் ஜீவித்திருப்பதற்காகும். ஆனால், சூரியன், சந்திரன், ராகு, கேது, செவ்வாய் முதலான கிரகங்கள் சேர்ந்தாலும் பார்த்தாலும் ஜாதகன் எவ்வளவு பிரயாசையாய் கஷ்டப்பட்டாலும், செம்பு துட்டும் கூட கையில் மீதியாகாமல் அடிக்கடி வறுமை நோயினால் கஷ்டப்படுவார்கள்.

## மீனராசியில் குருவிருந்த பலன்

குருபகவான்மீன ராசியிலேநிற்க
குஜன்ரவியும்மேஷத்தி லிருந்தாரானால்
பொருள்சேர்ந்துகாணிபூமி நிலமும்வாங்கி
பிரபுவெனபந்துகூட்டத் துடனேவாழ்வார்
கருணையுடன்சுற்றத்தார் சகாயத்தாலே
கவலையின்றிமனமகிழ்வா யிருக்கலாகும்
மருவியேசனிராகுகேது சேரபார்க்க
மந்தமதிவறுமைதுய ரெய்துந்தானே.

(இ-ள்.) குருபகவான் மீனராசியிலே ஆட்சியாயிருக்க அவருடனே வளர்பிறை சந்திரன் சேர அப்போது சூரியனும் செவ்வாயும் மேஷத்திலிருந்தால் மகா தனவந்தனென் றுலகோர் புகழுந்தன்மையான வெகு பொருள் சேகரித்து, வீடு, மனை, காணி, பூமி, வாங்கிக்கொண்டு மேலும் மேலும் பணத்தை விருத்தி செய்து பிரபுவென்று பந்துமித்திரர் புகழ்ந்துரைக்க மேன்மையாய் வாழ்ந்திருப்பதற்காகும். ஆனால், சனி, ராகு, கேது, மீனராசியி லிருக்கும் குருவுடனேயும், மேஷராசியி லிருக்கும் செவ்வாய் சூரியனுடனும் சேர்ந்தாலும் பார்த்தாலும் அற்ப புத்தியும், அறிவின்மையும், வறுமையும், துயரமும் அதிகரித்து சதா காலமும் ஏழ்மையாகவே யிருக்கும்படிச் செய்யும்.

குரு சொல்வது

அன்புறும்சீஷா நீயும்
  அறிவினு லுணர்ந்திட்டாயா
பன்னிரண்டுராசியிலும் சுக்கிரன்
  பக்ஷமா யிருக்கும்போது
அன்புடன் கிரகநோக்கும்
  அவர்களோ டிணங்கிநிற்கும்
தன்மைபோல் பலாபலன்கள்
  தருகுவா ரறிகுவாயே.

(இ-ள்.) எனது அன்பான சிஷ்யா! பனிரெண்டு ராசியிலும் சுக்ரபகவான் வருதம்போதும் மற்ற கிரகங்களின் சேர்க்கையின்படி பலன் கொடுப்பா ரென்றுணர்க.

சீஷன் சொல்வது

எண்சீரடி விருத்தம்

ஜெகம்புகழுமென்குருவே தெளிந்தஞான
  தேசிகாஜோதிட சாராம்ஸமெல்லாம்
மகிழுடனே அடியேனுக் குபதேசித்த
  மாக்ஷிமைசேராசிரியா சுக்கிரனும்ஒவ்வோர்

புகழிலகும்ராசியிலே வருகும்போது
புனிதனேநடக்கின்ற பலனைச்சொல்லி
தகுந்தவிதமெந்தனுக்கருள் செய்வீரென்று
தமதுதிருவடிபணிந்து துதிக்கின்றேனே.

(இ-ள்.) உலகமெல்லாம் புகழ்ந்துரைக்கும்படியான எனது குரு ஸ்வாமி! அடியேனுக்கு சோதிட சாராம்ஸத்தை யெல்லாம் விபரமாய் அநுக்கிரகஞ் செய்தீர். அவற்றின் சாராம்ஸமனைத்தும் அடியேன் தெரிவாய்க் கற்றுணர்ந்து புனிதனுனேன். ஆனால், சுக்கிரபகவானை வர், மேஷம், ரிஷபம், மிதுனம், கடகம், சிம்மம், கன்னி, துலாம், விருச்சிகம், தனுசு, மகரம், கும்பம், மீனமென்னும் பனிரண்டு ராசியிலும் வருதம்போது அவரால் நேரிடும் சுப அசுப பலன்களை அடியேனுக்கு விபரமாய்ப் புகல்வீ ரென்று தமது திருவருளைச் சிந்திக்கின்றேன் சுவாமி.

## குரு சொல்வது

மாசிலாமனதுடைய எனதுசிஷ்யா
மாநிலத்தின்மனிதர்கட்கு நன்மைதுன்மை
வீசியேவருவதென்றால் கிரகவேதை
விளங்கினல்துயரநண்டு விலகில்நன்மை
ஜோசியத்தின்விசேஷமெல்லாம் கவனித்தோர்க்கு
சுலபமாய்தெரியுமென்று மதிப்பாய்நேய
ஆசையுள்ளமாணுக்காசுக்கிரன் பலனைச்சொல்வேன்
அன்பாகக்கவனித்துக் கொள்ளுவாயே.

(இ-ள்.) குற்றமற்ற சுத்த மனதுடைய எனது அன்பான சிஷ்யா உலகினில் மனிதர்கட்கு நன்மையும் துன்மையும் விளங்குவதெல்லாம் கிரகங்களி லிருக்கும் ஸ்தான பலன்களேயாகும் என்றாலும் ஒவ்வொரு கிரகங்

களும் எந்தெந்த ராசியி லிருந்தாலும் அந்த ராசி பலத்துடனே அந்த கிரகங்களைப் பார்த்த கிரகத்தின் பலனும் சேர்ந்த பலனும் தகுந்த விதமாய்த் தருவார். அப்படியிருக்க இந்த சோதிட சாராம்ஸ பலன் விபரமாய்க் கவனித்தவர்கள் சுலபமாய்த் தெரிந்து கொள்வார்கள். ஜாதகன் அநுபவிக்கும் நன்மை துன்மை யனைத்தும் அவரவர்கள் முன் செனனத்தில் செய்த பாவபுண்ணிய வசத்தின்படியே பூமியில் கிரகங்களினால் சுகதுக்க மடைகின்றரென்பது உனக்குத் தெளிவாய்த் தெரியும். ஆனால், சுக்கிர பகவானும் மற்ற கிரகங்களின்படியே எந்தெந்த கிரகங்களின் சேர்க்கை பார்வை பெறுகின்றதோ அந்த பலன்களனைத்தும் விபரமாய்த் தருவதை புகல்வேன் கவனமாய்க் கேட்பாய்.

## சுக்கிரன் மேஷராசியிலிருந்த பலன்

### எண்சீரடி விருத்தம்

சுக்கிரனும்மேஷத்தி லிருக்கும்போது
சுரர்குருவும்புதன்சசியும் காண்பாராகில்
மிக்கவேபலன்தருவார் மென்மேலும்கீர்த்தி
மிகுதியாயடைந்திடுவார் சுகபோகபாக்கியம்
எக்காலமுங்குறையாய் வாழ்ந்திருப்பார்
இராகுகேதுக்கள்குஜன்ரவி சேரபார்க்க
துக்கமுடன்துயரத்தால் கலகஞ்சூழும்
துன்பமாய்வறுமையுற்று திகைப்பர்தானே.

(இ—ள்.) மேஷ ராசியில் சுக்கிர பகவான் இருக்கும்போது அவரை குரு பகவானும் புத பகவானும் சந்திர பகவானும் பார்த்தாலும் சேர்ந்திருந்தாலும் அதிக திரவிய லாபத்துடனே மேலும் மேலும் கீர்த்தியும், சுகபோக பாக்கியமும் தவறாமல் ஆயுள் வரையும் ஆனந்தமாய் அனுபவித்துக் கொண்டிருப்பார்

கள். ஆனால், ராகு, கேது, செவ்வாய் சூரியனும் மேஷத்தி லிருக்கின்ற சுக்கிரனைப் பார்த்தாலும் சேர்ந்தாலும், பல விதமாகிய கலகமும், பந்துக்களிடத்திலும் மனையாளிடத் திலும் சண்டை சச்சரவும், வறுமையும் துன்பமும் துயர மும் நேரிடுமென்று கவனித்துணர்வாய்.

### சுக்கிரன் ரிஷபராசியிலிருந்த பலன்

அன்புடனேசுக்கிரனும் ரிஷபந்தன்னில்
ஆட்சியாயிருக்கசனி புதனுஞ்சேர
நன்மைமிகவுண்டாகும் போகபாக்யம்
நல்லசுவையானருசி மிகுந்திருக்கும்
இன்பமுள்ளபலகார பக்ஷணங்கள்
இசைந்தஅன்னபதார்த்தங்கள் கிடைக்குமப்பா
துன்பமாம்குஜரவியும் ராகுகேது
தொடர்ந்தாலும்பார்த்தாலும் கவலையாமே.

(இ-ள்.) சுக்கிர பகவான் ரிஷப ராசியில் ஆட்சியா யிருக்க, சனி பகவானும் புதபகவானும் சம்பந்தமாய்ச் சேர்ந்திருந்தாலும் பார்த்திருந்தாலும் சதா காலமும் மன உற்சாகம், பெண்கள் கிலேசமும் நல்ல ருசி மிகுந்த பல கார பக்ஷணங்களும் நாவிற்கினிய அன்ன பதார்த்தங் களும் குறையாமற் கிடைப்பதுடன் போக பாக்கியங் களும் சுகானந்த வாழ்வும் மிக மகிழ்வாய் கிடைக்கும். ஆனால், சூரியன், செவ்வாய். ராகு, கேது பார்த்தாலும் சேர்ந்திருந்தாலும் பலவித துன்பமும், துக்கமும், கவலை யும், மனசஞ்சலமும், வறுமையும் சூழ்ந்து பலவிதமாய் கஷ்டமடையச் செய்யும்.

### சுக்கிரன் மிதுனராசியிலிருந்த பலன்

அசுரர்குருசுக்கிரனும் மிதுனராசி
அமர்ந்திருக்கப்புதனும் சேர்ந்திருக்க

இசைவாகதனுசில்குரு இருந்துபார்க்க
இராஜயோகபாக்ய சுகசௌக்கியங்கள்
பசையானவியாபார உத்யோகலாபம்
பந்துமித்திரர்நேயம் மாதர்சேர்க்கை
அசையாமல்கிடைக்கும்ரவி சேய்காணில்சேர
அலைச்சலுடன்தரித்திரமுற் றலைகுவாரே.

(இ-ள்.) சுக்கிரபகவான் மிதுனராசியி லிருக்கும் போது புதபகவானும் சந்திரபகவானும் அவருடனே சேர்ந்திருந்தும் குருபகவான் தனுசு ராசியிலிருந்து பார்வை செலுத்தினுல் ராஜயோக சுகபோக பாக்கியங்களை அனுபவிப்பதற் கிசைந்த திரவிய லாபந் தருவதற் கிசைந்த பெருமையான வர்த்தகங்களும் உயர்தரமான உத்தியோகங்களும் நடன மாதர் சேர்க்கையும் பந்து மித்திரர் கூட்டத்தின் உபசரணைகளும் விசேஷமாய்க் கிடைப்பதுடன் சதா காலமும் மனே உற்சாகமும் பொருந்தியிருக்கும். ஆனுல், மிதுனத்திலிருந்த சுக்கிரனை சூரியன், செவ்வாய் சேர்ந்திருந்தாலும் மன அலைச்சல் தீராக் கவலை பலவித ஆலோசனையால் ஏதொன்றையும் பூர்த்தி செய்யாமல் அரைகுறையாகவே செய்து எதிலும் திருப்தியில்லாமல் வறுமையாளராய் சகலருக்கும் பகையாளியாய் அடி உதையுடன் வெறியரா யலைந்து மிக வறுமையாளரா யிருப்பார்கள்.

### கடகராசியில் சுக்கிரனிருந்த பலன்

கடகமெனும்ராசியிலே புகரிருக்க
கதிரவனும்சேய்கூடில் கலகம்துன்பம்
விடாதுதுயரமாகுமப்பா ஜாதகர்க்கு
விதியிதுவென்றவர்களும் விசனிப்பார்கள்

அடைவாகசூர்குருவும் சசிமால்சேர்ந்தும்
அன்புடன்பார்த்தாலும் சுகபோகபாக்கியம்
திடமாகவேகிடைக்கும் தனதான்யலாபம்
திருமகளின் கடாக்ஷமதுசேருந்தானே.

(இ-ள்.) கடக ராசியில் சுக்கிரனிருக்கும்போது அவருடனே சூரியனும் செவ்வாயும் சேர்ந்திருந்தால் ஜாதகனுக்கு பலவிதமான மனஸ்தாபமும் எடுத்த காரியம் நிறைவேறுமலும் மாதர்களினுலும் பந்து மித்திரராலும் பலவிதமான கலகமும் சஞ்சலமும் வறுமையும் சூழ்ந்து சதா துக்கமும் துயரமும் துன்பமடையச் செய்யும். ஆனல், கடகத்திலிருந்த சுக்கிரனேடு புதன், சந்திரன் குரு சம்பந்தமானுலும் பார்வை செலுத்தினுலும் ஸ்திரீகளின் சிநேகம் சுகபோக பாக்கியம் கிடைப்பதற்கிசைந்த திரவிய லாபந் தருவதல்லாமல் வியாபார லாபத்தினுலும் உத்தியோக லாபத்தினுலும் பொருள் சேகரித்து சுகானந்தமா யிருப்பதற்காகும். மகாலட்சுமி கிருபையும் பொருந்தி யிருப்பதற்காகும்.

### சிம்மராசியில் சுக்கிரனிருந்த பலன்

புகர்சிம்மந்தனிலிருக்க சசியும்பொன்னன்
புதனிவர்கள்சேர்ந்தாலும் பார்த்திட்டாலும்
வெகுவாகதனந்தேடி கீர்த்திவானய்
வேசையர்களுடன்சேர்ந்து ஆடல்பாடல்
மகிழ்வாககண்டுகளித் தானந்திப்பான்
மாநிலந்தனிலிவனே பிரபுவாகும்
சுகமில்லைகதிர்சேய்ராகு கேதுகூடில்
சூழ்புவியில்தரித்திரனு யலைகுவானே.

(இ-ள்.) சுக்கிர பகவானுனவர் சிம்ம ராசியிலிருக்கும் போது குரு, சந்திரன், புதன் இவர்கள் சேர்ந்திருந்தாலும்,

சிம்ம ராசியிலிருக்கும் சுக்கிரனை இம் மூன்று கிரகங்களும் பார்த்தாலும் பலவிதமாய் திரவியந் தேடி தாசி வேசிகளுடனே ஆடல் பாடல் புரிந்து மனோல்லாசமாய் ஜீவித்திருந்து சகலரும் மெச்சும் கீர்த்திவந்தனாயிருப்பதற்காகும். ஆனால், சிம்மராசியிலிருக்கும் சுக்கிரனுடனே சூரியன், செவ்வாய், ராகு கேது சேர்ந்திருந்தாலும் சுக சவுக்கியமில்லாமல் சதாகாலமும் மனவியாகூலத்துடனே ஜாதகர்கள் பலவித கலகத்தினால் கஷ்டப்பட்டு கவலையுடன் தரித்திர இம்சையுடனே வறுமைநோயாற் கலங்குவார்கள்.

## கன்னியா ராசியில் சுக்கிரனிருந்த பலன்

கன்னியாராசியிலே புகரிருந்து
கதிரவன்சேய்சனிராகு கேதுகூடில்
துன்பமுண்டுதுயரத்தால் வறுமையுண்டு
தொலையாததுன்பமே யடைவர்கண்டாய்
தன்மையுடன் புதனாட்சி சனியுச்சமாக
தானிருந்தால்சுக்ரனுடன் சுகபோகங்கள்
நன்மையுடனேகிடைக்கும் தனதான்யலாபம்
நலமுடனேபோகசுக மெய்துவாரே.

(இ-ள்.) கன்னியா ராசியிலே சுக்கிரனிருந்தால் அவருடனே சனி, சூரியன், செவ்வாய், ராகு, கேது சேர்ந்தாலும் பார்த்தாலும் பலவிதமான துன்பமும் துயரமும் வறுமையும் கஷ்டமும் கவலையும் சூழ்ந்து துயரப்படுத்திக் கொண்டிருப்பதுடன் ஸ்திரீ சேர்க்கையில்லாமல் தியங்கி மயங்கி திக்கற்ற பரதேசிபோலலையச்செய்யும். ஆனால், கன்னியா ராசியிலிருந்த சுக்கிரனுடன் புதபகவான் ஆட்சி உச்சமாய் சேர்ந்திருந்தால் அந்த ஜாதகர்க்குப் பலவித நன்மையும் ஸ்திரீகளின் சிநேகமும் சுகபோக

பாக்கியமும் சுகானந்த வைபவமும் திரவிய லாபமுங் கிடைக்குமென் றுணர்வாய்.

### துலாராசியில் சுக்கிரனிருந்த பலன்

அன்புடனேதுலாராசி தனிலேசுக்ரன்
ஆக்ஷியாயிருந்திடவும் சனியும்சேர்ந்து
நன்மையாய்குருபுதனும் சசியும்பார்க்க
நலமுடனேவெகுலாப மனுபவித்து
கன்னியர்கள்சேர்க்கையுடன் சுகபோகங்கள்
களிப்புடனேயனுபவிப்பார் குறையுருமல்
வின்னமுடன்பருதிசேய் சேர்ந்திட்டாலே
விதவிதமாய்வேதனைவந் தெய்தும்பாரே.

(இ-ள்.) துலா ராசியிலே சுக்கிரபகவான் ஆட்சியாயிருக்கும்போது சனி உச்சமாய் அவருடனே சேர்ந்திருந்தாலப்போது குரு, புதன், சந்திரனும் பார்த்தால் வர்த்தகத்தாலும் உத்யோகத்தாலும் வெகு மேன்மையாய் திரவிய லாபம் கிடைப்பதுடன் சுக பாக்யாதி வைபவங்களும் பெண்கள் சேர்க்கை முதலான சுகசவுக்கிய மனைத்தும் கிடைக்கும். ஆனால், துலாராசியிலிருக்கும் சுக்கிரனுடன் சூரியன், செவ்வாய் சேர்ந்திருந்தால் விதவிதமான வேதனைகளும் வறுமையுஞ் சூழ்ந்து கஷ்டப்படுத்துவதுடன் பெண்களினுல் துன்பமுண்டாகும்.

### விருச்சிகராசியில் சுக்கிரனிருந்த பலன்

சுக்கிரனும்விருச்சிக ராசியிலிருந்தால்
செவ்வாயும்புதனிவர்கள் சேர்ந்திருக்க
மிக்கவேசுபபலனும் கொடுப்பதோடு
மேலானகீர்த்தியுடன் தனதான்யம்பூமி
தக்கதாய்கிடைக்குமென்று சாஸ்திரத்தில்



தகுந்தபடியேயுரைத்தோம் மானிடர்க்கு

சிக்கலா திசாபுத்தி பலனாராய்ந்து
செப்புவாய்ஜாதகரின் பலனைத்தானே.

(இ-ள்.) சுக்கிரபகவான் விருச்சிக ராசியில் இருந்தால் அவருடனே செவ்வாயும் புதனும் சேர்ந்திருந்தால் அதிகமாகிய சுபபலனும் கொடுப்பதோடு தனந்தான்ய சம்பத்துடனே பூமிலாபமும் கீர்த்தியும் பொருந்தி யிருக்கும். ஆனால், இலக்கின பலமும் திசாபுத்தி பலமும் ஆராய்ந்து பலன் சொல்லவும்.

### தனுசுராசியில் சுக்கிரனிருந்த பலன்

தனுசிலேசுக்கிரனு மிருந்திட்டாலே
தனதான்யம்பெருகுமடா சீஷாகேட்பாய்
அனுதினமும்பலவிதநற் புத்தியுண்டாம்
அன்புடனேவியாழனுமே மீனத்துற்றால்
தனகனமும்பந்து மித்திரர்களோடு
தரணியிலேவாழ்ந்திருப்பார் சுகமதாக
சனிராகுகேதுகுஜ னிவர்கள்சேர்ந்தால்
சண்டைசச்சரவுடனே துலங்குதுவாரே.

(இ-ள்.) தனுசிலே சுக்கிரபகவா னிருந்தால் ஜாதகர்க்கு தனந்தான்ய பசுபுத்ர லாபத்துடனே சகலவித நன்மையும் கீர்த்தியும் உண்டாகும். ஆனால், குருபகவான் மீனராசியில் ஆட்சி பெற்று சுக்கிரனிருக்கு மிடத்திற்கு நாலாமிடமாகிய மீனராசியிலிருந்தால் பந்து மித்திரரால் சகலவித நன்மையும் கீர்த்தியும் உண்டாகும். ஆனால், சனி, ராகு, கேது பார்த்தாலும் சம்பந்தமானாலும் முன்கோபமும் சண்டை சச்சரவு முண்டாகும்.

### மகரராசியில் சுக்கிரனிருந்த பலன்

மகரமெனும்ராசியிலே புகரிருந்தால்
மந்தனுமேசேர்ந்திருக்க குஜனும்சந்த்ரன்

மிகபலமாய்சேர்ந்திருந்தும் காண்பாராகுல்
மேன்மையுடன்கீர்த்தியுண்டு சம்பத்துண்டு
சுகமுண்டுதனந்தான்ய லாபமுண்டு
சூழ்புவியோர்சகாயமுண்டு கீர்த்தியுண்டு
தகமையுடன்லக்னபலன் திசாபுக்திகண்டு
தரணியில்வாழ்ஜாதகர்க்கு பலன்சொல்வீரே.

(இ-ள்.) மகரராசியிலே சுக்கிர னிருந்தால், அவருடனே சனி, செவ்வாய், சந்திரனும் சேர்ந்திருந்தால் அதிகாரமும் ஆண்மையும் கீர்த்தியும் சம்பத்துடன் திரவிய லாபமும் கிடைக்கும். ஆனால் ஜாதகர் பிறந்த இலக்கின பலனையும் அந்தந்த திசாபுத்தி பலனைபு மாராய்ந்து பலன் சொல்லவும்.

## கும்பராசியில் சுக்கிரனிருந்த பலன்

கும்பத்தில்சுக்கிரனி ருக்கமந்தன்
கூடினுல்பனேஞ்சாக மதிகரித்து
அம்புவியில்திரவியங்கள் சேகரித்து
ஆண்மையுடனதிகநன்மை மிகவமைந்து
செம்புவெள்ளிபொன்பணமும் தைரியமாக
சேகரித்துநன்மையுடன் வாழ்ந்திருப்பார்
வம்பணுகாதுலகமதி லிருப்பாரென்று
வழுத்துவாய்ஜாதகர்க்கு பலனைத்தானே.

(இ-ள்) கும்பராசியில் சுக்கிரனிருக்க அவருடனே சனி சேந்திரித்தால் வெகு திரவியஞ் சேகரித்து பொன், வெள்ளி, செம்பு பணங்களுக்குக் குறையாத லக்ஷ்மீகரமாயிருப்பார்கள். உலகத்தாருடனே யாதொரு கலகமுமில்லாமல் சுகமா யிருப்பதற்காகும்.

## மீனராசியில் சுக்கிரனிருந்த பலன்

மீனராசியில்சுக்கிர னுச்சம்பெற்று
மேன்மையுடனேயிருக்க குருஆக்ஷியாகி
தானுமேசேர்ந்திருக்க புதன்மிதுனத்துற்றால்
தன்வீட்டில்செவ்வாயும் ஆக்ஷியானால்
ஞானமுடன்கல்வியுண்டு சம்பத்துண்டு
ஞானத்திலுள்ளோர்கள் நட்புமுண்டு
தானேதான் வீடுமனை திரவியம்சேர்த்து
தரணியிலேவாழ்வார்கள் கவனிப்பாயே.

(இ-ள்.) மீனராசியில் சுக்கிரபகவானிருந்த பலன் எவ்விதமாகுமெனில், அவருக்கு அந்த ஸ்தானம் உச்சமானதால் அவருடனே குருவும் ஆட்சியா யிருக்க புதன் மிதுனத்தில் ஆட்சியாயிருந்தால் அந்த ஜாதகர் வித்யா விர்த்தி யடைந்து ஞானமும் கல்வியும் திரவிய சம்பத்தும் விசேஷமாய் பொருந்தி யிருப்பதற்காகும். உலகத்திலிருக்கும் சகலரும் தனக்கு சினேகமா யிருப்பதுடனே மகா சமர்த்தாய் திரவிய சேகரஞ் செய்து, விடு மனை விசேஷமாய் வாங்கிக்கொண்டு சுகஜீவியாய் வாழ்ந்திருப்பார்களென்று சொல்லப்படும்.

குரு சிஷ்ய சம்பாஷணையாகிய
சோதிட அரிச்சுவடி மூன்றும் பாகம்
முற்றிற்று.

---

 இனி நான்காம் பாகத்தைப் பார்க்கவும்.

உ

கடவுள் துணை

குரு சிஷ்ய சம்பாஷணையாகிய

# சோதிட அரிச்சுவடி

—∞∞—

## (நான்காம் பாகம்)

### கணேசர் துதி

விருத்தம்

அந்தரத்தமரர்போற்றும் ஆதியேஜோதிநாதா
சிந்தையிலுனைத்துதித்தேன் திருவருள்பெற்றுயானும்
அந்தமாய்ஜோதிஷத்தை அன்புடனெழுதுதற்கு
சுந்தரகணேசர்பாதம் துதித்து யான்பணிந்திட்டேனே.

### சீஷன் சொல்வது

எண்சீரடி விருத்தம்

ஞானகுருவேயுமது கிருபையாலே
ஞாலமதிலேபிறந்த ஜாதகர்க்கு
தானமர்ந்த நவக்கிரகம் இராசிதன்னில்
தன்மையுடனிருந்தாலும் பார்த்திட்டாலும்
ஆனபலன் அவரவர்க்குத் தருவாரென்று
அறைந்திட்டீராகிலும் சனீஸ்வரன்தான்
தானமர்ந்தஸ்தானத்தில் பலனைக்கேட்க
தம்திருவடிதனையே துதித்திட்டேனே.

(இ-ள்) சுவாமி குருநாதா! தாங்கள் அடியேனுக்கு போதித்தவரையிலும் கிரகங்கள் மேஷம், ரிஷபம், மிதுனம், கடகம், சிம்மம், கன்னி, துலாம், விருச்சிகம், தனுசு மகரம், கும்பம், மீனம் என்னும் 12-இராசியிலும் வருகிறபோது அவரவர்க்குத் தகுந்த பலனைக் கொடுப்பார்களென் றுரைத்தீர். ஆனால் சனிபகவான் மேற்குறிப்பித்த 12-இராசியிலும் வரும்போது என்னென்ன விதமாய் பலாபலன் தந்து சுக துக்கத்தை அனுபவிக்கச் செய்வாரோ அதை அடியேனுக்கு விபரமாய்ப் புகல்வீர்.

அன்பானயென்குருவே அடியேனுக்கு
அனுக்கிரகஞ்செய்தபடி யானுணர்ந்தேன்
இன்னும் பின்னால் நடக்கும் விபரமெல்லாம்
இனிதாகசொல் வீரென் றுமதுபாதம்
என்மனதிலேதுதித்து வினவலானேன்
எனக்கதனை விபரமாய்ச் சொல்வீரையா
சின்மயானந்தசிவ னருளினாலே
சீராகஜோதிஷத்தை கவனிப்பேனே.

(இ-ள்) எனது ஆசிரியராய் விளங்கிய குருஸ்வாமி இதுவரையிலும் அடியேனுக்கு உபதேசித்த ஜோதிட சாஸ்திர நூலாராய்ச்சி யனைத்தும் கவனித்தேன். இனி நடக்கும் ஜோதிட சித்தாந்தத்தின் படியே நவக்கிரகங்கள் ஜாதகர்க்கு கொடுக்கும் பலன்களை விபரமாய் தெரிவிப்பீர் சுவாமி!

குரு சொல்வது

அன்பானசிஷ்யா நீ சொல்லக்கேளு
அவனியில் வாழ் மாந்தருக்கு நவக்கிரகங்கள்

முன்ஜென்மந்தன்னிற்செய்த வினையைப்போல
மூதறிஞர்வாக்கியம்போல் பலன்கொடுக்கும்
தன்மையெல்லா முந்தனுக்கு சொல்லுகின்றேன்
தரணியில்ஜாதர்க்குப் பலனைச்சொல்வாய்
நன்மையாய்வாழ்ந்திருக்க விபரஞ்சொல்லி
நவக்கிரகதேவர்களை துதிக்கச்சொல்வாய்.

(இ-ள்.) எனது பிரியமுள்ள சிஷ்யா! யான் முன்பு உனக்கு தெரிவித்த ஜோதிட விபரத்தில் பின்னால் நடக்கும் விபரங்களையும் சொல்வேன், அவை யனைத்தும் கவனிப்பாய் ஆனால், மனிதர்கள் முன் ஜனனத்தில் செய்த வினையளவின்படியே நவக்கிரகங்கள் அந்தந்த ராசியில் வரும்போது கொடுக்கும் பலனையும் சொல்வேன். ஆகையால், ஜாதகர்களுக்கு பலனைச் சொல்லும்போது அந்த நவக்கிரக தேவர்களை ஸ்தோத்திரஞ் செய்யும்படி சொல்வாய்.

## குரு சொல்வது

அன்பானமாணுக்கா உனக்கமைந்த
அறிவினாலுந்தனுக்கு ஜோதிடத்தின்
தன்மையெல்லாம்விபரமாய் போதிப்பேன்யான்
தவறமலொவ்வொன்றும் விபரமாய்க்கேள்
பன்னிரண்டுராசியிலும் சனீஸ்வரன் தான்
பக்ஷமுடனேவந்து பலன்கொடுக்கும்
நன்மைதுன்மையுந்தனுக்கு சொல்லுகின்றேன்
நலமுடனேகேட்டுநீ தெரிந்துகொள்வாய்

(இ-ள்.) என் அன்பிற்கிசைந்த சிஷ்யனே! உனது அறிவினாலமைந்த ஆராய்ச்சியினால் ஜோதிடத்தின் தன்மை யனைத்தும் உனக்கு விபரமாய் போதிப்பேன்; நீ

அவைகளை யெல்லாம் கவனித்துக் கற்றுணர்வாய். ஆனால், இதுவரையிலும் உனக்கு யான் போதித்து வந்தவை யனைத்தும் கவனித்து வந்தாயல்லவா? தற் சமயம் உனக்கு போதிக்கும் விஷயங்களில் சனிபகவான் மேஷம், ரிஷபம், மிதுனம், கடகம், சிம்மம், கன்னி, துலாம் விருச்சிகம், தனுசு, மகரம், கும்பம், மீனம் என்னும் பனி ரெண்டு ராசிகளில் எந்தெந்த ஸ்தானத்தில் வருகின் றாரோ அந்தந்த ஸ்தானத்திற்குரிய பலாபலனை விபர மாய்ச் சொல்லுகின்றேன் கவனமாய்க் கேட்பாய்.

### மேஷராசியில் சனிபகவான் இருந்த புதன் பலன்

சனிபகவான்மேஷத்தி லிருப்பாராகில்
சார்ந்துகுஜன் புதன்குருவும் ரவியுங்கூடில்
தனந்தான்ய சம்பத்து மிகவுண்டாகும்
தரணியில்சூழ்பந்துக்கள் நேசமுண்டு
மனமகிழ்வும் உற்சாகம் கீர்த்தியுண்டு
மதித்திடும்ஜாதகலக்ன பலனுங்கொண்டு
கனமான திசாபுத்தி பலனைக்கண்டு
கழறுவாய்ஜாதகரின் பலனைத்தானே.

(இ—ள்.) சனிபகவான் மேஷராசியி லிருக்கும்போது அவருடனே குருவும் செவ்வாயும் புதனும் சூரியனும் சேர்ந்திருந்தால் மிகவும் மனமகிழ்வும் மனோற்சாகமும், தைரியமும், தனந்தான்யம், பசுபுத்ர லாபமும், பந்துமித் திரர்களின் சிநேகிதமு முண்டு. அதனால் வெகு நன்மை யுண்டாகும். ஆனால், ஜாதக லக்ன பலத்துடனே திசா புத்தியின் பலனையும் ஆராய்ந்துணர்ந்து பலன் சொன் னால் சரியா யிருக்குமென் றுணர்வாய்.

## சனிபகவான் ரிஷபராசியிலிருந்த பலன்

அன்பான சனிபகவான் ரிஷபத்துற்றால்
அவருடனேசுக்கிரனும் புதனும்சேர்ந்தால்
நன்மையுடன்கல்வி சங்கீதஞானம்
நலமுடனேகற்றுணர்ந்து தனவானாகி
வன்மையுடனேசமர்த்தாய் விளங்கியிந்த
வையகத்தோர்புகழ்ந்துரைக்கும் கீர்த்திவானாய்
பொன்பணிகள்பூஷணங்கள் அணிந்துகொண்டு
புகழாகவாழ்ந்திருப்பா ரென்றுசொல்லே.

(இ-ள்.) சனி பகவான் ரிஷபராசியி லிருக்கும்போது அவருடனே சுக்கிரனும் புதனும் சேர்ந்திருந்தால் கல்வியும், சங்கீதக்யானமும், ஆத்மலாப விசாரணையும், ஞானாசிரியனால் கற்றுணர்ந்து பலவிதமாய் பொருள் சேகரஞ் செய்து, பூலோகத்தார் மெச்சுந் தன்மையாக ஆடை ஆபரணாதிக ளணிந்துக்கொண்டு புகழ் பிரகாசமாய் வாழ்ந்திருப்பார்கள்.

## சனிபகவான் மிதுனராசியிலிருந்த பலன்

மிதுனராசியில்சனிஸ் வரனிருந்தால்
மால்மதியும்குருகூடி நிற்பாராகில்
அதிகசுகமாகவே வாழ்ந்திருப்பார்
ஆபரணப்பொன்வெள்ளி மிகவேசேர்த்து
நிதிமிகுந்த தனவந்த னாயிருப்பார்
நீணிலத்தோர்புகழும் பிரபுவாவார்
உதித்தலக்கினபலனும் திசாபுத்திதன்னை
உற்றுபார்த்தேடலனை உரைத்திடாயே.

(இ-ள்) மிதுனராசியில் சனிபகவானிருக்கும்போது சந்திரனும் புதனும் குருவும் சேர்ந்திருந்தால் இரத்தினாபரண அலங்கிர்தனுக விளங்குவதுடன் கல்வியிற் சிறந்து அரசாங்க உத்தியோகத்தில் அதிகார லக்ஷணத்துடன் வெகுபொருள் சேகரித்து உலகத்திலுள்ளோர்களெல்லாம் ஐஸ்வரிய மிகுந்த தனவந்தனுகிய சீமானென்று புகல்வதற்காகும். ஆனால், ராகு சம்பந்தமில்லாமலிருந்தால் தான் இத்தியாதி வைபவங்களுண்டாகுமென் றுணர்வீர். இவற்றை ஆராய்ச்சி செய்யும்போது திசாபுத்தி பலனையும் அவற்றின் பலனெவ்விதமா யமையுமோ அதனையும் இதனுடனே சேர்த்துப் பலாபலனாராய்ந்து பார்த்து பலனுரைக்க வேண்டும்.

## கடகராசியில் சனிபகவான் இருந்த பலன்

கடகராசியில்சனிசேய் ரவியும்நிற்க
கஷ்ட நஷ்டம்கவலையுடன் கலகமுண்டு
திடமாகசந்திரனும் குருவும்சேர்ந்தால்
தீரமுடன்பொருள்சேர்த்து தனவானுகி
கடலுலகில்கீர்த்திபெறும் சீமானுகிக்
கௌரவமும்மனைவி மைந்தருடனேவாழ்ந்து
கடவுள்பக்தியாய்விரத மனுஷ்டித்தன்பாய்
காசினியில்வாழ்ந்திருப்பார் கவனிப்பாரே.

(இ-ள்.) கடக ராசியில் சனி பகவானிருக்கும் போது, அவருடனே செவ்வாய் பகவானும் சூரிய பகவானும் சேர்ந்திருந்தால் பலவிதமான கஷ்ட நஷ்டமும் கவலையும் நேரிடும். பகைவரால் கலகமும் நேரிடும். ஆனால், கடகத்தில் சந்திரன் ஆட்சியாகவும்,

குரு உச்சமாகவு மிருந்தால் மனதைரியமும் உற்சாகமும் பொருந்தி யிருப்பதுடன் கல்வியில் தேர்ச்சியடைந்து உத்தியோகத்தினல் திரவியஞ் சேகரித்தும் வியாபார விர்த்தியாலும் பொருள் சேகரஞ் செய்து, கற்புநிலை தவருத உத்தம மனைவியுடன் வாழ்ந்து, சற்புத்திர பாக்கியம் பெற்று சதா ஆனந்தமாய் பகவத் பக்தியிற் சிறந்து விரதானுஷ்டானம் புரிந்து வெகு மேன்மையாய் ஜீவித்திருப்பதற்காகும்

## சிம்மராசியில் சனிபகவான் இருந்த பலன்

சிம்மராசியில்சனிசேய் ரவியும்நிற்க
சித்தமிகவேகலங்கி துயரத்தாழ்ந்து
எங்கெங்கும்பகையாகி கலங்குவார்கள்
எதிரிலுற்றுகுருபுதனும் மதியும்பார்க்க
மங்காததைரியமாய் பொருளும்சேர்த்து
மாநிலத்தில்வாழ்ந்திருப்பார் திசை ஆராய்ந்து
சங்கையில்லாபலனுரைப்பீர் சோதிடவல்லோரே
சரிசரியென்றேகேட்போர் மகிழுவாரே.

(இ-ள்.) சிம்மராசியில் சனிபகவா னிருக்கும்போது சூரியபகவானும் செவ்வாய் பகவானும் சேர்ந்திருந்தாலும் பார்த்தாலும் காண்போர்க் கெல்லாம் பகையாகி கலங்குவதுடன் மனவெறுப்பும் குரோதமு மதிகரித்து சதா காலமும் விசனமா யிருப்பார்கள். ஆனல், குரு, புதன், சந்திரன் பார்வை பெற்றாலும் சேர்ந்திருந்தாலும் மனோற்சாகமும் தைரியமும் பொருந்தியவராய் திரவியஞ் சேகரித்து சுகஜீவியா யிருப்பார்கள். அந்தச் சமயத்தில் நடக்கும் திசாபுத்தி பலனையும் விபரமாய் ஆராய்ச்சி செய்து

பார்த்து காலபலனை விபரமாய்ச் சொன்னால் ஜோதிடங் கேட்பவர் நடந்த விஷயமும் நடக்கும் விஷயமும் சரியா யிருப்பதால் இனி நடக்கப்போகும் பலனும் சரியாகவே இருக்குமென்று மனமகிழ்வார்களையா சோதிட கணித வல்லோர்களே.

### கன்னியா ராசியில் சனியிருந்த பலன்

கன்னியிலேசனிசேயும் ரவியும்நிற்க
　　கலகமுண்டுசகலருமே பகையாவார்கள்
நன்னயமாய்புதன்சந்திரன் குருவும்சேர்ந்தால்
　　நலமுண்டுசுகமுண்டு பொருளுமுண்டு
தன்மையாய்க்கேதுசுக்ரன் சேர்ந்திருந்தால்
　　தைரியமும்பக்தியுடன் ஞானமுண்டு
அன்புடனேலக்னபலன் திசை ஆராய்ந்து
　　அவனியோர்க்குரைப்பீர் ஜோதிடவல்லோரே.

(இ-ள்.) கன்னியா ராசியிலே சனி பகவானுடன் சூரியபகவானும் செவ்வாய்பகவானும் சேர்ந்திருந்தால் மனவிசனமும் கலவரமும் பொருந்தி சகலருக்கும் பகையா யிருப்பார்கள். ஆனால் கன்னியாராசியிலிருக்கும் சனி பகவானுடனே புதனும் சந்திரனும் குருவும் சேர்ந்தால் பலவித நன்மை யடைவதுடன் திரவியஞ் சேகரித்து சுகமா யிருப்பதற்காகும். கேது பகவானும் சுக்கிர பகவா னும் சேர்ந்திருந்தால் தெய்வபக்தியும், ஞானமும் திரவிய லாபமும் உண்டாகும். ஆனால், இலக்கினத்தின் குறிப் புணர்ந்து அந்தந்த சமயத்தில் நடக்கும் திசாபுத்தியை

ஆராய்ந்து அவற்றிற்கிசைந்த பலாபலனையும் சேர்த்து மேற்படி கிரகங்கள் நின்ற பலனையும் கவனித்துச் சொல்வீர்கள் ஜோதிடரே.

## துலாராசியில் சனிபகவான் இருந்த பலன்

அன்பாய்துலாராசியில் சனி உச்சமாகி
அமைந்திருக்கசுக்கிரனும் ஆட்சியானால்
நன்மையுண்டுபலவிதமாய் பொருளைத்தேடி
நகரோர் முன்கீர்த்தியுடன் சுகமாய்வாழ்வார்
தன்மையுடனேகேது சேர்ந்திருக்க
தரணியிலேஞானவானு யிருப்பார்
பொன்னவன்சூரியனவரோ டிருப்பாராகில்
பொருந்காதிந்தப்பலன்கள் கவனிப்பீரே.

(இ-ள்.) துலாராசியில் சனிபகவான் உச்சமா யிருக்கவும் அவருடன் சுக்கிரன் ஆட்சியா யிருந்தால் பலவித நன்மையுடன் திரவியஞ் சேகரித்து நகரவாசிகள் மதிக்குந் தன்மையான கீர்த்தியுடன் சுகமாய் வாழ்ந்திருப்பார். ஆனல், கேதுபகவானும் அவர்களுடனே சேர்ந்திருந்தால் பகவத்பக்தியானந்தத்தினுல் பெரியோர்கள் ஞானவானென்று மதிக்கும்படியான கீர்த்தி வந்தரா யிருப்பார்கள். அந்த சனி சுக்கிரனுடனே சூரியனும் குருவும் சேர்ந்திருந்தால் இந்தியாதி பெருமையும் புகழும் திரவிய லாபமும் குறையுமென்றுணர்வீர்கள், ஜோதிட கணித வல்லோரே. ஆனல், சனி திசையிலும் சுக்கிர திசையிலும் வெகு பொருள் சேகரித்து சுகஜீவியாய் வாழ்ந்திருப்பதற்காகும்.

## விருச்சிகராசியில் சனிபகவான் இருந்த பலன்

விருச்சிகராசியில்சனியும் குருமால்செவ்வாய்
விளங்கி... [illegible]

பொருள்மிகவேசேகரித்து தனவானாகி
பொன்பணிகள்தானணிந்து பூதலத்தில்
பெருமையாய்வாழ்ந்திருப்பார் அவ்வாறின்றி
பேசும்புதம்சனிராகு ரவியும்சேர
பருவத்திலவன்வாழ்வு வறுமையாகி
பாரோர்முன் பரிதவிப்பா னென்றுசொல்லே.

(இ-ள்.) விருச்சிக ராசியில் சனிபகவானிருக்கும் போது அவருடனே குருபகவானும், புதபகவானும், செவ்வாய் பகவானும் சேர்ந்திருந்தால் ஜாதகன் மகோ வுல்லாசத்துடனே வித்யா சமர்த்துடனே திரவிய சேகரஞ் செய்து தனவந்தனென்று தரணியோர் புகழுந் தன்மையாக பொன் பணி பூஷணாலங்காரத்துடன் வாழ்ந்திருப்பதற்காகும். அவ்வித மில்லாமல் விருச்சிக ராசியில் சனி, ராகு, சூரியனும் சேர்ந்திருந்தால், சத்துருக்களின் கொடுமையால் மனவிசாரத்துடன் திகிலடைந்தவனும் வறுமையால் திகைத்துப் பரிதவிப்பதற்காகும்.

### தனுசுராசியில் சனிபகவான் இருந்த பலன்

தனுசுராசியில்சனிநட் பாயிருக்க
சந்திரனும் புதன்குருவு மிருப்பாராகில்
தனதான்யம்வியாபார விர்த்தியுண்டு
தரணியோர்புகழ்ந்திருக்கும் படியாய்வாழ்வார்
தினகரனும்சனிராகு சுக்ரன்சேர
தீராதகவலையுடன் வறுமைசூழ்ந்து
மனந்திகைத்துகனங்குறைந்து விசனத்தாழ்ந்து
மாநிலத்தோர்டழித்திடவே யலைவர்தானே.

(இ-ள்.) தனுசு ராசியில் சனிபகவான் நட்பாயிருக்கும்போது குருபகவானும் ஆட்சியாயிருந்து அவர்களுடனே சந்திரனும் புதனும் சேர்ந்து நட்பாயிருக்கும்போது பிறந்த ஜாதகர்கள் . தனந்தான்ய சம்பத்துடன் வியாபாரத்தினுல் வெகுபொருள் சேகரித்து உலகத்தோர் புகழுந்தன்மையாக மிகவும் கீர்த்திப் பிரகாசமாய் வாழ்ந்திருப்பார்கள். ஆனுல், தனுசுராசியில் சனியிருக்கும் போது சூரியனும் சனி ராகு சேர்ந்திருந்தால் கலகங்களினுல் பலவித துயரடைந்து வறுமையாளராய்த் திரிந்து கவலையாயிருப்பார்கள்.

## மகரராசியில் சனிபகவான் இருந்த பலன்

மகரத்தில்சனி ஆட்சியா யிருந்தால்
மால்சேய்பொன்ராகுவும் பொருந்திநின்ருல்
மிகமகிழ்வாய்வித்யாபி விர்த்தியாக
மேன்மையுடன்இலக்கண சாஸ்திரங்கள்கற்று
ஜகமீதுவியாபார உத்யோகத்தால்
தனந்தேடிமனைபூமி பெற்றிருப்பான்
சுகமில்லைரவிபகையாய் மகரத்துற்ருல்
சூழ்புவியிலலைச்சலா யிருப்பர்தானே.

(இ-ள்.) மகர ராசியில் சனிபகவான் ஆட்சியாயிருக்கும் போது, அவருடன் புதன், செவ்வாய், குரு, இராகு பகவானும் சேர்ந்திருந்தால், ஜாதகனுக்கு வித்யாபி விர்த்தியாக இலக்கண இலக்கிய சாஸ்திர ஆராய்ச்சியினுல் பிரபல சமர்த்தும் உத்யோக வியாபார விருத்தியும் பெருகி, மனை, பூமி, லாபத்துடன் பிரபலமாய் வாழ்ந்திருப்பதற்காகும். ஆனுல், சனி ராகு மகரத்திலிருக்கும்போது

சூரிய பகவான் பகையாய் அவர்களுடனே சேர்ந்து மக ரத்திலிருந்தால் சதாகாலமும் அனைவர்க்கும் பகையாய் அலைச்சலால் திகைத்து வறுமையாளரா யிருப்பதற் காகும்.

## கும்பராசியில் சனிபகவான் இருந்த பலன்

கும்பத்திற் சனிபகவா னிருக்கும்போது
கூடியேரவிராகு செவ்வாய்நின்றால்
வம்பரால்பலதுயரை யனுபவித்து
வையகத்திலேழைபோல் கலங்கிநிற்பார்
உம்பர்குருமால்சுக்ரன் சனியோடுற்றால்
உயர்வானகீர்த்தியுடன் பொருளைத்தேடி
அம்புவியில்வியாபாரம் உத்யோகஞ்செய்தும்
அகமகிழ்வாய்சுகமாக வாழ்வர்தானே.

(இ-ள்.) கும்பராசியில் சனிபகவானுடனே சூரியன் இராகு செவ்வாயும் சேர்ந்திருந்தால், மனவிசாரத்தினால் பலவிதமான துயரடைந்து வருபவர்களாகித் துஷ்டர்க ளால் துன்பமடைந்து வறுமையாளரா யிருப்பார்கள். ஆனால், குரு புதனும் சனி பகவானுடனே கும்பராசியி லிருந்தால் சகலருக்கும் நல்லவனாகி உலகத்தோர் தனக்கு உதவியா யிருந்து பல நன்மை செய்யும்படியான கீர்த்தி பெற்று வியாபாரத்தினாலும் உத்தியோகத்தினாலும் திர விய சேகரஞ் செய்து பெருமையாய் வாழ்ந்திருப்பதற் காகும்.

## மீனராசியில் சனிபகவான் இருந்த பலன்

மீனராசியில்சனியும் குருவும்சேர்ந்து
மேன்மையுடனேயிருக்க புகர்மால்சேயும்
தானமர்ந்தால்யோகவா னுயிருந்து -
தனதான்யசம்பத்தோ டன்பாய்வாழ்வான்

ஊனமாய்ரவிராகு சனியோடுற்றால்
உலகத்தில்பலதுன்ப மனுபவித்து
கானகத்திலலைபவர்போல் பகைவராலே
கஷ்டநஷ்டமனுபவித்துக் கலங்குவாரே.

(இ-ள்) மீனராசியில் சனிபகவானும், சுக்ரனும், செவ்வாயும் சேர்ந்திருந்தால் அந்த ஜாதகன் வித்யாபிவிர்த்தியும் வியாபார லாபமும் பெற்று வெகு பொருள் சேகரித்து யோகவானு யிருப்பதற்காகும். ஆனால், மீனராசியிலிருக்கும் சனிபகவானுடனே சூரியனும் இராகுவும் சேர்ந்திருந்தால் பலவித துன்பமும் துயரமு மனுபவித்து, சத்துருக்களால் கஷ்ட நஷ்டமடைந்து வனவாசியா யலைபவர்கள் போல் எந்த இடத்திலும் சிந்தை மெலிந்து தீராக் கவலையுட னிருப்பார்கள்.

## சீஷன் சொல்வது

எண்சீரடி விருத்தம்

அன்பானகுருநாதா அடியேனுக்கு
ஆதாரமாகவே ஜோதிடத்தை
இன்பமாக உபதேசித்தாற் போலந்த
இராகுபகவான்ராசிகளி லிருந்தால்
என்னென்னபலன்தருவா ரெந்தனுக்கு
எழிலுடனேசொல்வீரென் றுமதுபாதம்
நன்மையாய்நமஸ்கரித்தேன் விபரமாக
நலமுடனேயெந்தனுக்குப் புகலுவீரே.

(இ-ள்.) குருநாதா! தாங்கள் சப்த கிரகங்களும் பனிரெண்டு ராசியில் ஒருவர்க்கொருவர் சேர்க்கையி லிருக்கும் பலாபலனெல்லாம் விபரமாய்ச் சொல்லிக்கொண்டுவந்தீர். ஆனால் இராகு கேதுவென்னும் சாயா கிரகங்களும் தவ

வொரு ராசியில் முறைப்படியே வரும்போது அவர்களுடன் சேர்க்கையா யிருக்கும் கிரகங்களும் என்னென்ன பலன் கொடுப்பார்களோ அதன் விபரத்தை அடியேனுக்கு விபரமாய்ப் புகல்வீர் சுவாமி.

## குரு சொல்வது

எண்சீரடி விருத்தம்.

புகலுவேனென்சிஷ்யா இராகுகேதுவும்
பொருந்திடுதற்குச் சொந்தராசியில்லை
சுகமுடனேபனிரெண்டு ராசிதன்னில்
சுற்றிவருவாரொன்னரை வருஷகாலம்
ஜகமதில்ஜனித்திடுவோர் ஜாதகத்தைச்
சார்ந்திருக்கும்பனிரெண்டு ராசிவீட்டில்
மகிழுடனேவிளங்கிநிற்கும் பலனைச்சொல்வேன்
மதிமிகுந்தஎன்சிஷ்யா கவனிப்பாயே.

(இ-ள்.) எனதன்பிற்கினிய சிஷ்யா! உனது மனதிற் பொருந்தும்படியாகச் சொல்லுகின்றேன் கவனிப்பாய், மேஷம், ரிஷபம், மிதுனம், கடகம், சிம்மம், கன்னி, துலாம், விருச்சிகம், தனுசு, மகரம், கும்பம், மீனமென்னும் பனிரெண்டு ராசிகளிலும் ஒன்னரை வருஷகாலம் வரையிலும் இராகு கேதுக்களிருந்து ஜாதகர்க்கு பலன் கொடுப்பது வழக்கம். ஆனால், அவர்களுடனே மற்ற சப்த கிரகங்கள் சேர்ந்து எந்தெந்த சமயத்தில் எவ்வெவ்விதமான பலன் கொடுப்பார்களோ அந்த விவரத்தையும் சொல்லிக்கொண்டு வருகிறேன் கவனிப்பாய்.

## மேஷராசியில் இராகுபகவான் இருந்த பலன்

எண்சீரடி விருத்தம்

ஜாதகத்தோர்க்கினிதுடனே மேஷராகும்
சசிபுதனுஞ் சுக்கிரனும் பொருந்தி நின்றல்
பூதலத்தில்வெகுகீர்த்தி யாகவாழ்ந்து
புகழுடனே தனவந்தராயிருப்பார்
காதலுடன்மனைவிமைந்தர் சுற்றத்தாரும்
கௌரவமாய்மதிப்பார்கள் அவ்வாறின்றி
வேதனையாய்ச்சனிராகும் பொருந்திநின்றல்
வெகுதுயரால்மனக்கவலை யடைகுவாரே.

(இ-ள்.) மேஷராசியி லிருக்கும் இராகு பகவானுடனே சந்திரனும் புதனும் சுக்கிரனும் சேர்ந்திருந்தால் வித்தியாபி விர்த்தியும் உத்தியோக லாபமும் வியாபார விர்த்தியும் பொருந்தியவராய் சகலரும் புகழும்படியான கீர்த்தி வகித்து மனைவி மைந்தர்கள் சுற்றத்தார்களும் ஆசாபாச நேசவிஸ்வாசத்துடன் இருக்கும்படியான மதிப்புடையவர்களா யிருப்பதற்காகும். ஆனல், மேஷராசியிலிருக்கும் ராகுபகவானுடனே சனிபகவான் சேர்ந்திருந்தால் பல விதமான கஷ்ட நஷ்டத்தை அனுபவிப்பதுடன் சகலரும் பகைபா யிருப்பார்கள்.

## ரிஷபராசியில் இராகுபகவான் இருந்த பலன்

சுக்கிரனும்மால்சசியும் ராகுஞ்சேர்ந்து
சுகமாகரிஷபத்தி லிருப்பாராகில்
மிக்கவேதனந்தேடி புவியில்வாழ்ந்து
மேன்மையுடனேயிருப்பா ரவ்வாறின்றி

சிக்குடனேசேய்ராகும் பருதிசேர்ந்தால்
சிந்தைமெலிந்தேவறுமை யாளராகி
துக்கமுடன்பலபேர்க்கும் பகைவராகி
துன்பத்தையனுபவிப்பார் கவனிப்பாயே.

(இ-ள்.) ரிஷபராசியி லிருக்கும் ராகுபகவானுடனே புதனும் சந்திரனும் சேர்ந்திருந்தால் தனவந்தர்களாய் இராஜயோகத்தை யனுபவிக்கும்படியான கீர்த்திவந்தர் களா யிருப்பார்கள். ஆனல், இராகுபகவானுடனே அங்காரகனும் சூரியனும் சேர்ந்திருந்தால் வறுமையாளரா யிருப்பதுடன் சிற்சில சமயத்தில் மனவியாதியும் சரீர வியாதியும் பொருந்தியவர்களா யிருப்பார்கள். சில சமயம் துஷ்டர்களாலும் டம்பர்களாலும் துக்கமும் துயரமும் அனுபவித்து விரோதிகளால் துயருற்றுப் பல பேர்க்கும் பகையா யிருப்பார்கள்.

## மிதுனராசியில் இராகுபகவான் இருந்த பலன்

மிதுனத்திலுற்ற ராகுபகவானேடு
மால்மதியுமிருந்தாலே வித்யாலாபம்
சுதன் பெண்டீர்பந்து மித்திரர்களோடு
சுகமாகவாழ்ந்து தனவந்தராவார்
அதிகசம்பத்தா யிருப்பர ரவனிமீது
ஆதித்தன்சனிராகும் மிதுனத்துற்ருல்
நிதியிழந்துபதிவிட்டு பகைவராலே
நீணிலத்திலலேவார்கள் கவனிப்பாயே.

(இ-ள்.) மிதுனராசியி லிருக்கும் ராகு பகவானுடனே புதனும் சந்திரனும் சேர்ந்திருந்தால் வித்யாலாபமும் உத்தியோக விர்த்தியும் பெற்று உத்தம மனையாளுடன் சற்புத்திர பாக்கியம் பெற்று தனவந்த

ராய் சுகஜீவியாய் வாழ்ந்திருப்பார்கள். ஆனால், இராகு, சனி, சூரியனுகிய மூவரும் சேர்ந்து மிதுனராசியி லிருந்தால் குரூரகுணமமைந்த பகைவர்களால் துன்ப மனுபவித்து வறுமையாளராய், மனமெலிந்து சுயதேசத்திலும் நிலைக்க விடாமல் பரதேசவாசியா யலையச் செய்யும்.

## கடகராசியில் இராகுபகவான் இருந்த பலன்

கடகராசியில்ராகு குருவும்சந்த்ரன்
கலந்திருந்தால்பிரபுவென் றெவருமெச்ச
திடமுடனே பொருள்சேர்த்து மனைவிமைந்தர்
தீர்க்கமுடன்பெருகியே சுகமாய்வாழ்வார்
விடநாகனுன ராகுடனேசூரியன்
மேவியேசனிசெவ்வாய் புகரும்சேர்ந்தால்
கடன்பட்டும்பட்டினியென் றுரைப்பார்போல
கவலையினுல்மிகமெலிந்து துடிப்பர்தானே.

(இ-ள்.) கடகராசியிலிருக்கும் ராகுபகவானுடனே குரு உச்சமாகவும் சந்திரன் ஆட்சியாகவும் பொருந்தியிருந்தால் சிறுவயதிலிருந்தே பிரபுத் தன்மையாய் வாழ்ந்து தனது வாலிப காலத்தில் பலவிதமாய்ப் பொருள் சேகரித்து மனைவிமைந்தர் சுற்றத்தாருடனே சுகஜீவியாக வாழ்ந்திருப்பார்கள். ஆனால், சனி, ராகு, சூரியன், செவ்வாய், சுக்ரனும் சேர்ந்து கடகராசியிலிருந்தால், எவ்வெவ்விதமாய்க் கஷ்டப்பட்டு பணம் சேகரித்தாலும் பகைவர்களுடைய துன்பத்தால் கைப்பொருள் சேதமாகி கடன் பட்டும் பட்டினி யென்பதுபோல அலைச்சல்பட்டு துன்பத்தால் மதிமயங்கி யிருப்பார்கள்.

## சிம்மராசியில் இராகுபகவான் இருந்த பலன்

சிம்மராசியில்ராகும் சனியும்சுக்ரன்
சூரியனுமிருந்தாலே ஜாதகர்க்கு
மங்காததுயர்மிகுந்து பகைவராலே
மனத்துயரமதிகமாய்ப் பரதவிப்பார்
இங்கிதமாய்இராகுசனி சுக்ரன்மாலும்
இனிதுடனேசேர்ந்திருந்தால் யோகமாகும்
எங்கிலுமேபுகழ்ந்தேற்றக் கீர்த்தியோடு
எந்நாளும்சுகமாக வாழ்வர்தானே.

(இ-ள்.) சிம்மராசியிலிருக்கும் இராகு பகவானுடனே சனி, சுக்ரன், சூரியனும் சேர்ந்திருந்தால் சதா காலமும் துன்பமும் துயரமும் மிதிகரித்து பகைவர்களாலே மனச் சஞ்சலமும் திகிலுமதிகரித்து பரதவித்துக் கொண்டிருப் பார்கள். ஆனால் இராகு, சனி, சுக்கிரன், புதனுஞ்சேர்ந்து சிம்மராசியிலிருந்தால் மனதைரியத்துடனே திரவிய சேகரஞ் செய்து கீர்த்திவந்தராய் சதாகாலமும் சுகஜீவியாய் வாழ்ந்திருப்பார்கள்.

## கன்னியாராசியில் இராகுபகவான் இருந்த பலன்

கன்னியிலேராகுபுதன் சுக்ரன்சேர்ந்தால்
கல்வியுடன்வியாபார லாபங்காணும்
நன்னயமாய்பொருள்சேர்த்து சகலருக்கும்
நன்மைசெய்துகீர்த்தியுடன் ஜீவிப்பார்கள்
தன்மையாய்ராகுரவிசுக்ரன் சனியும்சேர்ந்தால்
தரித்திரயோகங்காணும் எந்நாளும்
துன்பமுற்றுத்திகிலடைந்து வறுமையாலே
துயரடைவரெந்நாளும் கவனிப்பீரே.

(இ-ள்.) கன்னியாராசியிலே இராகு, புதன். சந்திரனும் சேர்ந்திருந்தால் வித்யாலாபமும் வியாபார விர்த்தியும் பெற்று வெகுபொருள் தேடி சுகஜீவியாய் வாழ்ந்திருப்பதற்காகும். ஆனால், இராகு, சுக்கிரன், சனி சூரியனும் கன்னியா ராசியிலிருந்தால் பலவிதமான கஷ்ட நஷ்டங்களுடன் தரித்திர யோகத்தை யனுபவித்து வறுமையாளரா யிருப்பார்கள்.

## துலா ராசியில் இராகுபகவான் இருந்த பலன்

துலாராசிதனில்ராகு ரவிமால்சந்த்ரன்
சேர்ந்திருந்தால் ஜாதகர்க்கு கவலையாலே
அலைச்சலுற்றுவறுமையினுல் மனங்கலங்கி
அனுதினமும்துயருற்றுத் தத்தளிப்பார்
நலமுடனேராகுசனி புதனும்செவ்வாய்
நாடியேசேர்ந்திருந்தால் சுகமாய்நாளும்
பலவிதமாய்ப்பொருள்தேடி சகலருக்கும்
பக்ஷமுடனேயிருப்பார் கவனிப்பீரே.

(இ-ள்.) துலாராசியிலிருக்கும் ராகுபகவானுடனே சூரியனும், சந்திரனும், புதனும், சேர்ந்திருந்தால் சதா காலமும் அலைச்சலுற்றவராய் வறுமையினுல் திகைத்து மனவிசாரமாய் துயரால் திகைத்துத் தத்தளிப்பார்கள். ஆனுல், துலாராசியில் சனி, ராகு, புதனும், சேர்ந்திருந்தால் மகா சமர்த்துடன் திரவிய சேகரஞ் செய்து சகலருக்கும் நல்லவர்களாயிருந்து நற்குணம் பொருந்திய பலபேர் மீதும் பக்ஷமா யிருப்பார்கள்.

## விருச்சிக ராசியில் இராகுபகவான் இருந்த பலன்

விருச்சிகராசியில்ராகு உச்சமாகி
விளங்கிநிற்கசெவ் வாயும் ஆக்ஷியாக
குருபகவா னவருடனே சேர்ந்திருக்க
கூர்மையுள்ளபுத்தி மானுயிருந்து
பெருமையுடன்கீர்த்தியாய்க் கல்விஞானம்
பெருகியேதனவந்த ராயிருப்பார்
பருதிமதிசனிபுதனு மவரோடுற்றல்
பலதுன்ப மனுபவிப்பார் கவனிப்பீரே.

(இ-ள்.) விருச்சிகராசியில் ராகு உச்சமாகி யிருக்கவும் செவ்வாய் ஆட்சியாயிருக்க, அவர்களுடனே குருபகவானும் சேர்ந்திருந்தால் புத்திசாதுர்யமாய் பல வித்தை கற்றும் விவேகசாலியாய் வியாபாரஞ் செய்தும் உத்தியோகம் புரிந்தும் பொருள் சேகரஞ் செய்து வெகு மேன்மையுடன் கீர்த்திவானுய் கல்வி ஞானத்திற் சிறந்த தனவந்தரா யிருப்பார்கள். ஆனுல், விருச்சிகராசியி லிருக்கும் இராகு பகவானுடனே சனி, சூரியன், சந்திரன், புதனும் சேர்ந்திருந்தால் மதிமயங்கி சத்துருக்களால் பலவித கஷ்ட நிஷ்டூர மடைந்தவர்களாய் பலவித துன்ப மநுபவித்துக் கவலையினுல் வறுமையாளரா யிருப்பார்கள்.

## தனுசுராசியில் இராகுபகவான் இருந்த பலன்

தனுசுதனில்ரவிராகு சனியும்சுக்ரன்
தானிருந்தால்ஜாதகர்க்கு துயரத்தாலே
மனவிசாரத்துடனே துன்பமெல்லாம்
மாருதகவலையினு லதிகரித்து

அனுதினமும்வறுமையினு லலேவாரப்பா
அமரர் குருபுதன்ராகும் தனுசிலுற்றால்
தனந்தேடிவிவேகமுடன் கல்விஞானம்
தானடைந்துகீர்த்தியாக வாழ்குவாரே.

(இ-ள்) தனுசுராசியிலிருக்கும் இராகுபகவானுடனே சூரியனும், சனி, சுக்கிரனுமிருந்தால் ஜாதகனுக்கு மனவிசாரமும், துன்பமும், துயரமும், தீராக கவலேயும் அதிகரித்து தினந்தோறும் வறுமையினல் அலேவார்கள். ஆனல், தனுசுலிருக்கும் இராகுபகவானுடனே குரு பகவானும் புதனும் சேர்ந்திருந்தால் வித்தியாலாபத்துடன் கல்வியிற் சிறந்த ஞானவானுய் தனதான்ய சம்பத்துடன் கீர்த்திடாய் வாழ்ந்திருப்பதற்காகும்.

## மகரராசியில் இர்குபகவான் இருந்த பலன்

மகரத்தில்சனி ஆட்சிசெய் உச்சமாகி
மாட்சிமையாயிருக்க ராகும்சேர்ந்தால்
சுகவாழ்வாய்ஜாதகரும் புவியில்வாழ்ந்து
சுறுசுறுப்பாய்கல்விகற்று உத்யோகஞ்செய்து
ஜகத்தோரெல்லாம்புகழ கீர்த்திவானுய்
தனந்தேடிபிரபுவாய் வாழ்வாரப்பா
வெகுதுயரம்இராகு சுக்ரன்சேர்ந்தால்
மேதினியில்துயருற்று கலங்குவாரே.

(இ-ள்) மகரராசியில் சனி ஆட்சியாகவும், செவ்வாய் உச்சமாகவு மிருக்கும்போது ராகுபகவானும் பொருந்தியிருந்தால் ஜாதகன் சுக வாழ்வினனுய் சுறுசுறுப்பாக

மனதைரியமும் ஞாபகசக்தியும் பொருந்தியவனுய் கல்வி ஞானத்திற் சிறந்து உத்யோகஞ் செய்து கீர்த்திப் பிரகாசமாய் திரவியந் தேடி தனவந்தராய் வாழ்ந்திருப்பதற்காகும். ஆனுல், மகரத்திலிருக்கும் இராகுபகவானுடனே சூரியனும் சுக்கிரனும் சேர்ந்திருந்தால் பலவிதமான மனவிசாரத்துடனே சத்துருக்களால் துன்பமடைந்து வறுமையாளராய் கலங்கி துயரப்பட்டலேவார்கள்.

## கும்பராசியில் இராகுபகவான் இருந்த பலன்

கும்பராசியில்ராகு சனியோடுற்று
குருபுதனுமிருந்தாலே ஜாதகர்க்கு
அம்புவியில்கீர்த்தியுண்டு கல்வியுண்டு
ஐஸ்வரியத்துடனே வாழ்வாரப்பா
அம்புலியும்ராகுபுகர் செவ்வாயோடு
ஆதித்தனும்சேர்ந்து கும்பத்துற்ருல்
செம்பொன்னுமில்லாமல் தனமில்லாமல்
ஜெகமீதுவறுமையினு லலேகுவாரே.

(இ-ள்.) கும்பராசியி லிருக்கும் இராகுபகவானுடனே சனி, குரு, புதன் சேர்ந்திருந்தால் ஜாதகர்க்கு நல்ல கீர்த்தியும் ஞாபக சக்தியும் கல்வியும் பெருகி தனந்தான்ய சம்பத்துடனே வாழ்ந்திருப்பதற்காகும். ஆனுல், கும்பராசியிலிருக்கும் ராகுபகவானுடனே செவ்வாய், சூரியன், சுக்கிரன் சேர்ந்திருந்தால் சதாகாலமும் மன சஞ்சலமுடைய வறுமையாளராய் கைப்பொருளில்லாமல் கவலேயாய்த் திரிந்தலேவார்கள்.

## மீனராசியிலிருந்த இராகுபகவான் பலன்

மீனராசியில் குருவும் ஆட்சியாக
மேன்மையுடனேயிருக்க ராகுசுக்ரன்
ஆனசெவ்வாய் நால்வருமாய் அமர்ந்திருந்தால்
அம்புவியில்சமர்த்தனென்ற கீர்த்திவாய்ந்து
ஞானமுடன்கல்வியுண்டு பொருளுஞ்சேரும்
ஞாயிறுடன்மதிசேய்சனியும் ராகோடுற்ருல்
ஊனமாம்வறுமையினுல் மனந்திகைத்து
உலகினர்க்குப்பகையாகிக் கலங்குவாரே.

(இ-ள்.) மீனராசியில் குருபகவான் ஆட்சியா யிருக்கும்போது சுக்கிரனும் உச்சமாயிருக்க செவ்வாய் நட்பாகவும், ராகுபகவானுடனே சேர்ந்து இந்நால்வரும் மீனராசியிலே பொருந்தி யிருந்தால் வித்யாலாபமும், ஞானமும் பொருந்தி, திரவியசேகரஞ்செய்யும் நன்முயற்சியும், திரவிய லாபமும் பெற்று, தனவந்தரா யிருப்பார்கள். ஆனுல், மீனராசியிலிருக்கும் சனிபகவானுடனே சூரியன், சந்திரன், ராகுபகவானும், சேர்ந்திருந்தால், சத்துருக்களின் கொடுமையினுல் மனந் திகைத்து வறுமையாளராக அலைவார்கள்.

## சிஷ்யன் சொல்வது

அன்பானகுருநாதா ஜோதிஷத்தின்
ஆதாரமானவழி யெந்தனுக்கு
நன்மையாயுபதேசஞ் செய்தீர்யானும்
நலமாகக்கவனித்தேன் ஜாதகர்க்கு
இன்பமாய்க்கேதுபகவான்கொடுக்கும்
இன்பதுன்பபலனெல்லாம் விபரமாகப்
பன்னுவீர்உமதுதிவ்ய பாதந்தன்னை
பக்ஷமாய்யான்வணங்கி துதிக்கின்றேனே.

(இ-ள்.) சுவாமி! அடியேனுக்கு ஜோதிஷ சாஸ்திரத்தின் ஆதார மார்க்கமனைத்தும் உபதேசித்தீர்; யான் பன்னிரெண்டு ராசியிலிருக்கும் கிரகங்களின் பலாபலனையெல்லாம் கவனித்தேன். ஆனால், ஒவ்வொரு ராசியிலும் கேதுபகவானிருந்தால் எவ்வெவ்விதமான பலன் கிடைக்கும்படியாய்ச் செய்வாரோ அதனை அடியேனுக்கு விபரமாய்ச் சொல்வீர் குருநாதா!

## குரு சொல்வது

கல்வியின்மேல்விருப்பமுற்று ஜோதிடத்தைக்
கவனமாய்க்கற்றுணர்ந்து தேர்ச்சியுற்று
நல்விவேகத்துடனே விளங்கியிந்த
ஞாலமதிலுள்ளோர்க்கு பலனைச்சொன்னால்
தொல்லுலகிலேபிறந்த ஜாதகர்க்கு
தோன்றுமீராறு ராசிதனில்கேது
வல்லமையாயிருந்த பலனைச்சொல்வேன்
வகையுடனேவிபரமாய்க் கவனிப்பாயே.

(இ-ள்.) வித்யா விருப்பத்துடன் ஜோதிஷ சாஸ்திரத்தைக் கவனமாய்க் கற்றுணர்ந்து உலகிலுள்ள ஜாதகர்க்குப் பலனைச் சொல்லும் வல்லமையுடைய எனது அருமையான சிஷ்யனே! மேஷம், ரிஷபம், மிதுனம், கடகம், சிம்மம், கன்னி, துலாம், விருச்சிகம், தனுசு, மகரம், கும்பம், மீனம் என்னும் பனிரெண்டு ராசியாகிய ஸ்தானங்களில் எந்தெந்த ராசிகளில் கேதுபகவானிருக்கின்றாரோ அந்தந்த ராசி பலனையும் அந்த கேதுபகவானுடனே எந்தெந்த கிரகங்கள் சேர்ந்திருக்கின்றாரோ அந்தந்த பலன்களையும் விபரமாய்ச்சொல்வேன் கவனிப்பாய்.

## மேஷராசியில் கேதுபகவான் இருந்த பலன்

தன்மையுடனேகேது மேஷத்துற்றால்
சனிரவியும்மால்மதியும் புகழும்சேர்ந்தால்
துன்பத்தினுற்றிகைத்து கலகத்தாலே
துயரடைவார்வறுமையுற்று மனந்திகைப்பார்
அன்புடனேசேய் ஆட்சி யாயிருக்க
அவருடனேகுருகேதும் சேர்ந்திருந்தால்
நன்மதியாய் ஞானமுண்டு கல்வியுண்டு
ஞாலமதில்பொருள்சேர்த்து ஜீவிப்பாரே.

(இ ள்.) மேஷராசியி லிருக்கும் கேது பகவானுடனே சனி, சூரியன், புதன், சுக்கிரன், சந்திரனும் சேர்ந்திருந்தால் பகைஞரின் குரூர துன்பத்தினால் மனவிசாரமடைந்து வறுமையினால் துயரடைவார்கள். ஆனால் மேஷராசியி லிருக்கும் கேது பகவானுடனே செவ்வாய் பகவானும் குரு பகவானும் சேர்ந்திருந்தால் வித்யாபி விர்த்தியும், கல்வியும், ஞானமும், ஞாபக சக்தியும் பெருகி, உத்தியோகஞ் செய்தும் வியாபாரஞ் செய்தும், பொருள் சேகரஞ் செய்து தனவந்தராய் ஜீவித்திருப்பார்கள்.

## ரிஷபராசியில் கேதுபகவான் இருந்த பலன்

கேதுபகவான் ரிஷப ராசிதன்னில்
கெம்பீரமாயிருக்க புகரும்மைந்தன்
ஆதரவாயிருக்க புதனுஞ்சேர்ந்து
அமர்ந்திருந்தால் ஜாதகர்க்கு கீர்த்தியுண்டு
தீதிலா கல்வியுடன் ஞானமுண்டு
திரவியசேகரஞ்செய்து வாழ்ந்திருப்பார்
ஆதித்தன்குருமதியும் கேதோடுற்றால்
அவனியிலே வறுமையினால் கலங்குவாரே.

(இ-ள்.) ரிஷப ராசியிலிருக்கும் கேது பகவானுடனே சுக்கிரன்-சனி-புதனும் சேர்ந்தால், வித்யா லாபமும், ஞாபக சக்தியும், உத்தமர் நேசமும் பெற்று உத்தியோக விர்த்தியும் வியாபார லாபமும் பெற்று, கீர்த்திப் பிரகாச மாய் வாழ்ந்திருப்பதற்காகும். ஆனால், ரிஷப ராசியிலிருக் கும் கேது பகவானுடனே சூரியனும், சந்திரனும், குருவும் சேர்ந்திருந்தால் சத்துருக்களினால் சச்சரவும் கலகமும் நேர்ந்து வறுமையினால் துயரமடைந்து கலங்குவார்கள்.

## மிதுனராசியில் கேதுபகவான் இருந்த பலன்

மிதுனத்தில்கேதுபுதன் குருவும்சேர்ந்தால்
மிகவுமேநல்லபலன் கிடைக்கும்கல்வி
அதிகமாய்க்கற்றுணர்ந்து யோகஞ்செய்வார்
அன்பாய்வர்த்தகஞ்செய்து பொருளைச்சேர்ப்பார்
மதிரவியும்புகர்சேதும் மிதுனத்துற்றால்
மனக்கவலையடைவார்கள் பகைவராலே
திதிதுறந்துதுயரடைந்து வறுமையுற்று
நீணிலத்திலேதிகைத்துக் கலங்குவாரே.

(இ-ள்.) மிதுனராசியிலிருக்கும் கேது பகவானுடனே புதனும் குருவும் சேர்ந்திருந்தால் ஜாதகற்கு நல்ல பலனைக் கொடுத்து, கல்வியும், ஞானமும் கீர்த்தியும் பெருகி, சகலருக்கும் நல்லவரென்பதாய் உத்தம குண மமைந்து உத்தியோக லாபமும் பெற்று திரவியஞ் சேக ரஞ் செய்து பெருமையாய் வாழ்வார்கள். ஆனால், மிதுன ராசியிலிருக்கும் கேது பகவானுடனே, சூரியனும், சந்திர னும், சுக்கிரனும் சேர்ந்திருந்தால், சத்துருக்களால் மனக் கவலை யடைத்து கைப்பொருளிழந்து, வறுமை நோயி னாலே மானிலத்தோர் முன் மதிமயங்கி கலங்குவார்கள்.

## கடகராசியில் கேதுபகவான் இருந்த பலன்

கடகத்திலிருக்கும் கேதுடனேசந்திரன்
கதிரவனும்புகர்சனியு மிருந்திட்டாலே
விடநாகம்போற்பகைவர் கலகத்தாலே
வறுமையுடன்மனக்கவலை யடைவாரப்பா
திடமுடனேகேதுகுரு சேர்ந்திருந்தால்
திரவியஞ்சேகரித்துலகில் வாழ்ந்திருப்பார்
கடவுள்மீதினில் பக்தியாயிருந்து
காசினியிலேவிரத மனுஷ்டிப்பாரே.

(இ-ள்.) கடகராசியி லிருக்கும் கேது பகவானுடனே சூரியனும், சந்திரனும், சனியும், சுக்கிரனும் சேர்ந்திருந்தால் துர்க்குண மமைந்த பகைவர்கள் பாம்புபோற் சீறி, துன்பப்படுவதுடன் தீராக் கவலையும் வறுமையும் மிகுந்து கஷ்ட நஷ்டத்தினால் கலங்கித் துடிப்பார்கள். ஆனால், கேதுபகவானும் குருவும் கடகராசியி லிருந்தால், பகவத் பக்தி யானந்தமாய் விரதானுஷ்டானம் புரிந்து சகலருக்கும் நல்லவர்களா யிருந்து திரவிய சேகரஞ் செய்து ஜீவித்திருப்பார்கள்.

## சிம்மராசியில் கேதுபகவான் இருந்த பலன்

சிம்மத்தில்கேதுரவி மதியுஞ்சேர்ந்து
சுக்கிரனும்சனிபகவா னிருந்திட்டாலே
பங்கமடைவார்சத்ரு விரோதத்தாலே
பலநாளும்வறுமையுடன் கலங்குவார்கள்
மங்களமாய்கேதுபுதன் குஜனும்சேர்ந்தால்
மாக்ஷிமையாய்கல்விகற்று உத்யோகஞ்செய்வார்
சங்கையிலாமாநிலத்தில் பொருளுந்தேடி
சவுக்கியமாய்வாழ்ந்திருப்பார் கவனிப்பாயே.

(இ-ள்.) சிம்மராசியி லிருக்கும் கேது பகவானுடனே சூரியன், சந்திரன், சுக்கிரன், சனியும் சேர்ந்திருந்தால் சத்துருக்களின் குரூரகுணத்தினு லேற்படும் துன்பத்தினுல் மனவிசார மடைந்து சதாகாலமும் வறுமையினுல் திகைத்திருப்பார்கள் ஆனுல், சிம்ம ராசியில் கேது, புதன், செவ்வாயும் சேர்ந்திருந்தால் வித்யாபி விர்த்தியுடன் ஞாபகசக்தி பொருந்தியவராய் உத்தியோக விர்த்தியும், வியாபார லாபமும் பெற்று தனவந்தரா யிருப்பதற்காகும்.

## கன்னியாராசியில் கேதுபகவான் இருந்த பலன்

கன்னியிலேகேதுமதி புகருஞ்சூரியன்
காசினியிலேபிறந்த ஜாதகர்க்கு
வன்மையுடனேயிருந்தால் துயருண்டாகி
வறுமையுடன்சத்துருக்கள் கலகத்தாலே
துன்பமடைவார் ஆனுல் கேது வியாழன்
துலங்கவேசெவ்வாயும் கன்னியிலிருந்தால்
நன்மையுண்டுபொருள்சேர்த்து கல்விஞானம்
நலமுடனேபெருகியே வாழ்வாரப்பா.

(இ-ள்.) கன்னியா ராசியிலே யிருக்கும் கேது பகவானுடனே சந்திரன், சுக்கிரன், சூரியனும் சேர்ந்திருந்தால் அந்த ஜாதகன் பகைவர்களால் துயரடைந்து சதா காலமும் கலக்கமும் கவலையு மடைந்து விசனத்தி லாழ்ந்து வறுமையாளரா யிருப்பதற்காகும். ஆனுல், கன்னியா ராசியிலே யிருக்கும் கேது பகவானுடனே வியாழ பகவானும், செவ்வாய் பகவானும் சேர்ந்திருந்தால் பலவிதமான நன்மையுடன் திரவியஞ்சேகரித்துச் சகலருக்கும் அன்பும் பிரியமுமுள்ளவரா யிருப்பதற்காகும்.

## துலாராசியில் கேதுபகவான் இருந்த பலன்

கேதுபகவான்துலா ராசியிலேநிற்க
குஜன்ரவியும்மால்மதியும் சேர்ந்திருந்தால்
தீதுடனேபகைவர்களால் துன்பமுற்று
திகைத்திடுவார் வறுமையினு லென்றுரைப்பாய்
கோதிலாபுகர்ரவியும் சனியோடுற்றல்
கோடமதுஜா தகர்க்கு மிகவுண்டாகும்
பூதலத்தில்தனந் தேடி வாழ்ந்திட்டாலும்
பொல்லாதோனென்றுலகோ ரேசுவாரே.

(இ-ள்.) துலா ராசியிலிருக்கும் கேது பகவானுடனே அங்காரகன், சூரியன், சந்திரனும் சேர்ந்திருந்தால் பகைவர்களின் கொடுமையினுல் மனந்திகைத்து வறுமையால் கலங்குவார்கள். ஆனுல், சுக்கிரனும், சூரியனும், சனியும் சேர்ந்து துலாராசியிலிருக்கும் கேதுபகவானுடனே சேர்ந்திருந்தால் வித்தையும் புத்தியும் பெருகி திரவியம் சேகரித்துப் பெருமையாய் வாழ்ந்தாலும் கோபமும் குரோதமுமுடையவர்களாய்ச் சகலரையும் அலட்சியஞ் செய்து மதியாமல் பேசி பகையாகி பொல்லாதவரென்று நிந்தனையடைவார்கள்.

## விருச்சிகராசியில் கேதுபகவான் இருந்த பலன்

விருச்சிகராசியில்கேதுடன் சனியுஞ்சூரியன்
விளங்கிடவும்மதிகுஜனு மவரோடுற்றல்
பொருளில்லாவறுமையா யிருந்திட்டாலும்
பொல்லாததுஷ்டனென்றே உலகோரேச
கருவத்தால்பகையாகி வறுமையுற்று
கலங்குவார்கேதுகுரு விருச்சிகத்தில்
பொருந்தினுல்கல்வி ஞானத்தில்தேர்ந்து
பூலோகத்தோர்புகழ ஜீவிப்பாரே.

(இ-ள்.) விருச்சிக ராசியிலிருக்கும் கேது பகவானுடனே சனி-சூரியன்-சந்திரன்-அங்காரகனும் சேர்ந்திருந்தால், மோசு தந்திர அடாவடித்தனமாய் திரவியஞ் சேகரித்து வீண் செலவு செய்துவிட்டுக் கையில் காசில்லாத ஏழையா யிருந்தாலும் மனோகர்வத்தினால் எவர்களையும் மதியாமலிகழ்ந்து அவட்சியமாய் பேசி சகலரும் நிந்திக்கும்படியாய்ப் பொல்லாதவனென்றும் வறுமையாளராய்க் கலங்கித் திகைத்திருப்பார்கள். ஆனால், விருச்சிகத்திலிருக்கும் கேது பகவானுடனே குருபகவானும் சேர்ந்திருந்தால் கல்வியும் தேர்ச்சியடைந்து ஞானவானாய் சகலரும் புகழ்ந்துரைக்குந் தன்மையாய் திரவிய சேகரஞ் செய்து வாழ்ந்திருப்பார்கள்.

### தனுசுராசியில் கேதுபகவான் இருந்த பலன்

தனுசிலேகேதுபக வானிருக்க
சனிசூரியன்சந்திரனும் சேர்ந்திருந்தால்
மனவிசாரத்துடனே கவலையுற்று
மாற்றாரால்துயரடைந்து வறுமையாலே
தனமிழந்துசுகங்குறைந்து கஷ்டமாகும்
தனுசில்குருஆட்சிபெற்று சேய்சேர்ந்துற்றால்
கனமுடனேகல்வியுடன் ஞானம்பெற்று
காசினியில்கீர்த்தியுடன் ஜீவிப்பாரே.

(இ-ள்.) தனுசுராசியிலிருக்கும் கேது பகவானுடனே சனி-சூரியன்-சந்திரனும் சேர்ந்திருந்தால் பகைவர்களின் குரூரத்தினால் மனவிசாரமும், கவலையும் நேரிட்டு வறுமையும், துன்பமும், துயரமும் உண்டாகும். ஆனால், கேது

பகவானுடனே குருபகவானும், செவ்வாய் பகவானும் தனுசுராசியில் சேர்ந்திருந்தால் கல்வியுடன் ஞானமும் அதிகரித்துக் கீர்த்திப்பிரகாசமா யிருப்பதுடன் வியாபார விர்த்தியிலும் உத்தியோக விர்த்தியிலும் சிறந்தவர்களாய் திரவிய சேகரம் செய்து பெருமையுடன் வாழ்ந்திருப் பார்கள்.

## மகர ராசியில் கேதுபகவான் இருந்த பலன்

மகரத்தில்கேதுபகவா னிருக்க
 மதிரவியும்செவ்வாயும் சேர்ந்திருந்தால்
சுகமில்லாதலைகுவா ரெந்தநாளும்
 சூழ்ந்தபந்துகூட்டமெல்லாம் பகையாவார்கள்
மகரத்தில்சனி ஆக்ஷியாயிருக்க
 பாக்ஷிமையாய்கேதுகுரு சேர்ந்திருந்தால்
ஜெகமீதில் தனவந்தராயிருந்து
 க்ஷேமமுடன்வாழ்ந்திருப்பா ரறிகுவீரே.

(இ-ள்.) மகராசியில் கேதுபகவா னிருக்கும்போது சூரியனும் சந்திரனும் செவ்வாயும் சேர்ந்திருந்தால் மன விசாரமடைந்தவர்களாய் பந்துமித்திரர்களின் பகையி னால் பலவித கஷ்ட நஷ்டமடைந்து கவலையடைந்து சுக மில்லாமல் துன்பத்திலாழ்ந்தவர்களாய் கலங்குவார்கள். ஆனால் மகரத்தில் சனி ஆட்சியாயிருக்க குருபகவானும் அந்த ஸ்தானத்தில் நட்பாயிருக்க அவர்களுடனே கேது பகவான் சேர்ந்திருந்தால் உலகில் புலபேருக்கும் நல்லவ னென்றே கல்வியிலும், ஞானத்திலும் சிறந்தவனாய் வியா பார விஷயத்திலும் உத்தியோக விஷயத்திலும் சிறந்து கீர்த்திப் பிரகாசமாய் பொருள் சேகரஞ் செய்து க்ஷேம லாபத்துடன் வாழ்ந்திருப்பதற்காகும்.

## கும்பராசியில் கேதுபகவான் இருந்த பலன்

கும்பராசியிற்கேது பகவானோடு
குரு சனியும் புதன்சேர்ந்தால் ஜாதகர்க்கு
அம் புவியில் தனந்தான்ய சம்பத்தோடு
அதிகசுகமுண்டாகி வாழ்வாரப்பா
அம்புவியில்ரவிகேதும் கும்பத்துற்றால்
அலைச்சலுற்றுவறுமையினால் கலங்குவார்கள்
வம்பாகஎங்கெங்கும் பகைமேலிட்டு
வையகத்தில்துயருற்றுத் துடிப்பார்தானே.

(இ-ள்.) கும்பராசியிலிருக்கும் கேது பகவானுடனே குரு சனி, புதனிருக்க, கல்வியிலும், தேர்ச்சியடைந்து வியாபார விஷயத்திலும், உத்தியோக விஷயத்திலும் தேர்ச்சி யடைந்து திரவியஞ் சேகரித்துத் தனந்தான்ய சம்பத்துடன் சுகஜீவியாய் வாழ்ந்து க்ஷேமமா யிருப்பார் கள். கேது, சூரியன், சந்திரன் மூவரும் சேர்ந்து கும்ப ராசியிலிருந்தால் துர்க்குண மிகுந்த பகைவர்களின் குரூர மாகிய கலகத்தினால் வறுமையாளராய்க் கலங்குவார்கள்.

## மீனராசியில் கேதுபகவான் இருந்த பலன்

மீனராசியில்கேதுடன் குருவுஞ்சுக்ரன்
மேன்மையுடனேயிருந்தால் வித்தைபுத்தி
ஞானமுடன்விவேகத்தால் சிறந்துவாழ்ந்து
ஞாலத்தில்தனவந்தராயிருப்பார்
வானவர்கள்துணையுண்டு சம்பத்துண்டு
மதிரவியுஞ்சனிகேது மீனத்துற்றால்
ஊனமாய்ப்பகைவர்களின் துன்பத்தாலே
உற்றமனக்கவலையினால் கலங்குவாரே.

(இ-ள்.) மீனராசியில் கேது, குருவும், சுக்கிரனு மிருந் தால் வித்தையும், புத்தியும், ஞானமும், விவேகமும் அதி

கரித்து தனந்தான்ய சம்பத்துடனே வியாபார லாபமும், உத்தியோக லாபமும் பெற்று பகவத்பக்தி யானந்தமாய் சுகஜீவியாக வாழ்ந்திருப்பார்கள். ஆனால், சூரியன் சந்திரனும் சேர்ந்திருந்தால் குரூர குணமமைந்த சத்துருக்களின் கொடுமையினாலுற்ற துன்பத்தாலே நேரிட்ட மனக்கவலையினால் வறுமை நோயால் கலங்கி விசனமா யிருப்பார்கள்.

## சீஷன் சொல்வது

### எண்சீரடி விருத்தம்

நற்புத்திபோதித்து யெந்தனுக்கு
நவக்கிரகமிருந்த ராசிகளுக்கேற்ற
உற்றபலனுக்கீடாய் நன்மைதுன்மை
உடையவராயிருப்பார்க ளென்றுரைத்தீர்
பற்றற்றஞானிகட்கு கிரகவேதை
பலாபலனைகொடுக்காதோ விபரமாக
சற்றெனக்குபோதிப்பீர் குருவேயுன்ருள்
சரணடைந்துவினவினேன் சாற்றுவீரே.

(இ-ள்.) சுவாமி அடியேனுக்கு சதாகாலமும் நற்புத்தி போதித்து, ஜோதிட சாஸ்திரத்தின் விபர மனைத்தும் தெளிவாய்க் கற்பித்த ஞானகுருவே! மனித வகுப்பினர் உலகில் ஜனிக்கும்போது மேஷம், ரிஷபம், மிதுனம், கடகம், சிம்மம், கன்னி, துலாம், விருச்சிகம், தனுசு, மகரம், கும்பம், மீனம் என்னும் பனிரெண்டு ராசியிலும் சூரியன், சந்திரன், செவ்வாய், புதன், குரு, சுக்கிரன், சனி, இராகு, கேது என்னும் நவக்கிரகங்கள் மேற்குறிப்பித்த ராசிகளில் சத்துரு மித்துருக்களாய்ச் சேர்ந்திருந்து ஜாதகர்க்குக் கொடுக்கும் பலாபலனையும் சொன்னீர். ஆனால், இல்லற வாசிகள் மனைவி மைந்தர் பந்துமித்திரர்களுடனிருந்த

கின்றபடியால் கிரகங்களிருக்கும் பலாபலனுக்கேற்ற சுக துக்கத்தை யனுபவிக்கும்படியாய் நேரிடுகிறது. துறவி கட்கு மிப்படியே அமையுமோ? அவ்விதமாய் அவர்களும் அனுபவிப்பதற்காகுமோ? இதன் விபரத்தை அடியே னுக்கு விபரமாய் புகலுவீர் சுவாமி!

### குரு சொல்வது

புத்தியுள்ளசீஷா நீ பொறுமையாய்க்கேள்
 பூதலத்தில்மானிடராய் பிறந்திட்டாலும்
சத்தியமும்பொறுமையுடன் அடக்கத்தோடு
 சாந்தம் ஜீவகாருண்யம் தயாளந்தன்னை
எத்ததியும்மனதிருத்தி வாழ்ந்திருந்து
 ஈஸ்வரனைத்தியானித்தால் நவக்கிரகங்கள்
எத்ததியும்கஷ்டமில்லா சுகத்தைத்தந்து
 எப்போதும்காத்திடுவார் கவனிப்பாயே.

(இ-ள்.) எனது வாக்கியத்தை சித்த சுத்தி பக்தி வைராக்கியமாய் மனதிலிருத்தி ஜோதிட சாஸ்திரத்தைக் கற்று வரும் விவேகத்திற் சிறந்த எனது சிஷ்யனே! உனது கருத்திற் கிசைந்தபடியே சொல்லுகின்றேன் சற்று நிதானமாகப் பொறுமையுடன் கவனித்துக் கேட் பாய். உலகில் பிறந்த மனிதர்கள் சத்தியநெறி தவறாத உத்தமரா யிருந்து அடக்கம், பொறுமை, சாந்தம், தயா ளம், ஜீவகாருண்ய மென்னும் நற்குணங்களை மனதில் வகித்திருந்தால் நவக்கிரகங்களாகிய சூரியன், சந்திரன், அங்காரகன், புதன், குரு, சுக்கிரன், சனி, இராகு, கேது முதலானவர்கள் கஷ்டப்படுத்தாமல் காருண்யமாகக் காப்பாற்றுவார்கள். ஆகையால், பகவத்பக்தி யானந்தமா யிருப்பவர்களுக்குச் சதாகாலமும் நன்மையே விளங்கு மென்பதாகக் கவனித்துக் கொள்வாய்.

## சீஷன் சொல்வது

எண்சீரடி விருத்தம்

ஆசிரியா யென்குருவே ஜோதிஷத்தை
 அன்புடனேபோதித்த ஞானமூர்த்தி
மாசிலாபனமுடைய உமதுபாதம்
 மனதிலேயான்துதித்து உலகோர்துன்பம்
பேசுதற்குவிசனமா யிருந்திட்டாலும்
 பெருமையுறும்மனிதர்களைப் பார்க்கும்போது
வீசுபுகழ்சிவன்செயலென் றேமதித்தேன்
 விதித்தவிதியெனக்கு புகலுவீரே.

(இ-ள்.) எனது குருநாதா! அடியேனுக்கு ஜோதிஷ சாராம்ஸமனைத்துங் கற்பித்தீர். அவை யனைத்தும் அடியேன் நன்குணர்ந்தேன். ஆனால், பகவான் செயலால் உலகில் பிறந்த மனிதர்களில் சில பேர் ஏழையாகவும் பல வித கஷ்டநஷ்ட மனுபவிப்பதைப் பார்த்தால் நவக்கிரக வேதை என்று கவனித்து விசனமுற்றேன் என்றாலும், சிலர் சதாகாலமும் திரவிய சம்பன்னராகவே விளங்குகின்றார்களே, இவ்விரு வகுப்பாரின் காரணமென்ன அடியேனுக்கு விபரமாய் புகல்வீர் சுவாமி.

## குரு சொல்வது

எண்சீரடி விருத்தம்

அவரவர்கள்முன்செய்த வினையினாலே
 அயன்விதித்தவிதிப்படியே சுகதுக்கத்தை
தவறாமலனுபவிக்கத் தான்பிறந்து
 தரணியிலேயனுபவிக்க நேரிடுங்கால்
நவக்கிரகமவரவர்கட் கிசைந்தாற்போல
 நற்பலனும்துர்ப்பலமும் கொடுக்கும்போது
பவபந்தபாசவலை தனிற்சிக்குண்டு
 பலாபலனு மனுபவிப்பார் கவனிப்பாயே.

(இ-ள்.) மனித வருப்பினர் முன்ஜென்மத்தில் செய்த பாப புண்ணியத்தினுல் உலகத்தில் பிறந்து சுகதுக்கத்தை யனுபவிப்பதற்கிசைந்தவிதமாய் பாசபந்தமென்னும் மாய வலையிற் சிக்கிக்கொண்டு கஷ்டப்படுவதிலும், சிலர் சதாகாலமும் தனவந்தராய் ஜீவித்து சுகத்தை அனுபவிப்பதுமா யிருக்கின்ருர்கள். இவை யனைத்தும் பிரமதேவன் அவரவர்களுக்கு விதித்தபடியே நவக்கிரகங்கள் அவரவர்களின் பாபத்திற்குத் தகுந்த கஷ்டத்தையும், புண்ணியத்திற்குத் தகுந்த சுகத்தையும் கொடுத்து வருகிருர்கள். இவற்றை யுணராத மனிதர்கள் கஷ்டத்தை யனுபவிக்கும்போது விசனிப்பதும் சுகத்தை யனுபவிக்கும்போது மனோ கர்வமா யிருப்பதும் நன்மை யாகாது. சதாகாலமும் அடக்கமாகவே சாந்த மனதுடையவரா யிருக்க வேண்டும். அவ்விதமா யிருந்தால், அயன் விதித்த வாழ்நாளின்படியே ஆயுள் முடிந்தால் ஆண்டவன் திருவடியை நாடுவதற்காகும்.

## சீஷன் சொல்வது

*எண்சீரடி விருத்தம்*

ஆதியிலேயெந்தனுக்கு வித்யாவிவேகம்
அருள்புரிந்ததயாநிதியே குருவேஞான
ஜோதிமயமாய்விளங்கும் பகவானிந்த
சூழ்புவியின்மானிடர்க்கு நல்விவேகம்
நீதியுடனேயமைத்தால் மனிதரெல்லாம்
நீணிலத்தில்சுகமாக இருப்பாரல்லோ
ஓதுவீரிதனுண்மை ரகசியத்தை
உத்தமநன்மணதமைந்த குருவேபோற்றி.

(இ-ள்.) குருநாதா! அடியேனுக்கு சகல சாஸ்திர புராணமனைத்தும் தெள்ளிதாய்க் கற்பித்தீரே; அதனுல் அடியேன் புனிதனுனேன். ஆனல், என் மனதில் ஓர்

சந்தேக மிருக்கின்றது. அதென்னவென்றால், பகவான் மனிதர்களைச் சிருஷ்டிக்கும்போதே விவேக ஞானத்தை சகலருக்கும் சமமாக அமைத்திருந்தால் சகலரும் சுகமா யிருப்பார்களே அவர் அவ்விதமாய்ச் செய்யாத காரண மென்ன? அடியேனுக்கு இந்த ரகஸியத்தை விபரமாய் சொல்வீர் சுவாமி

## குரு சொல்வது

எண்சீரடி விருத்தம்

அவனியிலேபிறந்தோர்க ளெந்தநாளும்
அடக்கம்பொறுமைசாந்தம் தயாளத்தோடு
கவனமுடன்ஜீவகா ருண்யமாக
காசினியிலேயிருந்தால் மறுஜன்மத்தில்
நவக்கிரகமொன்பதுபே ரெந்தநாளும்
நன்மையாய்சுபபலனை தருவாரப்பா
ஏவர்களையுமிம்சிக்கா திருப்பாரானால்
ஏற்றசுபபலனனைத்தும் கிடைக்தும்பாரே.

(இ-ள்.) மனிதர்கள் பூமியில் பிறந்தால் தனக்கு எவ்வளவு கஷ்டம் வந்தாலும், அல்லது சுகம் வந்தாலும் அடக்கம், பொறுமை, சாந்தம், தயாளம், ஜீவகாருண்ய மென்னும் நற்குணத்துட னிருந்தால், யாதொரு கஷ்ட நஷ்டமு மணுகாமல் சுகஜீவியா யிருப்பதற் கிசைந்த பலனை, நவக்கிரகங்களாகிய சூரியன், சந்திரன், செவ்வாய் புதன், குரு, சுக்கிரன், சனி, ராகு, கேது என்னும் நவக்கிரகங்கள் நல்ல பலனைத் தருவார்கள்.

கோபம்குரோதம்லோபம் வஞ்சகம்பொருமை
கொண்டுழல்வோரெந்நாளும் துன்பத்தாலே
ஆபத்துற்றதினமும் துயரிலாழ்ந்து
அனுபவிப்பார்கஷ்ட நஷ்டங்கள்தன்னை

பாபத்திற்சிக்காமல் நம்பினோரைப்
பரதவிக்கச்செய்யாமல் பெரியோர்வாக்கின்
சாபத்திலகப்படா தெந்தநாளும்
சன்மார்க்கனுயிருந்தால் நன்மையாமே.

(இ-ள்) மனிதவகுப்பார் பூமியில் பிறந்து முன் ஜன்மத்தில் செய்த புண்ணியவசத்தினால் அநேகரை அடிமை கொள்ளும் தலைவனாக அதிகாரஞ் செலுத்தினாலும் தன்னைப்போன்ற மனிதராச்சுதேயென்று காருண்யமில்லாமல் கோபம், குரோதம், வஞ்சகம், லோபம், பொறாமை யென்னும் பஞ்சவிதமாகிய துர்க்குணத்தால் கஷ்டப்படுத்தாமலும் பெரியோர்கள் சாபமேற்காதபடியே நற்குணத்தை வகித்து சன்மார்க்கனாயிருந்தால் சதாகாலம் சுகமாயிருப்பதற்காகும்.

சீஷன் சொல்வது

*எண்சீரடி விருத்தம்*

நன்மையாயெற்தனுக் குபதேசித்த
ஞானகுருவே நவக் கிரகமெல்லாம்
நன்மையாய்மனிதர்கட்கு சுகதுக்கத்தை
தகுந்தபடியேகொடுக்கும் விபரஞ்சொன்னீர்
பன்னிரண்டுராசியிலும் கிரகசேர்க்கைப்
பலனெனக்குவிபரமா யுரைப்பீரென்று
உன்னிரண்டுதிருவடியை பணிந்தேன்சுவாமி
உத்தமரேயெந்தனுக்கு போதிப்பீரே.

(இ-ள்.) குருநாதா! எனது அஞ்ஞான மந்தமதியைப் போக்கி புத்தி கூர்மையாய் விளங்கும்படியான விவேகத்தை யுண்டாகச் செய்த ஞானகுருவே! மனிதர் பாப புண்ணியத்தை யனுபவிப்பதற் கிசைந்து சுக துக்கந் தருவதான இராசிகளாகிய மேஷம், ரிஷபம், மிதுனம், கடகம், சிம்மம், கன்னி, துலாம்

விருச்சிகம், தனுசு, மகரம், கும்பம், மீனமென்னும் பனி ரெண்டு ராசியிலும் கிரகங்கள் சேர்க்கையாக இருக்கும் போது எவ்விதமாக பலன் தருவார்களோ அதனை அடி யேனுக்கு விபரமாய்ச் சொல்வீர் சுவாமி.

### குரு சொல்வது

*எண்சீரடி விருத்தம்*

சொல்லுவேனென் சிஷ்யா கவனமாய்க்கேள்
  ஜோதிஷத்தின் விபரமதை யுந்தனுக்கு
தொல்லுலகிலேபிறந்த ஜாதகர்க்கு
  தோற்றும்பன்னிரண்டுராசி பலனுனக்கு
நல்லவழியாகவே தெரிவிக்கின்றேன்
  நலமுடனேமனதினிலே மதித்துக்கொண்டு
சொல்லுவாய்ஜாதகர்க்குப் பலனைத்தானே
  சொற்சோர்வில்லாமலே கவனித்தோதே.

(இ-ள்.) எனது அன்பான சிஷ்யா! மனிதர்கள் பிறக் கும்போது எந்த நட்சத்திரத்தில் பிறக்கின்றார்களோ அதே இராசியாகும். அந்த நட்சத்திரங்கள் அஸ்வனி, பரணி, கிருத்திகை, ரோகணி, மிருகசீரிடம், திருவாதிரை, புனர்பூசம், பூசம், ஆயில்யம், மகம், பூரம், உத்திரம், அஸ் தம், சித்திரை, சுவாதி, விசாகம், அனுஷம், கேட்டை, மூலம், பூராடம், உத்திராடம், திருவோணம், அவிட்டம், சதையம், பூரட்டாதி, உத்திரட்டாதி, ரேவதி யென்னும் இருபத்தேழு நட்சத்திரங்களில் எந்த நட்சத்திரம் பிறந்த நாளையில் வருகிறதோ அந்த நட்சத்திரத்தின் கணிதத் தின்படியே அமையும் ராசிகளில் கிரகங்களிருக்கும் சேர்க்கையின்படியே பலன் தருவார்கள்.

### சிஷ்யன் சொல்வது

நலமுடனேயிருபத்தேழ் நட்சத்திரங்கள்
  நடக்கின்றராசியிலே பிறந்தபேர்கள்

பலவிதமாய்ச் சுகதுக்க மனுபவிக்கும்
பலனனைத்துமெந்தனுக்கு விபரமாக
உலகமதிலுதித்த ஜாதகர்க்கன்பாக
உற்றபலன் சொல்வதற் கின்பமாயுரைப்பீர்
தலமதிலேயெந்தனுக்கு ஜோதிஷத்தை
தானுரைப்பீர் குருநாதா போற்றிபோற்றி.

(இ-ள்) சுவாமி! மாதந்தோறும் வருகிற இருபத்தேழு நட்சத்திரங்களில் பிறக்கும்போது அந்த நட்சத்திரத்திற்குரிய ராசி பனிரெண்டிலும், கிரக சேர்க்கையானல் பலன் வெவ்வேருகுமென்றீரே? அதன் விவரமெவ் விதமோ அடியேனுக்கு விபரம் விபரமாய்ச் சொல்வீரென்று வேண்டுகிறேன். ஆனல் அவ் விதமே சேர்க்கையாகிற கிரகமிருந்தால் எவ்வெவ் விதமாக பலன் நடக்குமென்று ஜாதகர்க்குச் சொல்வதோ? அதை அடியேனுக்கு அனுக்கிரகம் புரிவீர் சுவாமி

## குரு சொல்வது

சூரியனும்சந்திரனும் குஜன்மால்பொன்னன்
சுக்கிரனுமிவர்களுடனே சேர்ந்திட்ட
காரியுடன்ராகுகேது நவக்கிரகங்கள்
கருதும்பன்னிரண்டுராசி தனிலெங்கேனும்
ஏறினுலவரவர்கள் கொடுப்பதற்கு
ஏற்றபலனுந்தனுக்கு சொல்லுகின்றேன்
பாரிலுன்முன்ஜாதகர்கள் வந்திட்டாலே
பலாபலனைத்தெளிவாகச் சொல்லுவாயே.

(இ-ள்.) எனது அன்புள்ள சிஷ்யா! உலகிலுள்ள மனிதர்கள் பிறந்தபோது நடக்கின்ற நட்சத்திரங்களில் குறிப்பித்த ராசிகளிலிருக்கும் கிரக சேர்க்கையின் பலனைச் சொல்வேன் கவனமாய்க் கேட்பாய்.

## சீஷன் சொல்வது

### எண்சீரடி விருத்தம்

ஐயனேயென்குருவே ஜோதிடத்தை
ஆராய்ந்துபலனுரைக்கும் விஷயமெல்லாம்
மெய்யனேயெந்தனுக்கு விபரமாக
மேன்மையுடன்கற்பித்த ஞானமூர்த்தி
துய்யனேநவக்கிரகமொன் பதுபேராமேனேர்
தொடர்ந்தொவ்வோர்ராசியிலு மிருக்கும்போது
செய்கின்றபலாபலனை அடியேனுக்கு
செப்புவீரென்குருவே பணிந்திட்டேனே.

(இ-ள்.) எனது குருநாதா! மனித வகுப்பார்கள் தமது பிராரத்துவ கர்மானுசார வினையின்படியே சுக துக்கத்தை அனுபவிப்பதற் கிசைந்தவிதமே அவரவர் கள் பிறந்த ஜாதக லக்கின இராசி பலனுக்கிசைந்த பலாபலன் கொடுக்கும் நவக்கிரகங்களின் செயலாகிய ஜோதிஷ சாராம்ஸ பலனை ஆராய்ந்துணர்ந்து பலன் சொல்லும் மார்க்கமெல்லாம் அடியேனுக்கு உபதேசித்த ஞான மூர்த்தியாகிய குருநாதா! தாங்கள் இன்னமும் அடியேனுக்கு அனுக்கிரகஞ் செய்யவேண்டுவது: நவக் கிரகங்கள் எந்தெந்த ராசியில் எவ்வெவ் விதமாய்ச் சேர்ந் திருக்கின்றார்களோ அச்சமயம் அந்த கிரகங்கள் கொடுக் கும் பலாபலனை விபரமாய்ச் சொன்னால் கவனமாய்க் கற்றுணர்ந்து அடியேன்முன் வந்து கேட்கும் அந்தந்த ஜாதகரின் பலாபலனைச் சொல்லுதற்குத் தமது திருவடி களைப் பணிந்தேன் சுவாமி!

## குரு சொல்வது

### மேஷராசியில் கிரகங்கள் நின்ற பலன்

எண்சீரடி விருத்தம்

குற்றமிலாயென்சிஷ்யா மேஷந்தன்னில்
குஜன் புதனுமதிரவியும் சேர்ந்திருந்தால்
நற்றமிழாராய்ச்சியுடன் பலநூல்கற்று
ஞாலத்தில்வர்த்தகமும் உத்தியோகஞ்செய்து
சுற்றத்தாரெவர்களுமே புகழ்ந்துரைக்கச்
சொர்னபணிபூஷணமும் பொருளுந்தேடி
பற்றுதலாய் பந்துமித்திரரோடன்பாய்
பாருலகில்வாழ்ந்திருப்பா ரறிகுவீரே.

(இ-ள்.) மேஷராயில் செவ்வாயும், புதனும், சூரியனும் சேர்ந்திருந்தால், அந்த மேஷராசியே ஜனனலக்னமாயிருந்தால் அந்த ஜாதகன் தமிழ்வித்தையில் வல்லவனுகி பலவித சாஸ்திர ஆராய்ச்சியிலுந் தேறி புத்தி சாதுர்யமாய் உத்தியோகஞ் செய்தும் வர்த்தகம் செய்தும் பலவிதமாய்ப் பொருள் சேகரஞ்செய்து கீர்த்திப் பிரகாசமாய் பொன்பொருள் பூஸ்திதியுடன் பந்துமித்திரர் சூழ பெரிய குடும்பஸ்தனுய் தனந்தான்யம் பசு புத்ர லாபத்துடன் சுகஜீவியாய் வாழ்ந்திருப்பதற்காகும்.

சனிராகுகுருசுக்ரன் மேஷத்துற்ருல்
சார்ந்தலக்கின மேஷமாயிருக்குமாருல்
பணிமொழியாள் சேர்க்கையுண்டுகாணிபூமி
பாக்கியமும் வெகுசம்பத்தெய்தும்ஆனுல்
தினகரனும்குஜ புதனுமேஷத்துற்று
திங்களுமே சேர்ந்திருக்கதீரமாக
கனதனமும்காணிநிலம் மிகவேபெற்றுக்
காசினியில்தனவானுய் வாழ்குவானே.

(இ-ள்.) சனிபகவானும், ராகு குருவும், சுக்ர பகவானும் மேஷராசியிலிருந்தால் பெண்களுக்கு இனியவனாயிருப்பதுடன் வேசி நேசனும் சகலரும் தீரவானென்று புகழ்ந்துரைக்கும்படியாயிருப்பான். ஆனால், சூரியன் உச்சனாகவும், செவ்வாய் ஆட்சியாகவும் அந்த மேஷராசியிலிருக்க புதனும், சந்திரனும் அந்த ராசியிலிருந்தால் பலவிதமான வியாபாரஞ்செய்து திரவியஞ்சேகரித்து, காணிபூமி, வீடுகளை வாங்கிக்கொண்டு காண்போர் பிரபுவென்றுரைக்குந் தன்மையான கீர்த்திவானாய் வாழ்ந்துகொண்டிருப்பதற்காகும். ஆனால், ஜாதகரின் திசாபுத்தியையும் ஆராய்ந்துணர்ந்து பலன் சொல்லவேண்டும்.

காரியுடன்பருதிமதி மேஷத்துற்று
காணுமந்தராசியிலே ராகுசேர்ந்தால்
வீரியமாய்ஒவ்வொன்றும் நினைத்திட்டாலும்
விதிவசத்தாலநேக தடைசேர்ந்துநஷ்டம்
பாரிலேயனுபவிப் பார் பலனேயில்லை
பந்துஜனக்கூட்டமெல்லாம் பகையாவார்கள்
காரியங்கைக்கூடாமல் திகைத்துநிற்பார்
கவனித்துஜாதகர்க்குப் பலன்சொல்வாயே.

(இ-ள்.) சனியும், சூரிய சந்திரனும் மேஷராசியிலிருக்கும்போது அவர்களுடனே இராகுபகவானும் சேர்ந்திருந்தால் எந்தக் காரியத்தைச் செய்ய நினைத்தாலும் நிறைவேறாமல் தடைபட்டுத் தனது விதியை நினைந்து எப்போதும் விசனிப்பார்கள் தனது முயற்சியினால் நடத்தும் காரிய விக்னமாகின்றதே யென்று மனங்கலங்கி துயருற்றும் விசனிப்பார்கள்.

## ரிஷப ராசியில் கிரகங்கள் நின்ற பலன்

சுக்கிரனும்சனிமதியும் ரிஷபத்துற்ருல்
சுகமாகபொருள்தேடி வாழ்ந்திருப்பார்
தக்கபடிகுருசேய்மால் கூடிநின்ருல்
தனந்தான்யசம்பத்து மிகவேபெற்று
சிக்கனமாய்சுற்றத்தார் மெச்சவாழ்வார்
சித்தமதிலணுவேனும் விசனமின்றி
மிக்கவேகவுரமும் பெருமைவாய்ந்து
மேதினியில்ஜீவிப்பார் கவனிப்பாயே.

(இ-ள்.) சுக்கிர பகவானும், சனி பகவானும், சந்திர பகவானும் ரிஷபராசியிலிருந்தால் பலவிதத்திலும், திரவிய சேகரஞ்செய்து சுகஜீவியாய் வாழ்ந்திருப்பார்கள். அந்த ரிஷபராசியில் குருபகவானும், செவ்வாய் பகவானும், புதபகவானும் சேர்ந்திருந்தால் தனதான்ய சம்பத்துடன் சுற்றத்தார் மெச்சுந்தன்மையாக மனதில் விசனமில்லாமல் வாழ்ந்திருப்பார்கள்.

கதிர்சனியும்குஜராகு ரிஷபத்துற்று
காணுரவிமந்தனுடன் கேதுற்ருலும்
அதிகநஷ்டமாகவே உலகில் நாளும்
அலைச்சலுற்றுவெகுநாட்கள்பிழைத்திருந்தும்
நிதியில்லாஏழையைப்போல் தனமில்லாமல்
நீணிலத்திலிருப்பார்கள் வறுமையாலே
எதுவுந்தோன்ருமனதில் கவலையாலே
ஏக்கமுற்றுவிசனமா யிருப்பார்தானே.

(இ-ள்.) சூரிய பகவானும், சனிபகவானும் செவ்வாய் பகவானும் இராகுபகவானும் ரிஷப ராசியிலிருந்தாலும் அல்லது சூரியன் சனியுடன் கேதுபகவானும் சேர்ந்து ரிஷபராசியிலிருந்தாலும், ஆயுள் நீடித்து அநேக நாள்

ரையிலும் பூலோகத்தில் பூர்ணபுசா யிருந்தாலும் பல தமான எண்ணத்தினுல் ஒவ்வொன்றையும் நினைத்துக் கொண்டு பலவிதமான எண்ணத்தினுல் எதனையும் நிறைவேற்ருமல் மன சஞ்சலத்துடனே ஏழையா யிருப் பார்கள்.

## மிதுனராசியில் கிரகங்கள் நின்ற பலன்

மிதுனத்தில்புதன் ஆட்சியாயிருக்க
மேன்மையாய்குருசெவ்வாய் கூடிநிற்க
புதுமையாய்வியாபாரஞ் செய்துநல்ல
பூஷணமும்அணிபணியும் அலங்கரித்து
நிதிமிகுந்த தனவந்தரென்றேயிந்த
நீணிலத்தில்கீர்த்தியாய் விளங்கிநாளும்
அதிகசம்பத்தாயிருப்பார் அவனிமீது
ஆராய்ந்துபலன்சொல்வீர் ஜாதகர்க்கே.

(இ-ள்.) மிதுனராசியில் புதபகவான் ஆட்சியாயிருக்க அவருடனே குருபகவானும், செவ்வாய் பகவானும் சேர்ந் திருந்தால் நூதன வியாபாரஞ் செய்து அதிக லாபத் துடனே பலவிதமாய் திரவியசேகரஞ்செய்து ஆடை ஆப ரண அலங்காரத்துடன் மகா தனவந்தரென காண்போர் புகழும் தன்மையாய் வாழ்ந்திருப்பார்கள். ஆனல் இலக் கின பலனையும் ஜீவஸ்தானுதிபதி நின்ற பலனையும் ஆராய்ந்து பலன் சொல்வீர் சோதிட வல்லோர்களே.

சனிராகுசூரியனும் சுக்கிரனுமாக
சார்ந்துமிதுனத்திருந்தால் வறுமையாலே
தனமில்லாதேழையாய் பரிதவித்தும்
தரணியிலேபலராலும் பழிக்கப்பெற்று
முனிவுடனேபாஷிக்கும் வார்த்தையாலும்
மூர்க்கமுடனேயெவர்க்கும் பகைநேரகி

கனதுயரமனுபவிப்பா ருலகமீது
காசினியின்மாந்தர்களே கவனிப்பீரே.

(இ-ள்.) மிதுனராசியில், சனிபகவானும் சூரியபகவானும், சுக்கிரபகவானு மிருந்தால் பலபேரால் பழிக்கப்பெற்று தனது வார்த்தையாலும் துர்க்குணத்தினலும் சகலருக்கும் பகையாகி பல பேரால் பழிக்கப் பெற்றுக் கலங்குவார்கள். வறுமையும், துன்பமு மதிகரித்து துன்புறச் செய்யும். உலகத்தோரெல்லாம் பொல்லாதவரென்பதாய் மதியீனரா யலேவார்கள்.

### கடக ராசியில் கிரகங்கள் நின்ற பலன்

சந்திரனும்புதன்குருவும் கடகந்தன்னில்
சார்ந்துநின்ருல்வித்யாபி விர்த்தியாலே
இந்திரனைப்போலெவரும் மெச்சவாழ்ந்து
இன்பமுடன்பலவிதமாய் பொருளைச்சேர்த்து
மைந்தர்மனைவியும் சுற்றம்பெருகிவாழ்ந்து
மாநிலத்தில்வெகு கீர்த்தியாயிருப்பார்
சந்ததமும்காருண்ய மாயிருந்து
தரணியிலேகீர்த்தியுட னிருப்பர்தானே.

(இ-ள்) கடகராசியில் சந்திரன் ஆட்சியாகவும், குரு உச்சமாகவும், புதன் நட்பாகவு மிருக்கும்போது பிறந்த ஜாதகன் வித்யாபிவிர்த்தியுடன் வெகு புத்தி சாதுர்யமாய் கௌரவமான இராஜாங்க உத்தியோகஞ் செய்தும் பெருமையான வியாபாரம் செய்தும் வெகு பொருள் சேகரித்து பூலோக இந்திரனைப்போல் பெருமையாக மனைவி மைந்தர் சுற்றத்தாருடனே காருண்யமான மனதமைந்து கீர்த்திவந்தரா யிருப்பார்கள்.

சனிசூரியன் செவ்வாயும் சுக்கிரனுமாக
சார்ந்துகடகத்துற்றால் ஜாதகர்க்கு
முனிவோடுதுர்க்குணங்கள் மிகவுண்டாகி
மூதறிஞர்துஷ்டனென்றே கூறுவார்கள்
பனிமொழிமாதர்கள்மைந்தர் பகைஞராகி
பாரிலுள்ளோர்பழித்திடவே கலங்கிவாடி
இனியெவ்வாருலகத்தில் பிழைப்பதென்று
ஏங்கியேபரதவிப்பா ரறிதவீரே.

(இ-ள்.) சனிபகவானும், சூரியபகவானும், செவ்வாய் பகவானும் கடகராசியி லிருந்தால் முன் கோபமும், மூர்க்க குணமும் பொருந்தி பெரியோர்களால் நிந்திக்கப் பெற்றுச் சகலருக்கும் பகையா யிருந்து சதா சஞ்சலமாய் மனைவி மைந்தர்களாலும் நிந்திக்கப்பட்டு காலமெல்லாம் கவலை யடைந்து கஷ்டப்படுவார்கள். அதனால் சகலருக்கும் பகையாகி ஜீவிப்பதற்கு வழியில்லாமல் கஷ்டப்படுவார்கள்.

அன்புடனே கடகத்தில் குருவிருக்க
அவருடனேகேது நின்றால் ஞானவானும்
நன்மையுடன்ராகிருந்தால் தனவானாக
நலமுடனேகீர்த்தியாய் வாழ்ந்திருந்து
பொன்பொருளும் அதிகமாய்ச்சேகரித்து
பூலோகத்தோர்மெச்சும் ராஜயோகம்
இன்பமாயனுபவித்து தனவானாக
இருப்பார்கள்பூமியிலே கவனிப்பீரே.

(இ-ள்) கடகராசியில் குரு உச்சமா யிருக்கும்போது அவருடனே கேதுபகவா னிருந்தால் ஞானமும் கீர்த்தியும் பெற்று வித்தையிற் சிறந்த ஆசிரியனா யிருப்பார்கள். ஆனால் குருவும் இராகு பகவானும் கடகராசியி லிருந்தால் பலவிதமாய் திரவிய சேகரஞ்செய்து தனதான்ய சம்பத்

துடன் உலகத்தார் மெச்சுந் தன்மையான கீர்த்தியுட னிருப்பார்கள். சதாகாலமும் ஆஸ்தி பூஸ்திதியுடன் இராஜ யோகத்தை யனுபவித்துக் கொண்டிருப்பதற் காகும்.

### கடகராசியில் கிரகங்கள் நின்ற பலன்

சந்திரனும்புதபகவான் கடகத்துற்ருல்
சந்ததமும்தனவந்தராய் விளங்கி
சிந்தைமகிழ்ந்தானந்தமா யிருந்து
சிறுமையிலாபெருமையுடன் மனைவிசுற்றம்
மைந்தருடன்பெருமையாய் வாழ்ந்திருந்து
மாநிலத்தில்கீர்த்தியா யிருப்பாரென்று
வந்துஜாதகபலனைக் கேட்போருக்கு
வழுத்துவாயென் சிஷ்யாவிபரமாக.

(இ-ள்.) எனது அன்பான சிஷ்யா! கடகராசியில் சந்திரன் ஆட்சியா யிருக்கும்போது புதபகவானும் அவ ருடனே சேர்ந்திருந்தால் சதா காலமும் விசனமின்றி மன மகிழ்வாகவே தனவந்தரா யிருந்து மனைவி மைந்தர் சுற் றத்தாருடனே விசனமில்லாமல் பெருமையாக வாழ்ந் திருப்பார்கள். ஆனால் ஜனன ஜாதக கணிதத்தின் படியே திசாபுத்தி அந்தர பலனையும் ஆராய்ச்சி செய்து மற்ற கிரகங்களிருக்கும் ஸ்தான பலனையும் கவனித் துணர்ந்து ஜாதகங் கேட்க வந்தவர்களுக்கு பலாபலனை விபரமாய்ச் சொல்லவும்.

### சிம்மராசியில் கிரகங்கள் நின்ற பலன்

சிம்மராசியில்குருவும் செவ்வாய்சேர்ந்து
தினகரனும்மால்கூடி யிருப்பாராகில்
மங்காததிரவியலா பத்தைப்பெற்று
மாநிலத்தில் கீர்த்தியுடனிருந்துவாழ்ந்து

எங்கெங்கும்பெருமையுடன் பேரெடுத்து
ஈன்றமைந்தர்மனைவி பந்துமித்ரரோடு
மங்களமாய் வாழ்ந்திருப்பாரென்றேசொல்வாய்
மதிமிகுந்தஜோதிடரே விபரமாக.

(இ-ள்.) சிம்மராசியிலிருக்கும் குரு பகவானுடனும், செவ்வாய் பகவானுடனும் சூரியனும் புதனும் சேர்ந்திருந்தால் சதாகாலமும் குறையாத திரவிய சம்பத்துடனும் கீர்த்திப்பிரகாசமாய் வாழ்ந்திருந்து சகலரும் புகழ்ந்துரைக்கும்படியான பெருமையாய் ஜீவித்திருப்பதுடன் மனைவி மைந்தர் சுற்றத்தாருடனே மனமகிழ்வாய் வாழ்ந்திருப்பார்கள்.

சனிராகுசுக்கிரனும் சிம்மம்தன்னில்
சார்ந்திருக்கும்போதுரவி சேர்ந்திட்டாலே
முனிவாகஜாதகர்கள் பலபேருக்கு
முனைந்தபகை யதிகரிக்கும்படியாய்பேசி
கனிவில்லாதுஷ்டனென பலபேரேச
காசினியிலே துயரமெய்துவார்கள்
இனிதாகஜனன ஜாதகத்தைப்பார்த்து
இன்பமுடனுரைத்திடுவா யுலகத்தோர்க்கே.

(இ-ள்.) சிம்மராசியில் சனி, ராகு, சுக்கிரன், சூரியனும் சேர்ந்திருந்தால் சதாகாலமும் பலவிதமாகிய எண்ணங்களும், தன்னைப் பலபேர் பொல்லாதவனென்றிகழ்ந்து பேசும்படியான கோபத்தை விளைவிக்கும்படியாய்ப் பேசுவார்கள். சதாகாலமும் சண்டை சச்சரவினாலும் மன வியாகூலத்தினாலு மதிமயங்கி திகிலடைந்து வறுமையாளராயிருப்பார்கள். ஆகையினால் ஜனன ஜாதகத்தின் இலக்கின பலனையும் கிரகங்கள் நின்ற ஸ்தான பலனையும் ஆராய்ந்து பலாபலனை விபரமாய்ச் சொல்வீர்கள்.

சந்திரனும்புதன் குருவும் சிம்மம்தன்னில்
சார்ந்திருக்கும்போதுலகினில் ஜனித்தபேர்க்கு
சிந்தைமிகமகிழ்வாகும் ரவியும்சேர்ந்தால்
சிறப்புடனே தனவந்தராயிருந்து
மைந்தர்பாக்கியம் பெற்று மனைவிசுற்றம்
மகிழ்ந்திருக்க நன்மனதாய்வாழ்வாரப்பா
இந்தவிதமாகி சுகமமைந்திருந்தால்
இவர்களையே சுகவானென்றுரைதலாமே.

(இ-ள்.) சிம்மராசியில் சந்திரனும் புதனுமிருக்கும் போது பிறந்த ஜாதகர் சதாகாலமும் மனமகிழ்வாகயிருப்பதற்காகும். இவர்களுடனே சூரிய பகவானும் சிம்மராசியில் ஆட்சியா யிருந்தால் பலவிதத்திலும் திரவிய சேகரஞ் செய்து வெகு மேன்மையுடன் சகலரும் மெச்சிக் கொள்ளுந் தன்மையாய் தனந்தான்ய சம்பத்துடனே மனைவி மைந்தர்களுடனே சுகஜீவியாய் வாழ்ந்திருப்பார்கள்.

## கன்னியாராசியில் கிரகங்கள் நின்ற பலன்

கன்னியிலேபுதன்சூரியன் மதியும்சேர்ந்தால்
காசினியில் தனவந்தராயிருந்து
பொன்பொருளும் சேகரிப்பார்வர்த்தகத்தால்
பெருமையுடன்காசுபணம் செலவழிப்பார்
அன்புடனேமித்திரர்கள் வெகுபேர்சேர்ந்து
ஆனமட்டும்செலவுசெய்ய தூண்டுவார்கள்
நன்னயமாய்ஜாதகனும் பெருமையாக
நானிலத்தில் வாழ்ந்திருப்பாரறிகுவீரே.

(இ-ள்.) கன்னியா ராசியிலே புதபகவானும், சூரிய பகவானும், சந்திரபகவானும் சேர்ந்திருக்கும்போது பிறந்த ஜாதகர் தனவந்தரா யிருப்பதுடன் வியாபாரத் தினால் வெகு பொருள் சேகரிப்பார்கள். ஆனால், பணத்

தைப் பலவிதமாய்ச் செலவு செய்யும் சிநேகிதர் கூடி கௌரவப்படுத்துவார்கள்.

சனிசுக்ரன் குருபகவான் மூன்று பேரும்
சார்ந்துகன்னிராசியிலே இருப்பாராகில்
இனிடனே எவர்க ளிடம்பேசினலும்
இணங்காமல் நிஷ்டூரமாகப்பேசி
முனிவுடனே நிந்தித்துபகைவராகி
முன்கோபத்தாலெவரும் சினங்கொள்வார்கள்
வனிதையர்களிணங்காமல் வறுமையாலே
வையகத்தோர்பழிப்பார்கள் கவனிப்பீரே.

(இ-ள்.) கன்னியாராசியிலே சனிபகவானும், சுக்கிர பகவானும், குரு பகவானு மிருந்தால் அந்த ஜாதகர் எவர்களிடத்திலும் இதமாய்ப் பேசினலும், அவர்களனை வரும் நிஷ்டூரமாய்ப் பேசுவதுடன் கோபமாய் நிந்தித்துப் பகைத்துக்கொண்டு அலட்சியமாய் மதிப்பார்கள். தீராக் கவலையால் ஸ்திரீகளும் வெறுத்துப்பேசுவார்கள். பந்துக் களும் பரிகாசத்துடனே பழித்துப் பேசும்படியான வறு மையாளரா யிருப்பார்கள்.

புதன் கேதுகன்னியா ராசிதன்னில்
பொருந்தியிருந்தால் வித்யாசாலியாக
சதாகாலம் புத்தியுட னிருந் தெப்போதும்
சஞ்சலமில்லாமலே வர்த்தகங்கள் செய்து
நிதிமிகவும்சேர்த்து வெகுதனவானுக
நீணிலத்தில் வாழ்ந்திருப்பார் பெருமையாக
இதமுடனேமனைவிமைந்தர் பந்துமித்ரர்
இன்பமுடனேமகிழ வாழ்குவாரே.

(இ-ள்.) கன்னியாராசியிலே புதபகவானும் கேது பகவானும் சேர்ந்திருந்தால் கல்வியிலும் ஞானத்திலும்

சிறந்தவர்களாய்ச் சிறந்த வெகுபுத்திசாலித்தன்மையாய் விளங்கி வர்த்தகஞ் செய்து வெகு பொருள் சேகரித்து தனவந்தர்களாய் விளங்கி மனைவி மைந்தர்களுடனே பந்துமித்திரர் புகழுந் தன்மையாக வாழ்ந்திருப்பதற் காகும்.

## துலா ராசியில் கிரகங்கள் நின்ற பலன்

சுக்கிரனும் ஆக்ஷியாய் சனி உச்சமாகி
துலாராசிதனிலிருக்க புதனும்சேர்ந்தால்
மிக்கவேதனதான்ய சம்பத்தோடு
மேன்மையாய் வியாபாரவிர்த்தியாகி
பக்குவமாய்ப்பணஞ்சேர்த்து அவனியோர்முன்
பக்ஷமுடன்நேசித்து வாழ்ந்திருப்பார்
தக்கபடிமனைவிமைந்தர் சுற்றத்தோடு
தரணியிலேவாழ்ந்திருப்பா ரறிகுவீரே.

(இ-ள்.) துலாராசியில் சுக்கிரன் ஆட்சியாகவும், சனி பகவான் உச்சமாகவு மிருக்கும்போது அவர்களுடனே புதன் சேர்ந்திருந்தால் தனதான்ய சம்பத்தோடு மேன்மையான வியாபாரஞ் செய்து வெகு திரவியஞ் சேகரித்து உலகத்தார் புகழ்ந்து பேசும்படியான கௌரவ மாய் மனைவி மைந்தர் சுற்றத்தாரோடு வெகு மேன்மை யாக வாழ்ந்திருப்பார்கள்.

பருதிமதிராகுகுஜன் துலாவில்நிற்க
பாருலகில்பிறந்த ஜாதகர்க்கெந்நாளும்
சிறுமையுடன்பலதொல்லை வறுமையோடு
சினமுடனேகுரோததுன்பம் மிகவுண்டாகி
அருமையாய்விளங்கிய பந்துக்களெல்லாம்
அனுதினமும்கலகங்கள் செய்தெப்போதும்
கருதொண்ணுகொடுமைசெய்ய பரதவித்துக்
காசினியிலலைவார்கள் கவனிப்பாயே.

(இ–ள்.) சூரியனும், சந்திரனும், ராகு பகவானும் செவ்வாய்பகவானும் துலாராசியி லிருக்கும்போது பிறந்த ஜாதகர்க்கு சதாகாலமும் துன்பமும் துயரமும் கவலையும் வறுமையும் சூழ்ந்து கஷ்டப்படச் செய்யும். மனதில் கோபமும் குரோதமும் பெருகி சகலரையும் பகைத்துக் கொள்ளுந் தன்மையான துர்க்குணத்தினரா யலைந்து வறுமையாளராய்ப் பகைவர்கள்செய்யும் கொடுமையினால் பரிதவிப்பதுடன் உலகத்தில் பலவித கஷ்டநஷ்ட மடைவதற்காகும்.

## விருச்சிக ராசியில் கிரகங்கள் நின்ற பலன்

குருசெவ்வாய் சூரியனும்புதனுமாக
கூடியேவிருச்சிகத்தி லிருப்பாராகில்
பொருளுடனேபூஷணமும் பொன்பணிகளெல்லாம்
பொருந்தியே மிகமகிழவாழ்ந்திருப்பார்
பெருமையுடன்மனைவி மைந்தர்சுற்றத்தோடு
பேருலகில்வாழ்ந்திருப்பா ருலகிலென்று
அருமையுடன்ஜோதிடநூ லாராய்ந்தன்பாய்
அவனியோர்முன் விபரமாய்ச்சொல்வீரே.

(இ–ள்.) விருச்சிகராசியில் குருபகவானும் செவ்வாய் பகவானும் சூரியபகவானும் புதபகவானு மிருந்தால் வெகு தனவந்தனாக விளங்கி பொன் பணிபூஷணாலங் கிர்தமும் பொருந்தியவனாய் மனைவி மைந்தர்களுடனே வெகு மேன்மையாய் வாழ்ந்திருப்பதற்காகும். ஆனால், திசாபுத்தி அந்தரபலனையும் ஆராய்ந்து பலன் சொல் வீர்கள்.

பருதிமதிசனி சுக்ரன் விருச்சிகத்தில்
பாம்புடனேசேர்ந்துநின்றால் ஜாதகர்க்கு
கருதுமதியில்லாமல் புத்திகெட்டு
காண்போரெல்லாம் பகைஞராய்விளங்கி
பெருமையிலாதுயருற்றுக் கலங்குவார்கள்
பேருலகில்வறுமையினு லேழையாக
இருப்பாரென்றேபுகல்வீர் ஜோதிடவல்லோரே
இனிதுடனேஜாதகர்க்கு பலனைத்தானே.

(இ-ள்.) விருச்சிக ராசியில் சூரியபகவானும், சந்திர பகவானும், சனிபகவானும், சுக்கிரபகவானும் சேர்ந்திருந் தால் அவர்களுடனே இராகுபகவானு மிருந்தால், ஜாத கர்க்கு மனோகர்வமும் குரோத குணமு முண்டாகி சகல ருக்கும் பகைவரைப் போலாக யாதொன்றும் கவனியாமல் பேசுவதுடன் சகலருக்கும் விரோதமா யிருந்து வறுமை யினால் கலங்குவார்கள்.

குரு சிஷ்ய சம்பாஷணையாகிய
சோதிட அரிச்சுவடி நான்காம் பாகம்
முற்றிற்று.

---

திருமகள் அச்சகம், சென்னை—1. 1977